முருகன் துணை.

நாற்பத்தியெண்மர்கவிண்டிய

ஊர்வசி

# வயித்திய சிட்கா

---

## இரண்டு பாகமும் அடங்கியது.

---

செழுமணவை

நல்லண்ண பரதேசியாரவர்கள்

மருகரும், மாணாக்கருமாகிய

சிறுமணவூர்

## முனுசாமி முதலியாரவர்களால்

பன்னூற்கிணங்க இன்னூல் இயற்றப்பட்டது.



இட்டர்

**பார்த்தசாரதி நாயுடு சன்ஸ்**

சக்கரவர்த்தி பிரஸ்

நெ. 189, தங்கசாலை வீதி, சென்னை.

ரிஜிஸ்டர் காபிரைட்] 1953 [ரூபா. 2

உ

கடவுள் துணை.

மகாமகுத்துவம் பொருந்தியுள

நாற்பத்தியெண்மர்களீண்டிய

# ஊர்வசி வயித்திய சிட்கா



## முதற் பாகம்.

## பாயிரம்

---

### ஊர்வசி வாக்கு

அண்டரண்டம்புரந்து நின்ற ஆதிகாப்பு
ஆதாரமாரான ஜோதிகாப்பு
மண்டலத்தை யுண்டளித்த மாயோன்காப்பு
மண்பிசையுங் குயவன் மலர்த்தாளே காப்பு
பண்டுபுகச்சீர் தர்ம தெய்வங் காப்பு
பாரதியினிரு பாதபதமங் காப்பு
எண்டிஸசுபாந்திக்குடைய தேவர் காப்பு
இந்திரனூர்பாதமல ரென்று காப்பே. 1

காப்பாகுங்கணபதியுஞ் சித்திமுத்தி
கந்தனொடு தெய்வானைக் குறமின்னாத்தாள்
தாபானசிவகாமி சிறுபெண்வாலை
தயிரியஞ்சேர் லட்சுமியோ டிளையமாது

உ

கடவுள் துணை.

மகாமகுத்துவம் பொருந்தியுள

நாற்பத்தியெண்மர்களீண்டிய

# ஊர்வசி வயித்திய சிட்கா



## முதற் பாகம்.

## பாயிரம்

---

### ஊர்வசி வாக்கு

அண்டரண்டம்புரந்து நின்ற ஆதிகாப்பு
ஆதாரமாரான ஜோதிகாப்பு
மண்டலத்தை யுண்டளித்த மாயோன்காப்பு
மண்பிசையுங் குயவன் மலர்த்தாளே காப்பு
பண்டுபுகச்சீர் தர்ம தெய்வங் காப்பு
பாரதியினிரு பாதபதமங் காப்பு
எண்டிஸசுபாந்திக்குடைய தேவர் காப்பு
இந்திரனூர்பாதமல ரென்று காப்பே. 1

காப்பாகுங்கணபதியுஞ் சித்திமுத்தி
கந்தனொடு தெய்வானைக் குறமின்னுத்தாள்
தாபானசிவகாமி சிறுபெண்வாலை
தயிரியஞ்சேர் லட்சுமியோ டிளையமாது

மூப்பானவயிரவரும் வீரபத்திரா
 மும்மூர்த்தியானவர்க்கும் முறையேபோற்றி
ஆர்ப்பானஇந்திராணிகேள் வன்முன்னே
 அபிநயிக்கும்ஊர்வசியா னுறையக்கேளே.

வசிமென்றேவானவர்கள் நித்தம்சூழும்
 வாயிரங்கண்ணிந்திரனார் சபையிலேதான்
இசைகொடியில்மிக்கவளா யிருந்தயானும்
 யேழைமதித்தன்னாலே சாவிலோர்நாள்
சதியின்றிவனமேகும் புரூரவன்றன்னை
 சருவினதாவென்பிழையை சகித்தார்முந்த
பசியின்றி சுரர்கோனைத் திரும்பயானும்
 பாதயிசைதன்னாலே பணிந்துவாழ்ந்தேன். 3

தேன்சொரியும் அத்திபுரிக்காவிலன்று
 திங்கணிகர்புனலாடத் தேர்ந்தகாலை
வான்புகழுஞ்சந்திர குலத்திலகனை
 வணங்கணிகர்சந்தணனை வனத்திற்கண்டு
நான்புணர்ந்தகுற்றமதால் யோனிக்கண்ணன்
 நளிவகலச்சிரகதனை நருக்கச்செய்தான்
கான்சுரந்தவாறதுபோற் றுயரங்கண்டு
 கருணைவளர்ச்சித்தரெனைக் காத்திட்டாரே. 4

காத்திட்டகாலாங்கி கலசநாதர்
 காலமுனியூகமுனி கருணாநந்தர்
பார்த்திட்டபோகமுனி சட்டைநாதர்
 பதஞ்சலியார்கோரக்கர் பவனந்திசர்
சேர்த்திட்டபுலிப்பாணி யழுகண்சித்தர்
 ஜெகம்புகழும்பாம்பாட்டி யிடைக்காட்டீசர்
பேர்த்திட்டவசிஷ்டரொடு கவுசிகத்தோர்
 பிரம்முனியாகயின்னம் பெரியோர்தானே. 5

காணாவேதகுரு வியாசரோடு
தன்வந்திரிசட்டைமுனி புண்ணாக்கீசர்
கோணாநந்தீசர் அகப்பைச்சித்தர்
கொங்கணவர்குருபாத நாதர்மச்சர்
தேனாபரத்துவாசர் கூனக்கண்ணர்
தெளிவருளும்கடுவெளியாம் சித்தர்முத்தர்
பாணாரோமரிஷி புஜண்டரோடு
பாராசரமாரிஷியிவரைப் பணிந்தேனையா. 6

ஐயமற்றதேரையர் புலத்தியீசர்
அந்தமுளசுந்தரானந்த சித்தர்
செய்யறைத்திருமூலர் கருவூர்நாதா
சிவவாக்கியரோடு தொழுகண்சித்தர்
துய்யமனநவநாதர் வசுக்களானோர்
தூர்வாசரான சத்தரிஷிகள்மாரை
பையனவேயான்பணிந்த யிதக்கங்கண்டு
பகரரியவெகுநூலை பாலித்தாறே. 7

தாரிலுயர்மனுக்களிட பிறப்பிறப்பை
தான்பேசிவிண்டயனுந் தற்கமிட்டு
பேரிலுயர்தரம்தாமே பெரியோரென்று
பூமிமிசைபலபிணியைப் பரவவிட்டு
சீரிலுயாநான்குசத நான்குநூற்றி
நாற்பத்தியெட்டெனவே விகற்பமாகி
சீரகலவிட்டகுறை வருமைநீங்க
சித்தரெனக்குபதேசம் செய்தவாரே. 8

வாராகப்பதினெண்மரான வானோர்
வனுக்கிரகம்செய்தபடி வணங்கிக்கேட்டு
சீராகசிலதுமுறை யுபயோகித்து
சிந்தாயல்நடைவழியாய்ச் சிரக்கச்செய்து

தோமல்பலபேரும் செய்துக்கொள்ள
 தொந்தறையொன்றில்லாமல் திரைகணீக்கி
நோகஉலகமுழு தென்பேரோங்க
 நிகழ்த்தினேன்ஊர்வசிநூல் சிட்காவாமே.

ஆமேதான்மாத்திரைகள் சிந்தூரங்கள்
 அடைவானபற்பமுதர் கற்கமெண்ணை
தாமேதான்லேகியங்கள் கிருதங்கட்டு
 தனித்தனியேவகைபிரித்துத் தண்மையாக
பூமேதான்சிறுமணவூர் தன்னில்மேவும்
 புலவன்முனுசாமியின் கூர்புத்திகொண்டு
பாமேதான்பிருகாண்ட மாகச்செய்து
 பதிப்பித்தோமிதுமுதலாங் காண்டமாமே.

ஊர்வசி வயித்திய சிட்காவின்

பாயிரம் முற்றுற்று.

---



உ

முருகன் துணை.

மகாமகுத்துவம் பொருந்திய

நாற்பத்தியெண்மர்களீண்டிய

# ஊர்வசி வயித்திய சிட்கா

(முதற் பாகம்.)

| | | |
|---|---|---|
| புதன் | சுக்கிரன் | சந்திர |
| குரு | சூரியன் | செவ்வா |
| கேது | சனி | ராகு |

## மானிடமாகிய நமது சரீரத்திடமாயுள்ள அவயவங்களில் கிரகங்கள் நிற்கிறயிடமாவன.

தலையாகிய - கபாலம் அங்காரகனென்னும் செவ்வாய்க் குரியயிடம், முகம் சுக்கிரனுடையயிடம், கழுத்து புதனுக் குரியயிடம், மார்பு சந்திரனுக்குரியயிடம், வயறு சூரியனுக் குரியயிடம், துடை சனிக்குரியயிடம், கால்கள் ராகுவுக்குரிய யிடம், கேதுவுக்கும் சொல்லத்தகுமாமென்பார்கள்.

## கிரகங்கள் தங்கிய அவையங்களுக்குரிய வியாதி யறியவும்.

தலைக்குரிய அங்காரகனால் தலைநோய் சிரபாரம் மண்டைக்குத்து இவைகளுண்டாகுமாம், முகத்துக்குரிய சுக்ரனால் கண் வியாதிகள் பற்பலவும் உண்டாகுமாம், கழுத்துக்குரிய புதனால் கழலைக்கட்டி, நெஞ்செரிப்பு, கபம் முதலானவையுண்டாம், மார்புக்குரிய சந்திரனால் மார்புநோய், சீதளம் இத்தகை வியாதியுண்டாம், வயற்றுக்குரிய சூரியனால் வயற்றுநோய் நீராம்பல் முதலியவியாதியுண்டாம், அறைக்குரிய குருவினால் மூல வியாதிகள் பலவுண்டாம், துடைக்குரிய சனியினால் கால் முட்க்கு, பீலி, கரும்படைகள் முதலானவையுண்டாம், காலுக்குரிய இராகுவினால் விஷங்கள், முயல்வலி, குரைநோய் சம்பந்த வியாதிகளுண்டாம்.

## முக்கிய குறிப்பு.

மேற்கூறிய கிரகங்கள் தங்கள் தங்களுக்குரிய இராசிகளிலேனும் நட்பு-ஆட்சி-யுச்சமம்-திரிகோணகேந்திர மேறியும் சுபக் கிரகசம்மந்த பார்வை பெற்றேனும் எவ்வித குறைபாடுகளு மில்லாமல் ஜெனன காலத்தில் சமரசப்பட்டிருக்குமாயின் அப்படி ஜெனிப்பவனுக்கே அந்தந்த கிரகத்தின் திசாபுத்தி அந்தரபலன்கள் முற்றிலும் குறைவின்றிகொடுபதன்றி அந்தியமட்டும் திரவிய ஆபரண வஸ்திர போஜன வாகன அதிகார சௌக்கியங்களோடு ஈகை இதக்கம் தயை தான முள்ளவனும் இகபர சௌக்கிய மெய்துவானென்பார்கள்.

அப்படி அல்லாமல் லக்கினாதிபதியானவன் 6 - 8 - 12 இந்ததான மேறியும் அல்லது பகைநீச்சம் பெற்றும் பாபக்கிரக சம்பந்தப்பட்டு மிருக்குங் காலத்தில் ஜெனிப்பானேல் மேற்கூறிய வியாதிகளும் தாரித்திர துன்பங்களும் விஷம் முதலானபைசாச துற்சம்பந்தமான வெறுப்பு முண்டாமென்றறிய.

## கிரகநிலைகளைக்கொண்டு வியாதியறியவும்.

இயாவர்க்கேனும் ஜென்ம வீட்டில் ஜென்மாதிபனுடன் சூரியன் கூடியிருக்கில் எப்பொழுதும் பித்தரோகம் வாதிக்குமென்றறிக.

ஜெனன வீட்டிலும் 7-மடத்திலும் ஜென்மாதியும் இராகு கேதுக்களுடன்கூடியிருக்கில் குட்டநோய் வந்தெய்துமென்றறிக.

ஜென்ம வீட்டிலேனும் எட்டாமிடத்திலேனும் சந்திரனவன் பாபக்கிரகங்களுடன் கூடியிருக்கில் க்ஷயரோகம் வந்தெய்துமென்றறிக.

ஜென்மவீட்டில் குஜனும் புதனும் கூடியிருக்கிலும் இரண்டாமிடத்திலிருக்கினும் சுரரோகம் பீடிக்குமென்றறிக.

ஜென்மாதிபன் நீச்சம் பெற்றிருப்பானேல் பிரமிய ரோகம் வந்தெய்துமென்றறிக.

ஜென்மத்தில் செவ்வாயிருக்க ஜென்மத்தைப் பாபர் பார்த்தாலும் ஜென்மாதிபன் எட்டில் பாபருடன் கூடியிருக்கினும் மூலவியாதி வந்தெய்துமென்றறிக.

ஜென்மத்தில் சனியும் சந்திரனுமிருக்கவும் பாபக்கிரகங்களிருக்கினும் ஆறாமிடத்துக் கிரகம் இரண்டிலிருக்க குன்மரோகம் வந்தெய்துமென்றறிக.

ஜென்மாதிபன் 5-ல் 7-ல் 10-ல் இருக்க ஜென்மத்தில் செவ்வாயிருக்கினும் நல்லோர்பார்வை யில்லாதிருக்கில் அதிசாரரோகம் வந்தெய்துமென்றறிக.

ஜென்மாதிபன் குருவாகவும் மூன்றுமிடத்தில் இராகுவும் அல்லது மூன்றுமதிபனைக் கூடியிருந்தாலும் அண்டவாத ரோகம் வந்தெய்துமென்றறிக.

ஜென்மாதிபதி எட்டாமிடத்திலும் எட்டாமிடத்த பன் ஜென்மத்திலும் சனி சந்திரன் பாபக்கிரகங்களுடன் கூடில் உருவில்லா ரோகம் அதாவது நியமிக்கப்படாத பல பலநோயணுகு மென்றறிக.

ஜென்மாதிபன் குளிகனுடன் கூடியிருக்க சந்திரன் சனி ஆரில் பனிரெண்டிலிருக்க ஆராமிடத்தனும் எட்டாமிடத் தனும்நீச்சம்பெற்றிடில் பல பிணியால் மரணம் வந்தெய்து மென்றறிக.

ஜென்மாதிபனுடனுகிலும்மூன்றுதிபனுடனுயினும்புதன் செவ்வாய் கூடியிருக்கில் நீரிழிவு ரோகமும் நீர் துவாரமும் இரண்டாகுமென்றறிக மேற்படி கிரகங்களுடன் சனி கூடி யிருக்கில் நீர் தாரையில் கல்லடைப்பு ரோகமுண்டாகு மென்றறிக.

ஜென்மாதிபன், செவ்வாய் அல்லது புதனுயிருந்து இவர்கள் மிதுனம் கன்னியிலிருக்க புதன்பார்க்கஆசனத்தில் பலவியாதிகள் அணுகுமென்றறிக.

ஜென்மாதிபனுடன் பாபக்கிரகங்கள்சேர்ந்தாலும் செவ் வாய் சகிதமானலும் பார்த்தாலும் கல்லடியால் மரணம் நேரிடுமென்றறிக.

ஜென்மாதிபனுடன் குளிகன் இராகுகூடி லக்கினத்தில் நின்றாலும் குளிகன் திரிகோணமேறினும் எட்டாமிடத்தில் நிற்கினும் குளிகன நாலாமதிபனுடன் கூடினும் அண்டம் பெருத்துவருமென்றறிக.

ஜென்மாதிபனும் சூரியன் செவ்வாய் புதன் கூடினும் ஆராமிடத்தில் எட்டாமிடத்தில் இருந்தால் செங்குஷ்டம் சம்பவிக்குமென்றறிக.

ஜென்மத்தில் இராகுவும் மூன்றுமிடத்தில் சனியும் யிருக்க அண்டம் பெருத்துவருமென்றறிக.

ஜென்மாதிபனும் ஆராமிடத்ததிபனும் குஜனுடன்கூடி ஜென்மத்திலிருக்கில் அதிசாரபேதி யுண்டாமென்றறிக.

ஜென்மத்தில் சூரியன் செவ்வாய் கூடியிருக்கில் குன்ம வியாதி பெருமூச்சு இவை யுண்டாகுமென்றறிக.

ஜென்மாதிபனுடன் குஜன் கூடியிருக்கையில் பாபக்கிரகங்கள் பார்க்கில் தலையில் கல்லடிகாயம் படுமென்றறிக.

ஜென்மத்தில் சனி-இராகு கூடியிருக்கில் பேய் பிடிப்பதுடன் மாந்திரீக துன்பம்வருமென்றறிக.

ஜென்மத்தில் செவ்வாயிருக்கையில் தீபக்கிரகங்கள் பார்க்கில் அடிவயிற்றில் வலிகாணுமென்றறிக.

ஜென்மாதிபன் ஆராமிடத்ததிபன் இராகு இம்மூவரும் ஒரு வீட்டில் கூடியிருக்கில் அரவங்கடித்து மரணமாமென்றறிக.

ஜென்மாதிபனுடன் இராகு கேது கூடியிருந்தால் காவலிலிருக்கும்போது மரணம் சம்பவிக்குமென்றறிக.

ஜென்மாதிபதி பாவியாயிருந்து சனி சம்பந்தப்பட்டிருப்பானேல் விஷபட்சணஞ்செய்து மரணமாவானென்றறிக.

ஜென்மகேந்திரத்தில் சுக்கிரனும் சந்திரனும் இருக்க பாபக்கிரகங்கள் ஐந்தில் எட்டில்யிருக்க முயல்வலி ரோகம் வந்தெய்துமென்றறிக.

ஜென்ம லக்கினத்தில் பரிவேடம் மூன்றில் எட்டில் குஜனும் திருகோணத்தில் குருவில்லாதிருக்கில் குமாரகண்டவலி வந்தெய்துமென்றறிக.

ஜென்மத்தில் செவ்வாயிருக்க இரண்டில் எட்டில் ஜென்மாதிபன்யிருக்க கேந்திரத்தில் நல்லோரில்லாதிருக்கில் தேக முழுமையும் வியாதி யுண்டாமென்றறிக.

ஜென்மாதிபதி எட்டாமிடத்திலும் எட்டாமிடத்ததிபன் ஜென்மத்திலும் சனி சந்திரன் பாபக்கிரகங்களுடன் கூடில் உருவில்லா ரோகம் அதாவது நியமிக்கப்படாத பற்பலநோயணுகு மென்றறிக.

ஜென்மாதிபன் குளிகனுடன் கூடியிருக்க சந்திரன் சனி ஆறில் பனிரெண்டிலிருக்க ஆராமிடத்தனும் எட்டாமிடத்தனும்நீச்சம்பெற்றிடில் பல பிணியால் மரணம் வந்தெய்துமென்றறிக.

ஜென்மாதிபனுடனாகிலும்மூன்றுதிபனுடனுயினும்புதன் செவ்வாய் கூடியிருக்கில் நீரிழிவு ரோகமும் நீர் துவாரமும் இரண்டாகுமென்றறிக மேற்படி கிரகங்களுடன் சனி கூடியிருக்கில் நீர் தாரையில் கல்லடைப்பு ரோகமுண்டாகுமென்றறிக.

ஜென்மாதிபன், செவ்வாய் அல்லது புதனுயிருந்து இவர்கள் மிதுனம் கன்னியிலிருக்க புதன்பார்க்கஆசனத்தில் பலவியாதிகள் அணுகுமென்றறிக.

ஜென்மாதிபனுடன் பாபக்கிரகங்கள்சேர்ந்தாலும் செவ்வாய் சசிதமானுலும் பார்த்தாலும் கல்லடியால் மரணம் நேரிடுமென்றறிக.

ஜென்மாதிபனுடன் குளிகன் இராகுகூடி லக்கினத்தில் நின்றாலும் குளிகன் திரிகோணமேறினும் எட்டா மிடத்தில் நிற்கினும் குளிகன நாலாமதிபனுடன் கூடினும் அண்டம் பெருத்துவருமென்றறிக.

ஜென்மாதிபனும் சூரியன் செவ்வாய் புதன் கூடினும் ஆராமிடத்தில் எட்டாமிடத்தில் இருந்தால் செங்குஷ்டம் சம்பவிக்குமென்றறிக.

ஜென்மத்தில் இராகுவும் மூன்றுமிடத்தில் சனியும் யிருக்க அண்டம் பெருத்துவருமென்றறிக.

ஜென்மாதிபனும் ஆராமிடத் ததிபனும் குஜனுடன்கூடி ஜென்மத்திலிருக்கில் அதிசாரபேதி யுண்டாமென்றறிக.

ஜென்மத்தில் சூரியன் செவ்வாய் கூடியிருக்கில் குன்ம வியாதி பெருமூச்சு இவை யுண்டாகுமென்றறிக.

ஜென்மாதிபனுடன் குஜன் கூடியிருக்கையில் பாபக்கிர கங்கள் பார்க்கில் தலையில் கல்லடிகாயம் படுமென்றறிக.

ஜென்மத்தில் சனி-இராகு கூடியிருக்கில் பேய் பிடிப்ப துடன் மாந்திரீக துன்பம்வருமென்றறிக.

ஜென்மத்தில் செவ்வாயிருக்கையில் தீபக் கிரகங்கள் பார்க்கில் அடிவயிற்றில் வலிகாணுமென்றறிக.

ஜென்மாதிபன் ஆராமிடத்ததிபன் இராகு இம்மூவரும் ஒரு வீட்டில் கூடியிருக்கில் அரவங்கடித்து மரணமா மென்றறிக.

ஜென்மாதிபனுடன் இராகு கேது கூடியிருந்தால் காவலி லிருக்கும்போது மரணம் சம்பவிக்குமென்றறிக.

ஜென்மாதிபதி பாவியாயிருந்து சனி சம்பந்தப்பட்டி ருப்பானேல் விஷபட்சணஞ்செய்து மரணமாவானென்றறிக.

ஜென்மகேந்திரத்தில் சுக்கிரனும் சந்திரனும் இருக்க பாபக்கிரகங்கள் ஐந்தில் எட்டில்யிருக்க முயல்வலி ரோகம் வந்தெய்துமென்றறிக.

ஜென்ம லக்கினத்தில் பரிவேடம் மூன்றில் எட்டில் குஜனும் திருகோணத்தில் குருவில்லா திருக்கில் குமாரகண்ட வலி வந்தெய்து மென்றறிக.

ஜென்மத்தில் செவ்வாயிருக்க இரண்டில் எட்டில் ஜென் மாதிபன்யிருக்க கேந்திரத்தில் நல்லோரில்லாதிருக்கில் தேக முழுமையும் வியாதி யுண்டாமென்றறிக.

ஜென்மாதிபன் சுசன்-புதன்-இராகு-கேது இவர் ஏக வீட்டில் கூடியிருக்கில் குஷ்டரோக முண்டாமென்றறிக.

ஜென்மாதிபனுடன் சூரியன் அங்காரகன் கூடியிருக்கில் இரத்த குஷ்டம் வந்தெய்துமென்றறிக.

கிரகசஞ்சாரத்தால் உண்டாகும் மற்றைய
ரோகங்களை இரண்டாம் பாகத்தில்
எழுதி யிருக்கின்றோம்.

---

## நாலாயிரத்து நானூற்றி நாற்பத்தெட்டு வியாதிகளேயும் சூட்சத்திலுணரும்படியான

# மணிக்கடை நூல்.

---

வியாதியஸ்தன் அல்லது வியாதிக்குஆரம்பத்திலேனும் அவனுடைய வலது கையின் விரல்களின்மேல் அகங்கையினிடையிலிருக்கும் மணிக்கட்டாகிய திரண்டு வட்டவடிவாயுள்ள முட்டியெலும்புக்குமேல் நான்கு விரற்கடை நீளம் தள்ளி அதற்குமேல் கைகளத்தை ஒரு கயற்றினல் சுற்றளவாயளந்து அந்த நீளத்தை அவன் கைவிரல்களினு லளக்கச் செய்து வியாதியான தொகுப்பறியவும்.

அப்படி அளக்கச்செய்தகயர் அவன்கை விரலாற்றுனே பத்து விரற்கடை யிருந்தால் உடல்வெதுப்பும் வாயினுல் நெஞ்சு கால் கையில் குத்தலுண்டாயிருக்கும் உளையும் வயற்றில் வாயுதிரட்சியும் குன்மமும் உண்டாமென்றறிக புருஷர்களுக்கும் ஸ்ரீகளுக்கும் இவ்வாறே யறியலாமென்பது அனுபோகம்.

ஒன்பதேமுக்கால் விரக்கடை நீளமிருந்தால் அறை யாப்பு பிளவை வரட்சி யிருமலுண்டாகுமென்றறிக.

ஒன்பதரை விரற்கடை நீளமிருந்தால் உடல் வெதும்பி வீக்கமுண்டாம் சூடுண்டாம் விழிகாந்தும் உட்சுரம் மேக முண்டாம் அன்னத்தைத் தள்ளுமென்றறிக.

ஒன்பதேகால் விறற்கடை நீளமிருந்தால் விழிகாந்தும் நீர் கடுத்தும் சிறுத்தும் யிரங்கும் நித்திரைவராது பீனிச முண்டாம்.

ஒன்பது விறற்கடை நீளமிருந்தால் செவி மந்தமாயும் கண் புகைச்சலாயுமிருக்கும் இருதுடையும் அயரும் நடக்க வொட்டாது.

எட்டேமுக்காலுக்கு உடல்காயும் சிலவிஷத்தால் குட்டம்போலுண்டாகும் மூலவாயுவினால் வயிறு பொருமும் கண் காசமும் பீநிசமும் உண்டாம்.

எட்டரைக்கு தேகம் வெதுப்பும் வெட்டை கிரந்தி குஷ்டம் சொரி சூடல்வாதம் தாது நஷ்டமுண்டாமென்றறிக.

எட்டேகாலுக்கு உடல்பொருத்து வலித்துளையும் தலை வரட்சி வலிபீனிசம் வியர்வையும் சில விஷத்தினால் இளைப் பிருமலுண்டாகும்.

எட்டுக்கு மேககாங்கை வயற்றில் மந்தம் பொருமல் வாயுதிரட்சி யுண்டாகும் அன்னத்தைவெறுக்கும் சுகமிராது வேற்றுடம்புபடும்.

ஏழேமுக்காலுக்கு மூலம்யெழும்பி கைகால் காந்தும் தலைபிடிக்கும் மதத்திருக்கும் இரண்டு வருடத்தில் கண்ட மாலையாம் நாட் செல்ல செல்ல நாசியிலிருந்து இரத்த முண்டாம்.

ஏழரைக்கு யெலும்புருக்கி மேகம் வயிற்றுப் பொருமல் கண்ணெரிவு ஆறு நாளில் உடம்பிற் காந்தல் கைகால் சந்து ளைவு விப்பிருதி யுண்டாம்.

ஏழேகாலுக்கு இடுப்பில் வாய்வு குத்து வலிபிடுப்பு சிரசில் பித்தம் கண்வலி பாண்டு சோகை கைகால் காந்தல் அதிக நித்திரையுண்டாம்.

ஏழுக்கு பித்தஞ் சிரசிலேறும் வாயினுல் ரத்தம் விழும் க்ஷயங்காணும் கைகால் காந்தல் சிலந்தியுண்டாம் உஷ்ணமதி கரிக்கும் மலம்தீயும்.

ஆறேமுக்காலுக்கு அண்ட வாய்வு கண்வலி மயக்கம் மூன்று வருடத்தில் நீரடைப்பு கல்லடைப்பு கால்கைகாந்தல் வலியுளையு முகத்தில் வியர்வைவுண்டாம்.

ஆறரைக்கு உடலில்வெதுப்பும் குத்தலுண்டாம் தாகம் அன்னத்துவேஷம் சூடுவாதமுண்டாம்.

ஆறேகாலுக்கு மூலக்கிராணி புளித்த யேப்பம் சத்தி துடைவாழை யுண்டாம் அறைசோறுபோற் கழியும்.

ஆறுக்கு இளைப்புங் கபமுண்டாம் இருபது நாளில் மரணமுண்டாம்.

ஐந்தே முக்காலுக்கும் அதுமுதல் நான்கு விரற்கடை வரையில் தேசத்தில் பலவித பிணிகளுண்டாகி ஜீவன் பிரியும்.

☞ இந்த மணிக்கடைநூல் சாஸ்திரம் அனுபோகத் திற்கிசைந்ததே யென்று புத்திமான்கள் அனைவரும் சிரமேற் கொள்கை.

---

## தெரிந்துசெய்யும் சிலகர்மத்தால் உண்டாகும்

# முக்கிய வியாதிகளின் குறிப்பு.



யாதொரு காரியமின்றி துளிர்கொழுந்து தாபரவர்க்கங்களை கிள்ளியெரிதல்வெட்டல் தரித்தலாலும் நீரிலுள்ள ஜெந்துக்களை ரவியில் போடுவதாலும் நகர்வன ஊர்வனமாகிய ஜெந்துக்களை இடமகலச்செய்வதாலும் பரப்பனவாகிய பட்சி ஜெந்துக்களை கண்ணி உண்டுவில் இவற்றால் கவர்ந்து யிம்சிப்பதாலும் தனதாயுளுக்கு மூத்த மங்கையரை புணர்தலாலும் அளவின்றி விந்துவை யிகழ்தலாலும் ரகசியத்தானத்திலிருக்கும் அதாவது விலக்கு ஸ்திரீகளை இணங்குவதாலும் பொழுதை விளக்கும் சூரியன் முதலாய் நவக்கிரக தேவதைகளின் கியாபகம் மன்றிருப்பதாலும் லாகிரி வஸ்துக்களை மிதமின்றி யருந்துதலாலும் அகால போஜனத்தாலும் பிஞ்சியிற்பழுத்த லொத்த பெரும்போகத்தாலும் சிவயோகி முதலான அருந்தவத்தினர் உள்ளம்வந்த உதாசினம் பேசுவதாலும் ஏமத்தில் தனிவழி செல்வதாலும் ஆன்ம சந்தேக அசக்தியாலும் சுரம்-குளிர் - மயக்கம் - காந்தல் - வாதங்கொழுமை - கட்டி-பிளவை-பவுத்திரம்-மூலம் - கிரந்தி - குட்டம் - சூலை-புத்து-வெள்ளை-அரையாப்பு-கண்ட மாலை - குன்மம்-முடக்கு-நீராம்பல்-ஜெக்கட்டி-காசம்-சுவாசம்-அதிசாரம்-பாண்டு- சோகை-ஈளை-காமாலை- காசி ரோகம் - மகோதரம் - கருமை-செம்மை-வெண்மை-குடமாகிய வியாதிகளுண்டாகி இகத்தில் இன்னுமின்னும் இயற்றும் கர்ம சம்மந்தத்தாற் கிளைரோகங்களுண்டாகிக் கீழ்படுவதுமன்றி பரத்துக்கும் ஆளாகாமற் பாழ்நரகடைவரென்று பதினெண் சித்தருட்கூறிய கண்ம காண்டம் முதலிய பெருநூலில் விவரமாயறியலாமென்றுணர்க.



# நவக்கிரக சம்பந்தமான வியாதிகளும் பதார்த்தங்களும் தெரிந்துக்கொள்ளும்படியான **விவரம்.**



## 1-வது ஞாயிறு என்னும் சூரியசம்பந்த **வியாதிகளும் அவயங்களும்**

சமரசமான சூடு, வரட்சி, பித்தம், ஆன்மசூடு, தலை, தலை மூளை, வலது புயம், மார்பு, இருதயம், நுரையீரல், வாயின் பற்கள், விலாரூபப்புலன்கள், வலதுகண், பித்தத்தையும் உதிரத்தையும் பற்றிய வியாதிகளுமாம்.

(ஷை சூரியசம்பந்த பதார்த்தங்களாவன)

பச்சை-கெம்பு-தங்கம் - இராஜவர்த்திக்கல் - கெந்தகம்-பளிங்கு-கண்ணாடி-சர்க்கரை - கரும்பு - தென்னமரம் - கமுக மரம்-பேரீச்சமரம்-உயர்வையுடைத்தாயுள்ள - அடவிருக்ஷங்கள் உலர்ந்த பிறகு உபயோகப்படும் காய்களையுடைய மரங்கள் கொடி மாதுளம்பழம்-கொடி முந்திரிப்பழம் - நவதானியம்-சீமை அத்திப்பழம்-கோதுமை-வெந்தம்-குதிரை - ஆடு-முதலை-நாகம்-வரிப்புறு-நிலக்கடம்பு-காட்டுத்துளசி - நொச்சில்-சாலன்பிசினி-ஜாதிக்காய்- காட்டாத்தி - சாரப்பருப்பு - ஆமணக்கு-லவுங்கப்பட்டை-பேரரத்தை-ரேவல் சீனி-கிச்சிலிகிழங்கு-தாளிசபத்திரி-குங்குமப்பூ - சதாப்பிலை - சூரத்து-நிலாவிரை-சடாமஞ்சில்- நருவிலிக்காய் - சதகுப்பை - கொட்டாற் சுருங்சி-கற்றாடை-சாம்பிராணி-மருக்கொழுந்தின்விரை மஞ்சள்-அகில்கட்டை-ஏலக்காய்-குசும்பா விரை-நிலவேம்பு-வெள்ளை குங்கிலியம் - வால் மிளகு - கொட்டைக் காந்தை கோவை - வெட்பாலையரிசி - ஈரத்தம்பழம்- இவை முதலியதும் சூரியனுக்கு சம்பந்தப்பட்ட பதார்த்தங்களாம்.

## 2-வது திங்களென்னும் சந்திரன் சம்பந்த வியாதிகளும் அவயவங்களும்.

குளிர்ச்சி ஈரம், சிலேத்துமம்,தோல்,மயிர், நகம்,இடது பக்கம் பிடரி, இடது கண்கள், கால் இசத்தையும்,கொழுமையும், குளிர்ச்சியும் பற்றிய வியாதிகளாம்.

(ஷை சந்திரசம்பந்த பதார்த்தங்கள்.)

முத்து பளிங்கு வெள்ளி கண்ணடி வெள்ளைகல்லுகள் சுரை பூசினி பீர்க்கு வெள்ளிரி முதலிய பூமியில் படர்கின்ற கொடிகள் தித்திப்புமாதுளை அதிக கிளைகளுள்ள சிறுமரங்கள் தினை கொடிகளில் காய்க்குங் காய்கள் மாடு ஒட்டை முதலிய மனிதருலாவும் மிருகங்கள் வாத்து நாரை கொக்கு முதலிய ஜெலத்தில் வாசம் செய்பவைகள் இஸ்கூல்கிரை வெங்காயம் சோழிக்கீரை முலாம்பழம் குலேபனப்ஷா ஆப்பில் பழம் துத்திநெருஞ்சி கசகசா முட்டைக்காளான்முள்ளு வெள்ளரிக்காய் தாமரை காசினிவிரை இவை சந்திரனுக்கு சம்பந்தப்பட்டவை யென்றறிக.

## 3வது அங்காரகன் என்னும் செவ்வாய் சம்பந்த வியாதிகளும் அவயவங்களும்

அதிக சூடு-வரட்சி-சூட்டைப்பற்றிய பித்தம் - மாமிசம் பித்துப்பை-பீனிசம் - நீர் தாரை - வலதுநாசி-சந்தப்புலன்-சுரம்-காமாலை-கருப்பச்சின்னம் - பீஜம் - பெரும்பாடு-மூலம்-இவைகளாம்.

(ஷை செவ்வாய் சம்பந்தமான பதார்த்தங்கள்)

செம்புகாந்தம் - ஜாதிலிங்கம்-வெள்ளுள்ளி-வெங்காயம்-கடுகு - மிளகுபோன்ற காரமான வஸ்துக்கள் நெடியுள்ள

பூண்டுகள் சேராங்கொட்டைமரம் முள்செடிகள் கள்ளியைப் போன்ற பாலுள்ள மரங்கள் கசப்பு வாதுமைக்கொட்டை காப்பிக்கொட்டை புலி கோனாய் பன்றி பாம்பு முதலிய துஷ்ட ஜந்துக்கள் சிவந்த பட்சிகள் குருவிகள் முள்ளிவாய் விளங்கம் போஜீதான்மிசரி நிருவிஷம் சீமைசித்தைவேர் காக்கட்டான் விரை எட்டிக்கொட்டை காட்டுப்புதீனா காயம் ஆற்று துமட்டிக்காய் கடுகுரோகணி சிற்றரத்தை ஏலம் திப்பிலி தேட் கொடுக்கில் அலரி நேர்வாளம் தேவதாரி பெ ருஞ்சீரகம் குங்குமப்பூ சுக்கு லவுங்கப் பத்திரி கோரைக் கிழங்கு பெருலவங்கப்பட்டை கருஞ்சீரகம் சித்திர மூலம் அக்கராகாரம் காட்டு வெங்காயம் முள்ளாங்கி திப்பிலிமூலம் மஞ்சிட்டி புதினா லவுங்கம் கோஷ்டம் ஓமம் வசம்பு மருவு மருக்கொழுந்து இவைகள் செவ்வாய்க்குரிய பதார்த்தங்க ளென்றிசைப்பார்கள்.

## 4-வது புத்தி என்னும் புதன் சம்பந்தமான வியாதிகளும் அவயவங்களும்

அதிக வரட்சி-குளிர்ச்சிகலந்த வரட்சி-இரத்தம் கலந்த வண்டல்-நரம்பு-நாவு-கண்கள் - காதுகள் - இன்பம் - சொற்ப குளிர்ச்சியையும் வரட்சியையும் பற்றிய வியாதியுமாம்.

(மேற்படி புதசம்பந்தமான பதார்த்தவகைகள்)

பாதரசம்-அரிதாரம்-சுண்ணாம்பு-அகில்-சந்தணம் முத லிய வாசனை திரவியங்கள் மரங்கள்-மொச்சை-பெறும் பசறு உளுந்து-சீரகம் கொத்தமல்லி - நாய் - குள்ளநரி ஜலத்தில் சஞ்சரிக்கும் சிறுவாலையுடைய ஜெந்துக்கள் கிளி பேசக் கற் றுக்கொள்ளும் பறவைகள் இரண்டு நிறங்களையும் சிரசில் சித்ரங்களுமுடைய பட்சிகள் வெள்ளைசாமந்திப்பூ கணைப்புல் வெள்ளை சாட்டரணை இவைகள் புதனுக்கு சம்மந்தமானவை களென்றறிக.

## 5-வது வியாழமென்னும் குருசம்பந்தமான வியாதிகளும் அவயவங்களும்.

சமரசமான சூடு, குளிர்ச்சி, பரிசுத்த இரத்தம், விந்து, தலைமூளை, இரத்தாரை, எலும்பின் மூளை, ஈரல், தீனிப்பை, குடல், அன்ன அவா, தொட்டை, இடது செவி, பரிச புலன் களுமாம்.

(மேற்படி குருவின் சம்பந்தமான பதார்த்தங்களாவன)

வெள்ளீயம்-நாகம்-வச்சிரம் - நிமிண கந்தம் - தாளகம்-நல்ல வாசனையும் அழகுமுள்ள பூவுகள் இந்தமரம் தித்திப்பு மாதுளம்பழம் கடலை எள்-புரா-கவுதாரி-மயில் கோழி தானியங்களைப் புசிக்கும் பரவைகள் வெள்ளை சாமந்தி பேரீச்சம் பழம் குமட்டிபழம் தாம்பூலம் ஆப்பில் பழம் கார்ட்டுக் கிழங்கு சாரப்பருப்பு வெந்தியம் கோதுமை சாலாம்பிசினி சரக்கொன்றைபுலி பேரத்தை திராட்சிப்பழம் நறுவிலிப் பழம் சக்கரை யெருக்கிலையின்சுளை செம்முள்ளங்கி கருவேலன் பிசினி கொடி முந்திரிப்பழம் மணத்தக்காளி இலந்தம் பழம் வெள்ளி கரும்பு லவுங்கம் செம்பருத்தி கற்கண்டு பூமி சக்கரைக்கிழங்கு தாழம்பூ தாழம்வேர் பட்டாணி காரா மணி பவழம் தேங்காய் சிருநாப்பூ ஊசிமல்லிகை ரோஜாப்பூ ஆளிவிரை இவைகள் குருசம்பந்த பதார்த்த மென்றறிக.

## 6வது சுக்ரன் என்னும் வெள்ளிசம்பந்தமான வியாதிகளும் அவயவங்களும்

சமரச குளிர்ச்சியும், ஈரமும், இரசதாதுக்கள், நிணம், சுக்கிலம் கருப்பாசயம் ஆண்குறி நாசித்துளை, நீர்தாரைகள், சொற்பக் கொழுமையும் குளிர்ச்சியும் பற்றிய வியாதிகளாம்.

(மேற்படி வெள்ளி சம்மந்தமான பதார்த்தங்களாவன.)

முத்து மாந்தளிர்ப்பச்சை புஷ்பராகம் செம்பு அஞ்ச
னக்கல் தைலமுள்ள விந்துகள் மதுரமும் பலநிறமும் முட்
களுமுள்ள மரங்கள் மஞ்சுகளுற்பவிக்கின்ற மரங்கள் வாசம்
வீசு மரங்கள் சிமை அத்திப்பழம் கொடி முந்திரிப்பழம்
மஞ்சள் வெள்ளை நிறமும் குளம்பும் உள்ள மிருகங்கள் காட்
டுப்புறு நீரில் வாழும் பட்சிகள் ஆமணக்கு வெள்ளை தாமரை
வெள்ளை ரோஜாப்பூ இவை வெள்ளிக்குடைய பதார்த்தங்
களாம்.

## 7-வது காரி யென்னும் சனி சம்பந்தமான வியாதிகளும் அவயவங்களும்.

அதிக குளிர்ச்சி, வரட்சி, வண்டல், வலது செவி, சத்த
புலன்கள், தோல், மயிர், நகம், கொம்பு, மண்ணீரல், மலம்,
சலம், கால்விரலி லுண்டாகும் இசிவு உள்ளிருப்புகளிலுண்
டாகும் வியாதிகள் சனி யென்னும்கிரக சம்பந்தமென்றறிக.

(மேற்படி சனி சம்பந்தமான பதார்த்தங்களாவன.)

காரீயம் எலி பெருச்சாளி கருமை பொருந்திய கிடா
முதலான ஆடு பூனைகம் பூரான் பூனைபோன்ற வீடுகளில்
சஞ்சரிக்குமவைகள் கரிவண்டுகள் கட்டுக்கடங்கா பாம்புகள்
பைசாசமான துற்கிரகங்கள் தலையில்லா குருவிகள் கருங்காலி
நிலவிளா கருவேல் சுக்கான் கீரை குரோசாணி ஓமம் குதிரை
வாலி நெல்லிக்காய் மாங்காய் தேங்காய் மூங்கிலுப்பு முளைக்
கீரை காளான் கொட்டைப்பாக்கு கற்பூரம் நீலக்கல் கரு
நொச்சி செம்பருத்தி இவைபோன்ற இன்னும் பல துற்குண
வஸ்துக்களும் சனி சம்பந்தபட்டனவ மென்றறிக.

கிரகசம்பந்த பதார்த்தங்கள் யாவும் முற்றிற்று.

---

உ

முருகன் துணை.

# சகல வியாதிகட்கும்

# மாத்திரை வகை சிட்கா

அல்லது குளிகை யென்பதுமுண்டு.



## சிந்தாமணிக் குளிகை.

| | |
|---|---|
| கெந்தி | சுக்கு |
| அரிதாரம் | மிளகு |
| நாவி | திப்பிலி |
| தான்றிக்காய் | நாகம் |
| நெல்லி | லிங்கம் |
| கடுக்காய் | அக்கிராகாரம் |

இவை வகைக்கி விராகனிடையாகக்கொண்டு நிறுத்து இதற்கு சமனிடை வாளஞ்சேர்த்து தேனில் ஒருநாள் ஆட்டி கரும்பு சாற்றில் ஒருநாள் ஆட்டி சிறுபயர் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும்.

### அதற்கனுபானம்.

கையாந்தகரை சாற்றில் ஒரு மாத்திரை யிழைத்துக் கொடுக்க பல மந்தம் நீங்கும் நன்றாய் விரோசனமாகும். வாய்வு, சூலை, பிடிப்பு, குத்தல், உளைச்சல் இவை நீங்கும். பசுமோரில் ஒரு மாத்திரையிட கிராணிக் கழிச்சல் இவை நீங்கும். எலுமிச்சம்பழச் சாற்றிலிட சகல விஷமுந் தீரும். வெல்லத்தில் ஒரு மாத்திரை கொடுக்க தலைபாரம், சிரரோகம்

சிலது மாறும். சருக்கரையில் ஒரு மாத்திரையிட பித்தம், மயக்கம், வாயூரல், அதிக தாகம் இவை தீரும். தக்காளிச் சாற்றி விழைத்துக்கொடுக்க மந்தம், செரியாமை இவைநீக்கி பசிதீபன முண்டாகும் தேனில் ஒரு மாத்திரை யிழைத்துக் கொடுக்க வாதபித்த சிலேத்துமத்தால் வந்த மூவித சுரங்க ளும் தீரும். சூதகச்சிக்கல் முதலான வயர்வலிக்குயெல்லாம் முருங்கைச் சாற்றிலிடவும் நீர் கட்டுக்கு பசுங் கோமியத்தி லிடவும் உஷ்ணம் காங்கை இவைகட்கு குளிர்ந்த ஜலத்தில் ஒரு மாத்திரை யிடவும் ஜன்னியைச்சேர்ந்த சுரம், வலி இவைகட்கு குண்டுமணியிலைச் சாற்றிலிடவும். படர்தாம ரைக்கு இஞ்சிச்சாற்றிலிடவும். அண்டவாதம், நரம்பிழுப்பு இதுகட்கு காடியில் ஒரு மாத்திரையிடதீரும். வாய் நாற்றத் திற்கு மாம்பூவில் ஒரு மா த் தி ரை பொடித்துண்ணவும். பல்லுவலி, சதை, ஈரு, சீழ், ரத்தம் இதுகட்கு நல்லெண்ணை இரண்டு காசு இடையில் ஒரு மாத்திரை யிடவும்.

---

## இந்த அவிழ்தத்தைச்செய்யும் உத்தமர்கள் ஆக்ஷேபணையின்றி கவனிக்கவேண்டிய

# ஞியாபகக் குறிப்பு.

மேற்கூறிய சிந்தாமணிக்குளிகையில் கெந்தி, அரிதாரம் நாவிநாகம் லிங்கம் இவைகளை முறைப்படி சுத்தி செய்து கூட்டவேண்டியதுமன்றி இனிவரும் மருந்துகள் யாவற்றி லும் கலந்துவரும் பஞ்சபூத சரக்குகள் பாஷாண வகைகள் உபரசவகைகள் ஆகிய ஒவ்வொரு சரக்கும் கிரமப்படி சுத்தி செய்து அவுஷதங்களை முடித்தாலொழிய வியாதிகளைக் கண் டிக்காது. அன்றியும் சும்மாவிடாமல் வேறு கிளை ரோகங் களுண்டுபண்ணி நலியச்செய்யுமேயன்றி நன்மை தராது. இதுவுமன்றி காந்தம், சவுக்காரம், கெதி, இந்துப்பு, பாஷா ணம் இவைகளில் யேதேனும் சேராத மருந்துகள் கர்மத்தா

லெய்த நோய்களைத் தீர்க்கவுமாட்டாது யென்பது சிகிச்சா சார விதியென்றறிக. மருந்துகள் சுத்திசெய்யும் பாகங்களை கடைசியில் எழுதி யிருக்கிறோமாகையால் சற்று யேருமாரா யிருப்பினும் ஆயுர்வேத ஆராய்ச்சியுள்ள அரியோர்களும் பெரியோர்களும் அங்கீகரித்து அவற்றைத் திருத்திக்கொள்ளும் பொருட்டு அன்போடு வந்தனம் தந்தனம்.

# திரிகடுகு குளிகை.

அரிதாரம்
நெரிவிஷம்
நாவி
ரசம்
வாளம்
கெந்தி
தான்றிக்காய்
கடுகுறுணி
சுக்கு
திப்புலி
மிளகு
அக்கிராகாரம்
கடுக்கா
இந்துப்பு
குதிரைக்குளம்பு

இவை வகைக்கு விராகனிடையாகவாங்கி கிரமப்படிசுத்தி செய்து கையான்சாற்றில்இரண்டு சாமமரைத்து பில்லைதட்டி நிழலிலுலர்த்தி மறுநாளும் இப்படியே மேற்படி சாற்றினல் அரைக்கவும் இதுபோல் ஏழுநாள் அரைத்து குண்டுமணிப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி சீஷாவில் வைத்துக்கொள்ளவும்.

## அனுபானம்.

எலுமிச்சம்பழச்சாற்றில் ஒரு மாத்திரையிழைத்துக் கொடுக்க சகலமான விஷங்களும் தீரும் நாட்பட்ட நஞ்சுகளுக்கு சிறுநீரும் கரும்புசாரும் சமன்கூட்டி ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்கவும் நெல்லிக்காய்சாற்றில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்க முகஜன்னி முகயெரிச்சல் முகக்கடுப்பு சுகஜன்னி யிவைகள் தீரும் எருமைத்தயிரில் கொடுத்தால் அதிசாரம் கிராணிகழிச்சல் இவை தீரும் வேப்பம்யீர்க்கு கியாழத்தில் கொடுத்தால் சகல சுரங்களுந்தீரும்.

# ஜன்னிவாதக் குளிகை.

இந்துப்பு கெந்தி
வெண்காரம் சுக்கு
திப்பிலி மிளகு

இவை வகைக்கு களஞ்சி-1. இதற்கு வாளம் சரி யிடையாகச்சேர்த்து அதற்கு சரியிடை கடுகுரோகணி சேர்த்து கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சார்விட்டு நாலு ஜாமமரைத்து உளுந்து பிரமாணம் மாத்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும் இஞ்சிச் சாற்றில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்க எவ்வித சுரங் களும் அண்டாது தோஷ ஜன்னி முதற்கொண்டு சகல வாய்வும் நீங்கும்.

---

## யோனிப்புற்று லிங்கப்புற்று இவைகட்கு

# வீரமுனி மாத்திரை

நேரிசை வெண்பா

சித்திரஞ்சேர் மூலமதோர் சிராய்க்கழஞ்சியொன்று
கத்திரஞ்சேர் பூரமதுவுங்கழஞ்சு-சத்தியங்கேள்
ஓமமொருகழஞ்சு யோதுணை வெல்லமொடு
ஜாமம்ரெண்டு தானரைப்பாய்ச் சார்ந்து.

அறைத்துமிளகளவு அன்பாகவுண்டைசெய்து
தறையிலொரு பத்துதினம் தானருந்து-நிரைகுழலே
ஏதுக்கலையுகிருய் ரிணக்கிரந்திறணங்களொடு
மாதர்கள் யோனிப்புற்றும் மாறும்.

மாறுமேசூலையெல்லாம் வரக்கள்ளிபூக்கிரந்தி
நீருமேலிங்கப்புற்று பவுத்திரநீர்-சிருங்
கன்னப்பிளவைபக்கம் காணும்படும்பிளவை
என்னசொல்வேன் மார்ச்சிலந்தி யோடும்.

ஓடுமேவிப்புருதி யோடுகின்ற குன்மமெட்டும்
நாடுதனில்மேகரணம் நாடாது-மாடுகளே
காடுதனில் மூலிகையைக் காணமலேனலைவீர்
வீடுதனில் யிம்முறையைசெய் மீன்.

| | |
|---|---|
| சித்திரமூலம் | 1 கால்-விராகனிடை |
| ரசக்கற்பூரம் | 1 கால்-விராகனிடை |
| குருசானி ஓமம் | 1 கால்-விராகனிடை |

இம்மூன்றும் பனவெல்லத்தா லரைத்து மிள களவு மாத்திரை செய்து வைத்துக்கொள்ளவும்.

---

## சர்வரோகத்திற்கு தேரையர் குளிகை.

உத்தாமணிக்கொழுந்து சங்கங்குப்பிக்கொழுந்து பிரமராகாசிக் கொழுந்து வேளைக்கொழுந்து வாதமடக்கிபூண்டின் கொழுந்து வெள்ளை சாட்டாணைக்கொழுந்து ஆடுதிண்ணாப் பாளைக்கொழுந்து வெள்ளருக்குக் கொழுந்து தும்பைக்கொழுந்து எருக்கன் கொழுந்து இவை வகைக்கு ஒரு பலம் வாங்கி கல்லுரலிட்டு பிடித்து சாறுபிழிந்துக்கொண்டு சடாமாஞ்சில் சுக்கு சீரகம் கார்போகியரிசி திப்பிலி மிளகு சதக்குப்பை காயம் வாளம் கடுக்காய் சித்தரத்தை சித்திர மூலம் கஸ்தூரி மஞ்சள் சன்முகஷ்டகம் சன்னலவுங்கப்பட்டை கருஞ்சீரகம் வெண்கடுகு அமுக்குராவகைக்கு (கால்)பலம்இடித்து வஸ்திரகாயஞ்செய்து ஷை சாறுவிட்டு 7-சாமம் அரைத்து மெழுகுக்கொப்பந்தமாக மைமனம்போல் அரைத்து வைத்துக் கொண்டு,

தாளகம் வெண்காரம்
மனோசிலை நாபி
சூதம் லிங்கம்
கெந்தி கெவுரி

இவை யெட்டு தினுசுகளும் வகைக்கி ( கால் ) பலம் கொண்டுவந்து கல்வத்திலிட்டு தும்பைச்சார்விட்டு ஏழுஜாமமும் காசனுங்கண்ணிச் சார்விட்டு ஏழு ஜாமமும் அரைக்கவும் அப்படி அரைக்கும்போது முன் அரைத்துவைத்திருக்கும் சூரண வகையை கொஞ்ச கொஞ்சமாய்ப்போட்டு அரைத்துக்கொண்டே யிருக்கவும் பூர்த்தியா (14) ஜாமம் அரைத்தானபிறகு சுண்டக்காய்வீ தங்குளிகைசெய்து நிழலுலர்த்தி சீஷாவில் வைத்துக்கொள்ளவும்.

## இதற் கனுபானம்.

இஞ்சிச்சார் ஒரு பலத்தில் ஒரு மாத்திரை யிழைத்து சற்று தணலி லிட்டு காய்ச்சி கொடுக்கவும். இப்படி அந்தி சந்தி இரு நேரமுங் கொடுக்கவும் (84) வாய்வும் கைகால் குத்தல் குடைச்சல் மேகத்தைச் சார்ந்த சகல வாய்வகளும் பிடிப்பும்போகும் வாய்வுக்காகாத பண்டங்கள் நீக்கி மற்றவையாகும்.

## காசத்துக்கு அனுபானம்.

சங்கங்குப்பிச்சார் கால் பலத்தில் ஒரு மாத்திரையை யிழைத்து ஏழுநாள் இருபோதும் கொடுக்கவும் சேத்துமம் தொண்ணூற்றாறும் தீரும்.

## சுரத்திற்கு அனுபானம்.

மெரி பாவைச்சாறும் காய்ச்சிய தேனும் சமம் சேர்த்து ஒரு மாத்திரையை யிழைத்து சற்றுஅனலில் காட்டிகொடுக்கவும் இப்படி இரு நேரமுங் கொடுக்க சுரம் (64)ம் தீரும்.

## சீதசுரத்திற்கு அனுபானம்.

வேளை சாத்தில் ஒருமாத்திரை யிழைத்து 7-நாள் இருபோதும் கொடுக்க சீதசுரம் யாவும் தீரும்.

## ஜன்னிக்கு அனுபானம்.

மாவிலிங்கப்பட்டை ரசம் முருங்கப்பட்டைரசம் முலைப்பால் தேன் வெத்திலைச்சார் சமன்கலந்து ஒருமாத்திரை யிழைத்து இருநேரமும் ஐந்துநாள் கொடுக்க சன்னி சயித்தியம் யாவுந்தீரும்.

## குன்மத்திற்கனுபானம்.

வாழைச்சாற்றில் ஒருமாத்திரை யிழைத்து இருநேரமும் ஏழுநாள் கொடுக்க எட்டுவித குன்மங்களும் தீரும் கண்டிதமான பத்தியம் வைக்கவும்.

## சீதம் கிராணி அதிசாரத்திற்கு அனுபானம்.

கடுக்காய்பூ சிறுநாகப்பூ சோம்புவகைக்கி கழஞ்சிடை பசும் நெய்யில் வருத்துப் பொடித்து வெள்ளை கற்கண்டு கழஞ்சு கூடச்சேர்த்து பொடித்து ஒருமாத்திரை வைத்து மாதுளம் பிஞ்சிச்சார் அல்லது வாழைப்பூச் சார்விட்டரைத்து இருநேரமும் ஐந்துநாள் கொடுக்க மேற்கூறிய வியாதி யாவும்தீரும்.

## வயிற்றுக்கிருமிகள்விழ அனுபானம்.

ஓமம் பூரசம்விரை வேப்பம்யீர்க்கு பிரண்டை யிங்கான்கும் சமன்கொண்டிடித்து அரைப்படி ஜலம் விட்டு அரை ஆழாக்காகக் காச்சி யிரக்கி ஒருமாத்திரை யிழைத்திட வயிற்றிலிருக்கும் பூச்சிகள் பந்துபந்தாய் வந்துவிழும் பத்தியமில்லை யென்றறிக.

## க்ஷயமாருதக் குளிகை.

பச்சைகற்பூரம் சிரகம் மான்கொம்பு கோரோசனம் சந்தணம் சாம்ராணி வகைக்கு 1-கால் விராகனிடை யெடுத்து கல்வத்திலிட்டரைத்து சூரணம் செய்து வைத்துக்கொண்டு பேய்ப்புடல் பேய்ப்பீர்க்கு நெருஞ்சிநீர் முள்ளிவிரை இவை சமன் கொண்டிடித்து யிளநீர் விட்டுக்காச்சி கியாழமிருத்து மேற்படி சூரணத்தை கல்வத்திலிட்டு கியாழம் கொஞ்ச கொஞ்சமாய் விட்டறைத்து மெழுகுபதத்தில் வழித்து நிழலிலாரவைத்து குன்றியின் அளவு குளிகைசெய்து சீசாவில் வைத்துக் கொள்ளவும்.

### இதற்கனுபானம்.

முருக்கிலையின் சார் இரண்டு பலம் பசுமோர் 2-பலம் மிளகுபொடி காற்பலம் போட்டு கலக்கி ஒருகுளிகை யிழைத்து கொடுக்கவும் இப்படி 3-நாள் கொடுக்க க்ஷயம் சுவஸ்தப்படும்.

### மேல்சுவாசத்திற் கனுபானம்.

புது நெல்லிக்காயின்சதை மிளகு திப்பிலி கடுகுவகைக்கு சமன்கொண்டிடித்து பசுமோர் விட்டாட்டி பின்னக்கா யளவு ஒருமாத்திரை வைத்து கொடுக்கவும் இப்படி மூன்றுநாள் கொடுக்க மேல்சுவாசம் நிவர்த்தியாகும்.

## அறுமுகக் குளிகை.

வெண்காரம் மனோசிலை நாபிலிங்கம் சூதம் கெந்தி வகைக்கி விராகனிடை (1) சுக்கு திப்பிலி மிளகு வகைக்கி விராகனிடை (2) இஞ்சிச்சாற்றில் ஒருஜாமமும் உத்தாமணிச் சாற்றில் ஒருஜாமமும் ஆட்டி மணியளவு குளிகைசெய்து நிழலுலர்த்தி சீசாவில் வைத்துக் கொள்ளவும்.

## இதற் கனுபானம்.

முலைப்பால் தேன் இஞ்சிசுரசம் மிளகுகியாழம் இதுகளி லேதேனும் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்க சகல சுரங் களும் ஜன்னி சீதளங்களும் விட்டகலும் கடும்பத்தியமிருக் கவும்.

## வச்சிரகபாட குளிகை.

அபினி விராகனிடை 1, ஜாதிக்காய் ஜாபத்திரி மாம் பருப்பு வெந்தியம் கெச்சக்காய்பருப்பு சீரகம் கிராம்பு காயம் மாதுளம் தோல் அதிவிடையம் இவைகள் வகைக்கி விராக னிடை 2, கெச்சக்கா கியாழத்தி லொருசாமம் வாழைப்பூ சாற்றினல் ஒருசாமம் அரைத்து இலந்தங்காய்ப் பிரமாணம் மாத்திரை செய்து காலை மாலையாக வடிகட்டிய தயிரில் ஒரு மாத்திரை கொடுக்கவும் 2-நாள் அல்லது 3-நாளில் நீங்கும்.

## பேதி மாத்திரை.

இரசபற்பம் வெண்காரம் பூரம் வகைக்கி விராகனிடை 1, வாளம் விராகனிடை 4, கெந்தகம் விராகனிடை 1, இவை களைக் கல்வத்திலிட்டு குளிர்ந்த நீர்விட்டரைத்து மிளகளவு மாத்திரைசெய்து வைத்துக்கொண்டு சூரத்து நிலாவிரை கியாழம் செய்து ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்க பேதி யாகும் மாலையில் சுக்கு மிளகு கியாழம் கொடுக்கவும்.

## கும்பமுனி கோரோசனைக் குளிகை.

கோரோசனை குங்குமப்பூ ரசகற்பூரம் ரசச்செந்தூரம் பச்சைகற்பூரம் யேலம் அப்பிரேகம் கிராம்பு கோஷ்டம் வகைக்கி களஞ்சு 1. இவையாவுங் கல்வத்திலிட்டு சந்தணத் தூள் கியாழம் விட்டு 4. ஜாமம் அரைத்து செண்பகப்பூ

யொழும் விட்டு 2, ஜாமம் அரைத்து குங்குமப்பூ கியாழத்தில் இருஜாமமரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரை செய்து சீசாவில் வைத்துக்கொள்ளவும்.

## இதற் கனுபானம்.

இஞ்சித்தேன் முலைப்பால் இதுகளில் 1 மாத்திரை கொடுக்கவும் வியாதியின் பலமறிந்து 3-5-7-நாள் இப்படி கொடுக்க சேத்துமம் 96, ஜன்னி 13, மண்டையிடி சூலை தோஷ சுரங்கள் குடிவிட்டோடும்தனி முலைப்பாலில் கொடுத்தாலே போதுமானது.

## கும்பமுனி சிலோதாரிமணி.

வெண்காரம் சுக்கு திப்பிலி மிளகு கடல் நுரை தாது வேளைவித்து இந்துப்பு காயம் யாவும் சமனிடை கொண்டு சுத்திசெய்த வாளம் சரியிடைகூட்டி கல்வத்திலிட்டு யிளநீர் விட்டு இரண்டுசாமமாட்டி இலந்தம் விரைபிரமாணம் மாத்திரை செய்து நிழலுலர்த்தி செப்பு டப்பியில் வைக்கவும்.

## இதற் கனுபானம்.

இஞ்சிசுரசம் தேன் சமன்கூட்டி ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்க வாய்வு வாதவியாதிகளனைத்தும் நீங்குவதுடன் பித்தமெல்லாம் கீழ் நோக்கும் தேகம் ஆரோக்கியமாய் இருக்கும்.

(இந்த சிலோதாரி மணியை) பிள்ளைகளுக்கு கொடுக்க வேணுமானல் குற்றமற்ற மலைத்தேனில் ஒருமாத்திரை யிழைத்து நாவிற்றடவ மாந்தமெல்லாம் வீறுகெட்டோடும் உப்பிசங்கள் யாவும் நீங்கும் நீரடைப்பு சதையடைப்பு யாவும் தீர்க்கும் சிலோதாரிமணியை சஞ்சீவி யென்றுரைப்படும்.

## மேகத்தாற்சேர்ந்த பற்பல வியாதிக்கும்

# நவநாட் குளிகை.

| | |
|---|---|
| இரசகற்பூரம் | விராகனிடை 1-கால் |
| இரசச்செந்தூரம் | விராகனிடை 1-கால் |
| ஓமம் | பலம் கால் |

முதலாவது ஓமத்தை கல்வத்திலிட்டு நெகிழ அரைத்து பில்லைத்தட்டி நிழலில் உலர்த்தி மற்றுநாள் பில்லையைக்கல் வத்திலிட்டு ஷை இரண்டுசரக்கும் சேர்த்து தேன்விட்டு மயனம்போல் அரைத்து பின்னக்காய்பிரமாணம் பனவெல் லம் சேர்த்து பிசைந்து 14 மாத்திரை செய்து எழுநாளைக்கு இருவேளையாகக் கொடுக்கவும் கடும் பத்தியம் வைக்கவும். கொறுக்குமாந்தை செவ்வாப்பு அரையாப்புகட்டி இதுகள் தீரும் மறுபத்தியம் சுட்டபுளி வருத்தஉப்பு வைக்கவும் ஆக 14-நாளும் சென்ற பிறகு ஓமம் தேய்த்து தலைமுழுக வைக் கவும் இதற்கு முறிப்பு பாவை பொடுதலை துளசி கம்மார் இதுகள் சமமாகப் போட்டிடித்து உழக்கு சார் பிழிந்து தலைக்கு வார்த்தவுடன் கொடுக்கவும். கோழிக்காரங் கொடுக்கவும்.

மாத்திரை வகை சிட்கா முற்றிற்று.

---



கடவுள் துணை.

# கியாழ வகை சிட்கா

## வாதசுரத்திற்கு கியாழம்.

மிளகுதூள் விராகனிடை 4, சுக்குதூள் விராகனிடை 4, வாய்விளங்கத்தூள் விராகனிடை 4, அதிமதுரத்தூள் விராகனிடை 3, சிந்தில் கொடியின்தூள் விராகனிடை 6, இவைகளை கியாழம் வடித்து காலைமாலையாகக் கொடுத்து வரவும் இவ்விதம் 3-நாள் கொடுக்க நீங்கும் அல்லது,

## வாதசுரத்திற்கு 2-வது கியாழம்.

நொச்சிச்சாறு அரிகால்படியில் சுக்கு அரத்தை சதகுப்பை வகைக்கு விராகனிடை 4, மிளகு விராகனிடை 3, இவைகளைப் பொடித்துப்போட்டுக் காய்ச்சி இருவேளையும் கொடுக்கவும் இப்படி 3-நாள் ஆறுவேளையில் நீங்கும்.

## பித்த சுரத்திற்கு கியாழம்.

குலாப்பூவித்து பலம் 1 சுக்கு சோம்பு துரிஞ்சிக்கா நெல்லிக்காய் வகைக்கு பலம் அரை. வெந்தியம் விராகனிடை 2. பரங்கிச்செக்கை பலம் கால். இவைகளை யிடித்து கால்படி ஜலத்திலிட்டு அரிக்காற் படியாக வற்றக்காய்ச்சி இருபோதும் பாகித்துக்கொடுக்கவும். இப்படி 3 - நாள் கொடுக்க சுவஸ்தமாம்

## பித்தசுரத்திற்கு 2-வது கியாழம்

நெல்லி முள்ளி வில்வப்பழச்சதை சீரகம் சுக்கு சித்தாமுட்டி நெற்பொரி இவைகளை சமன் கொண்டிடித்து கியாழமிட்டு வடிக்கட்டி கொஞ்சம் சக்கரை யிட்டுக் கொடுக்கவும். இப்படி இருவேளையாக 3-நாள் கொடுக்க நன்மை தரும்.

## சிலேத்துமம் அல்லது சூட்டிற்கு கியாழம்

தாமரைப் பூமதுரம் சோம்பு மணத்தக்காளி வற்றல் ஆல்பகடாபழம் காசினிவிரை இவைகள் சமன்போட்டிடித்து 1-க்கு அரைபாக கியாழம் வடித்து இருவேளையும் கொடுக்கவும் (3) நாளில் தீருமென்பது திண்ணம்.

## சிலேத்தும சுரத்திற்கு 2வது கியாழம்.

ஓமம் சித்தரத்தை வகைக்கி பலம்அரை. திப்பிலி பலம் அரை. ஆடாதோடை கண்டங்கத்திரி நிலவேம்பு வகைக்கி ஒருபிடி யாவும் சதைத்துப்போட்டு அரைபடி ஜெலம் விட்டு ஆழாக்கு கியாழம் வடித்து இரு வேளையும் கொடுக்கவும். இப்படி 6-வேளை யென்றறிக.

## பழய சுரத்திற்கு கியாழம்.

நெருஞ்சிக்காய் செம்மர்த்தூள் கொத்தமல்லிசீமை கிச்சிலிக்கிழங்கு சுக்கு வகைக்கி பலம் (1) வெள்ளை சக்கரை பலம் கால் இவைகளை எட்டொன்றாய்க்காச்சி காலை மாலை கொடுக்கவும். இப்படி 6-நாள் கொடுக்க உத்தமம்.

## சகல சுரத்திற்கு பொது கியாழம்.

சோம்பு கார்கோல்வித்து அதிமதுரம் வகைக்கி விராகனிடை 5, துரிஞ்சிபிசின் தனியா குலாப்பூ வகைக்கி விராகனிடை 4, சீக்காய் விராகனிடை 3, புதினா ரூமஸ்தகி விராகனிடை 2, யாவுங்கூட்டி பஞ்சுபோல் பிடித்து கியாழம் வடித்து 3-வேளை கொடுக்கவும்.

## மேகநீர் சுரத்திற்கு மாம்பட்டை கியாழம்.

மாம்பட்டை 1-வீசை கொண்டுவந்து ஒன்றிரண்டா யிடித்து பெரும் பானையில் போட்டு 4-படி தண்ணீர் விட்டு அல்லது பட்டை மிதக்கத் தண்ணீர்விட்டு மூனுநாள் ஊர வைத்துப்பிறகு அடுப்பின்மேல்யேற்றி ஒரே திணுசு விரகால் மூனுசாமம் யெறித்து தண்ணி சுண்ட சுண்ட பட்டையை யெடுத்துவிடவும் இப்படியே யெடுத்து வருகையில் 1-படி கியாழமிரங்கையில் யிரக்கி வடித்துக்கொண்டு அந்தி சந்தி அரையாழாக்கு கியாழம் கொடுக்கவும் இப்படி5-நாள் கொடுக்கவேண்டியது. கடும் பத்தியம். மறு பத்தியத்தில் உப்பு புளி சேர்க்கவும் சூடு நீர் சுருக்கு வெள்ளை மேகம் இதுகள் தீரும்.

### சுரக்கியாழம்.

ருத்திரசடை பிட்டிட்டு பிழிந்தரசம் அரையாழாக்கில் மிளகு லவுங்கம் இரண்டும் பொடித்து 1பலம்தூள் போட்டு குளிக்கி இருவேளையாகக் கொடுக்கவும். இப்படி 6 - நாளில் தீரும்.

## மலத்தில் ரெத்தங்கண்டால் கியாழம்.

வெள்ளை வெங்காயம் சீரகம் செம்பருத்தியிலை வெல்வ யிலை துத்தியிலை இவை சமனிடை தூக்கி நாளில் ஒன்ருய்க் காய்ச்சி யிரக்கி இருவேளையும் கொடுக்க சீதரத்தம் மூலரத் தம் வாய்வு ரெணம் இதுகள் தீரும்

## சூடு அல்லது நீர் சுருக்கிற்கு கியாழம்.

கொத்தமல்லி வெந்தயம் சமனிடை போட்டு நாலில் ஒன்ருய் கியாழமிட்டு யிருக்கும்போது சுண்டக்காய் பிரமா ணம் சுண்ணும்பு போட்டு யிரக்கி துட்டிடை நெய் விட்டு சாப்பிடவும் தீரும்.

## பல்வலிக்கு கியாழம்.

சுக்குமருக்காரை மருதம்பட்டை வேலம்பட்டை எருக்கன்பட்டை ஆவாரம்பட்டை பிரமிசெடியின்பட்டை இவை சமனிடை கொண்டு நருக்கி கியாழமிட்டு நாலுக்கொன்றாய் காய்ச்சியிரச்கி கொப்பளிக்கவும் தீரும்.

## பல்வலிச்கு வேறுவித கியாழம்.

சுக்கு கடுக்காய் லவுங்கப்பட்டை இந்துப்பு படிகாரம் வகைக்கி (கால்பலம்) யெடுத்து யிடித்து இராத்திரி அடுப்பில் கியாழம் போட்டு வைத்து காலையில் வாய் கொப்பளிக்கவும். இப்படி இருவேளையும் (3) நாள் கொப்பளிக்க பல்வலி தீரும்.

## உஷ்ண வாய்வுக்கும் வாய்வு கட்டிகட்டும் கியாழம்.

உத்தாமணி யிலையும் பூவுமாகக் கொத்தோடு பரித்து வந்து கழுவிப்போட்டு உப்புபோடாமல் அவித்து கடைந்து சுக்கு கியாழத்தில் கரைத்துக்கொடுக்கவும். இச்சாபத்தியம்.

## சகலசுரத்திற்கு கியாழம்.

பேய்ப்புடலை ஆடாதோடை செம்முள்ளிவேர் சிவன் வெம்புசுக்கு அதிமதுரம் வகைக்கி பலம் அரை, எட்டொன்ருய் கியாழம் வடித்து தேன் விராகனிடை (5) விட்டு கொடுக்கவும் இப்படி மூணுவேளை கொடுக்க தீரும்.

கியாழவகை சிட்கா முற்றிற்று.

கடவுள் துணை.

# எண்ணெ வகை சிட்கா.



## கரப்பான்புண் இவைகளுக்கு எண்ணெசீலை.

என்னெண்ணெ பலம் (6) புங்கன் யெண்ணெ பலம் (3) புங்கம்பால் பலம்(1 யாவும் வொன்றுபடக்கலந்துக்கொண்டு துரிசுதுத்தம் வெள்ளை குங்கிலியம் முதார்சிங்கி சுருள் பட்டை வசம்பு சூதம் வகைக்கி பலம் (கால்) தூள் செய்து மேற்கலந்துவைத்த யெண்ணெயில் போட்டுக்காய்ச்சி வடித்து சீலையில் தடவி மண்டைக்கரப்பான் கண்டைக்கடுவன் கால் கடுவன் இந்த ரிணங்கள்மீது போட ஆரிவிடும். போட்டிருக் கும் சீலையில்தானே திரும்பத் திரும்ப தடவி 4, 5, நாள் போட்டுவர வுலர்ந்துவிடும்.

## ஆராத ரிணம் விப்ருதி புரையோடிய ரிணம் அரையாப்பு ரிணம் இவைகட்கு எண்ணெ.

போராமணக்கன் முத்தெண்ணெ (20) பலம் யெடுத்து புங்கன்வேர் அத்திவேர் இலுப்பை வேர் குமிளம்பட்டை மாவிலம்பட்டை அரசன்பட்டை நிலக்கடம்பு பட்டை புன்னைப்பட்டை வெங்காடம் வகைக்கிபலம் 1,இவைகளையிடித்து ஷியெண்ணெயில் கொஞ்சம் விட்டரைத்து யெண்ணெயிற் றானே கலக்கி காய்ச்சியிறக்கும்போது பூரம் விராகனிடை 2-அரை, முதார்சிங்கு விராகனிடை 2, வெள்ளை குங்கலியம் விராகனிடை 2-அரை. பொடித்துப்போட்டு கலக்கி இறக்கி வைத்துக்கொண்டு யெவ்வித ரிணத்தின் மீதும் தடவிவர ஆறிவிடும்.

## இளம்பிள்ளை வாதத்திற்கு எண்ணை.

முடக்கத்தான்யிலை கெச்சக்காயிலை மிளகருணையிலை வகைக்கு ஒருபிடி கொண்டுவந்திடித்து ஆமணக்கெண்ணை 7-அரை பலத்திற் கலந்து அடுப்பிலேற்றி காய்ச்சி வடித்து காலையில் கரண்டி வீதம் (5) நாள் அல்லது (7) நாள் கொடுக்கவும் மேற்படி யெண்ணை காய்ச்சும்போது ஒரு பலம் உப்பைப் பொடித்து ஒரு கலையத்தில் பாதி கொட்டி கால் பலம் பூரத்தை ஒரே கட்டியாகவைத்து மேலும்மேலும் உப்பைகொட்டி மூடி மேற்கலையம்மூடி தீயில் வைத்தெரிக்கவும். இப்படி ஒரு நாழிகை யெரித்தெடுத்த பூரத்தில் ஒரு விராகனிடை பூரத்தை எண்ணை விட்டரைத்துக்கலந்து வைத்துக்கொண்டு கொடுத்துவரவும் வாய்வும் கரப்பான் பதார்த்தங்களும் நீக்கவும். இச்சாபத்தியம்.

## கெணசூட்டிற்கு குளிர்ச்சி எண்ணை.

சித்தாமணக்கெண்ணை படி ஒன்று வல்லாரைச்சார் படி அரை வெந்தயம் பலம் (2) ஆவின்பால் விட்டு வெந்தயத்தை அரைத்து சார் யெண்ணை யாவும் ஒன்றாய் கலந்து காய்ச்சிவடித்து வேளைக்குக்கரண்டிவீதம் கொஞ்சம் சக்கரை விட்டுக்கொடுக்க தேகம் தணிந்து குளிர்ச்சியாகும்.

## மூளைமூலம் மேக உஷ்ணத்திற்கு எண்ணை.

சங்கங்குப்பிச்சார் நொச்சிச்சார் கொட்டைக்கரந்தைச் சார் முருக்கிலைச்சார் செருப்படைச்சார் வெள்ளைவெங்காயச் சார் அத்திப்பட்டைச்சார் பூவரசம்பட்டைச்சார் பூவரசம் பழுப்புச்சார் வகைக்கி படி கால். சித்தாமணக்கெண்ணை 1-அரை வீசை இவை யாவும் ஒன்றாய்க் கலந்துக்கொண்டு எருக்கன் கிழங்கு அல்லது மூலம் கெருடன்கிழங்குவகைக்கி (5) பலம் மேற்படி எண்ணை கொஞ்சம்விட்டு வதக்கியிடித்து வஸ்திரகாயம்செய்து அரைத்துப் போட்டுக்காய்ச்சி இருக்கும்போது சிவனார்வேம்பு கருஞ்சீரகம் ஜாபத்திரி வகைக்கி

பலம் 1, சூரணஞ்செய்துப் போட்டிரக்கி வைத்துக்கொண்டு வேளைக்கு அரைபலம் வீதமாக 5 - நாள் அல்லது 7 - நாள் கொடுக்கவும் எண்ணை நிறுத்தினபிறகு இரண்டுநாள் பொறுத்து விளக்கெண்ணெயில் ஸ்நானம் செய்து வைக்கவும். இப்படி 3-தரம் கொடுக்கவேண்டும். இச்சாபத்தியம் அல்லது பசும்பாலும் சீனியும் அன்னத்துடன் கொடுக்க மூளைமூலம் இத்துவிழும் அல்லது கரைந்துவிடும். மேகம், 21 கிரந்தி உஷ்ணம் காந்தல் வெள்ளை அரையாப்பு இவைகள் தீரும்.

## எலிவிஷம் பதினெட்டுக்கும் அதனாலுண்டாகும் மந்தார்ரகாசம் சுவாசகாசத்திற்கும்

## சத்திவாக்கு.

போச்சுமுவ்வாரொலிக்கும் பொருந்திய மருந்துகேளு
வாச்சிதுபுங்கன்வெள்ளை காக்கணம்பிராய்வேர்மூன்று
ஆச்சிதுசமனுய்கூட்டி அரைத்தாவின்பாலிற்கொள்ள
மாச்சுதுசுவாசகாச மந்தார எலியும்போமே.

## எலிகடி பதினெட்டுக்கும் சத்தி யெண்ணை.

சொல் கருவேலன்பட்டை சாறுள்ளியுப்புழக்கு
நல்லெண்ணை நாழிவிட்டு நவாச்சாரம்பணந்தான்போட்டு
வெல்லவே யுழக்காய் காச்சி விடிந்துண்ண பேதிகாணும்
வல்லெலி பதினெட்டுந்தான் வலியவிட்டோடிப்போமே.

### வேறு முறை.

ஓடிப்போம் அமுக்கிராவேர் எலுமிச்சங்காயின்வீதம்
பாடியே யரைத்துபாலில் குடியெலி பதினெட்டும்போம்
ஜாடியே துருசுமூன்று சகஸ்திரபேதிரெண்டு
நாடியே விராகன்வீதம் நல்லெருக்கன்பால் விட்டோட்டே.

ஆட்டியே வழித்துமாத்திரை யாக்கி வெற்றிலையின்சாற்றில்
கூட்டியே கொடுக்கச்சொல்லு விஷங்குலைந்தோடிப்போகும்
நாட்டினிலுரைக்கக்கேளு நாட்சென்ற வெலிகட்கெல்லாம்
வாட்டிய புங்கன்பட்டை மிளகுள்ளி வசம்புகூட்டே.

வசம்பதுகூட்டிதேசிக் காய்பழ சாற்றுலாட்டி
நிசமுடன் கொதிக்கவைத்து குடிக்கவே தீருந்தீரும்
விசைவிளாவேர் பருத்தி வேருமயெள் ளெண்ணைவிட்டு
விசையுடன் கொதியிட்டுண்ண சேரெலி விஷம்போர் நீரே.

சேரெலி விஷத்திற்கு.

நீர்முள்ளி விரையரைத்து நல்லெண்ணைவிட்டுகிண்டி
சேரவேதிரட்டியுண்ண சேரெலி விஷப்போம்சுக்கு
சார்சிறு மிளகுதேசா வரங்களிப்பாக்குஞ்சேர்த்து
கூர்கருவேலம்பட்டை குமரியின் சறுகுகாலே.

காற்பலந் தூக்கி நீரில் காய்ச்சி எள்ளெண்ணைவிட்டு
தீற்கவே கொடுக்கச்சொல்லு திகழ்புள்ளி மானின்மூளை
ஆர்க்கவே கருகச்சுட்டு ஆப்பாலால் குழைத்துதிண்ண
பார்க்க பத்தியமோ யில்லை பதினெட்டு கடியும்போமே.

## ஊர்வசி கூந்தலெண்ணை.

குற்றமில்லாத எள்ளெண்ணை அரைப்படி அளந்து ஜாடியில்விட்டு சம்பங்கி பூவின் இதழ்கள் 5-பலம் நிறுத்துப் போட்டு வால் மிளகு கோரைக்கிழங்கு கஸ்தூரி மஞ்சள் பூலாங் கிழங்கு கோஷ்டம் அகில்கட்டை வகைக்கு 1-பலம் இடித்து வஸ்திரகாயஞ் செய்துப்போட்டு உளுந்து மாவினால் கவசம்செய்து பெரிய பானையில் அரைதிட்டம் செலம் விட்டு அந்த நீருக்கும்மேல் 2 விரற்கடை வுயரத்தில் ஜாடி நிற்கும் படியாக தொளாயந்திரமாகக்கட்டி அறுபது நாழிகையெரித்து வடிகட்டி வைத்துக்கொள்ளவும். ஸ்ரீ புருஷாள் யாரும் கூந்தலுக்கிட்டுச் சீவிக்கொள்ள அதிக வாசம் வீசும்.

## சகல வலிக்கும் கள்ளி யெண்ணை.

திருகுகள்ளிவேர் வசம்பு மிளகு வகைக்கு 1 - பலம் யெடுத்திடித்து தண்ணீர் விட்டுக் குழம்புபோல் கரைத்து அடுப்பிலேற்றிக் கொதிக்கவைத்து நன்றாய் கொதித்தவுடன் ஆழாக்கு நல்லெண்ணை விட்டுக்கலக்கி இறக்கி வைத்துக் கொண்டு வலிப்பு வாதம் இவைகட்கு மேலிற் பூசிவரில் இரண்டு மூன்று வேளையில் தீருமென்றறிக.

## இதுவும் வலிக்குத்தலுக்கு உள்ளி யெண்ணை.

ஈருள்ளி பலம் 2, வசம்பு பலம் 1, கொச்சிவேர் தழு தாழைவேர் வகைக்கு அரைபலம் இவை யாவும் யிடித்து வேப்பெண்ணெய், விளக்கெண்ணை, நல்லெண்ணை வகைக்கு 2-அரை பலம் யெடுத்து முன்யிடித்ததூள் முதலானதும் ஒன்றாய்க்கலந்து கடுகுபதமாய்க் காய்ச்சி யெடுத்து தேகத்தில் தடவ விடவும். சகல வலியும் குத்தல் குடைச்சல் நீங்கும்.

## பால கரப்பான் எண்ணை.

செங்கத்தாரி பட்டையிலை சின்னியிலை சிறுகுரிஞ்சான் வேர் மிளகுவகைக்கு சமன்கொண்டு 5 பலம் நிறுத்தெடுத்து கால்படி விளக்கெண்ணையில்போட்டு காய்ச்சி காலையில் கரண்டி வீதம் கொடுத்து வரவும். 5-7-நாள் கொடுக்க சகல கரப்பான் ரிணங்களும் ஆரிவிடும். மேற்படி மருந்துகளை யிடித்து வஸ்திரகாயஞ்செய்து கலக்கி காய்ச்சவும்.

## சகல கிராணிக்கும் உடும்பெண்ணை.

உடும்பின் சதை 2-அரைபலம் சுக்கு திப்பிலி மிளகு வசம்பு வகைக்கு பலம் கால், சித்திர மூலம் பலம் கால், இவைகளை யிடித்து 10-பலம் விளக்கெண்ணையில்போட்டு மேற்படி சதையும் போட்டு சீரகம் வெள்ளுள்ளி பசுமோர் விட்டரைத்துப்போட்டு காலையில் கரண்டிவீதம் யெண்ணையும் பசுமோர் கொஞ்சம் விட்டு சாப்பிடவுந் தீரும்.

## சுகபேதி எண்ணெ.

சித்தாமணக்கெண்ணெ அரைபடி, பசும்பால் ஒரு படி, இவை யிரண்டுங்கலந்து அடுப்பேற்றி அதிமதுரம் கடுகுரூணி இந்துப்பு வாளம் வகைக்கு காற்பலம்வீதம்எடுத்து இடித்து மேற்படி எண்ணெ விட்டரைத்துக் கலந்து மெழுகுபதமாய்க் காய்ச்சி யிரக்கிவைத்துக்கொண்டு சிறுவர்களுக்கு ஒரு காசு யிடை கொடுக்கவும் பெரியவர்களுக்கு (3) காசிடை கல்குடலாயிருப்பவர்களுக்கு (6) காசிடை கொடுக்கவும் அப்போதைக்கப்போது வெந்நீர் சாப்பிட்டுக்கொண்டிருந்தால் பேதியாகும். பேதியதிகமானல் கஞ்சிகாய்ச்சிக்கொஞ்சம் உப்பிட்டுக்கொடுக்கவும். அப்படியும் நிற்காவிட்டால் மோர் சாதம் சாப்பிடவும். அந்தியில் சீரகம் மிளகு சமயிடை போட்டு கியாழம் வைத்துக்கொடுக்கவும். இரவில் மிளநீர் சாதம் கொள்ளவும். இந்த யெண்ணெயைத்தானே ஒரே முறையாக ஏழு நாள் அல்லது (15) நாள் கொள்ள வாதம் முதலான வாய்வுகள் யாவுந் தணியும், குத்தல் உளைச்சல் சிரங்கு சொரி யாவுந்தணிவதுடன் இளம்பிள்ளைவாதம் கணமாந்தம் பொருமல் வாதபித்த சிலேத்துமம் யாவும் நீங்கும் மிகவும் உத்தமமான யெண்ணெ யென்றறிக.

## மண்டை குடைச்சலுக்கு எண்ணெ.

மணத்தக்காளி பொன்னாங்கண்ணி கரிசனாங்கண்ணி கீழாநெல்லி வில்வம் இந்த ஐந்து தினுசும் இடித்து ஆழாக்கு சார் பிழிந்து ஆழாக்கு நெல்லெண்ணெ கூடவிட்டு கடுகுபதமாய்க் காய்ச்சி யிரக்கி (3) நாள் வட்டமாக (5) தலைமுழுக்கு முழுகவேண்டியது. ஒவ்வொரு முழுக்கிற்கும் கடுக்க முளநீர் அரையாழாக்கு குடிக்கவேண்டியது பகலில் நித்திரைசெய்ய வேண்டியது. அன்னியபதார்த்தம் ஆகாது. அஞ்சி முழுக்கில் மண்டைகுடைச்சல் தீரும்.

## கர்ணுமேகத்திற்கு பச்சை எண்ணை.

சங்கம்யிலே கொண்டுவந்து யிடித்து அறையாழாக்கு சார் பிழிந்து அதற்கு சமனுக நல்லெண்ணைகூட்டி மூணு நாள் கொடுக்கவும். கடும் பத்தியம்,

## காதில் சீழ்வடிதலுக்கு எண்ணை.

லிங்கம் துட்டிடை பூரம் துட்டிடையெடுத்து பொடித்து ஒரு பலம் நல்லெண்ணை அடுப்பில்வைத்து காய்ந்த பிறகு மேற்படி தூளேபோட்டு நாயுருவிச்சார் காலணு எடை விட்டு சற்று நேரம் காய்ச்சி யிரக்கிக்கொண்டு பஞ்சி யில் தொட்டு காதில் 3-துளி பிழிந்தால் சீழ்வருதல் தீரும்.

## சர்வ மூலத்திற்கும் எண்ணை.

நத்தைச்சூரி குதிரைவாலிப்பில்லு கண்டங்கத்திரி ஆடு தின்ணுப்பாளே செப்பு நாயுருவிவேர் சிறுகட்டுக்கொடி உப்பிலாங்கொடி வெள்ளெருக்கன்வேர் செகப்பு நெரிஞ்சிவேர் பொன்னூமத்தன்வேர் இவைகள் வகைக்கு ஒரு குத்துயெடுத்து பெரும்பானையில் போட்டு இரண்டேகால்படி ஜெலம் விட்டு அடுப்பேற்றி யெரிக்கவும் 3-ஆழாக்கு கியாழம் யிருக்கிற சமயத்தில் இரக்கி வடிகட்டி சித்தாமணக்கெண்ணை 10-பலம்விட்டு கலக்கி அடுப்பிலேற்றி கியாழமெல்லாம் சுண்டு கிறவரையில் யெரித்து இரக்கிவைத்துக்கொண்டு பத்து நாள் சாப்பிடவும். இச்சாபத்தியம் சிழ்மூலம் இரத்த மூலம் முளேமூலம் உள்மூலம் முதலிய எவ்வித மூலமும் தீரும். இந்த தைலத்தை மூலத்தின்பேரில் தடவிணுலும் நலமாம் இரவில் தடவி படுத்துக்கொள்ளவும்.

எண்ணை வகை சிட்கா முற்றிற்று.



கடவுள் துணை.

# பொடி வகை சிட்கா.

## விரோஜனப் பொடி.

சதுரக்கள்ளியின் கிழங்கு அல்லது மூலம் கொடி வேலியின்வேர் இவை யிரண்டும் சமன் கொண்டிடித்து வஸ்திரகாயஞ்செய்து பசும்பால் விட்டரைத்து பில்லைதட்டி காயவைத்து மறுதினமும் அப்படியே அரைத்துபில்லைதட்டி காயவைத்து மறு தினமும் இவ்வாறேசெய்து நிழலிலுலர்த்தி யெடுத்து பொடித்து வைத்துக்கொண்டு வேண்டும் போதுபாக்களவு பொடியை கொஞ்சம் வெந்நீரிலிட்டு சாப்பிட பத்துவிசை பேதியாகும் அதிக பேதியானால் மோர் அன்னம்சாப்பிடவும். மாலையில் சீரகம் மிளகு கியாழம்வைத்துக் குடிக்கவும்.

## ஸ்ரீமேக வெள்ளைப் பொடி.

சந்தனத்தூள் அகிற்கட்டை லவுங்கப்பட்டை கிராம்பு அதிமதுரம் கார்போகியரிசு வெட்பாலை தேத்தான்வித்து அருகம்வேர் சித்தாமுட்டிவேர் ஏலம் சோம்பு வகைக்கு சமனெடை அல்லது அறைபலம்வீதமாகவாங்கி வெய்யலில் உலர்த்தியிடித்து சூரணித்து சீலையில் வடிகட்டி வைத்துக் கொண்டு தினம் திரிகடிப்பிரமாணம்யெடுத்து அவ்வளவு கற்கண்டு பொடிகூட்டி பசும்வெண்ணெயில் குழைத்து சாப்பிட்டு வரவும் இப்படி இருவேளையும் 7-15-நாள் கொள்ள நீர்யெறிப்பு கடுப்பூ வெள்ளையாகவும் தீரும். பத்தியம் அரை காரம் அரைப்புளியாக இச்சாபத்தியம்.

## மேகத்திற்கு நவநாள் உருண்டை.

வெள்ளை நொச்சிலி மிளகு பூண்டு அரைத்து கெச்சைக் காய் பிரமாணம் 7-நாள் கொடுக்கவும் வேளைக்கு மூன்று உருண்டை கொடுக்கவும். கடும் பத்தியம் மேகம் பிடிப்பு குடைச்சல் இவைகள் தீரும்.

## தேத்தான் கொட்டை பொடி.

தேத்தான்கொட்டை வேண்டியது கொண்டுவந்து நெய் யில் வறுத்துயிடித்து சூரணித்து சிசாவில்வைத்துக்கொண்டு தினம் காலையில் திருகடி பிரமாணம் தின்றுவந்தால் (3760) வியாதியும் வரவொட்டாமல் காப்பாற்றும் பசும் பாலில் கரைத்து காலைமாலை சாப்பிட்டால் மேக நிவர்த்தியாகும்.

## மேகத்திற்கு ஏடு தயிர்.

முத்தின மாம்பட்டை கொண்டுவந்து பஞ்சு போல் பிடித்து 5-அரை பலம் நிறுத்தெடுத்து முக்கால்படி யேடுத் தயிரில் போட்டுக் கலக்கி வாய்கட்டி மூனுநாள் சூரியபுடம் வைத்தெடுத்து வேளைக்கு அரையாழாக்குவீதம் 5-நாள் காலை மாலையும் கொக்கவும். கடும்பத்தியம்.

## குலை எரிவுக்கு பொடி.

### அல்லது சூரணம்.

| | | |
|---|---|---|
| பரங்கிச்சக்கை | பலம் | 2-அரை |
| முசிமுசிக்கைவேர் | பலம் | 2-அரை |
| சீரகம் | பலம் | 2-அரை |

இம்மூன்றும் வெய்யலில் உலர்த்தியிடித்து வஸ்திரகா யஞ்செய்து சிசாவில் வைத்துக்கொண்டு காலையில் திருகடி சூரணம் யெடுத்து தேன்விட்டுப் பிசைந்து சாப்பிடவும். இப்படி 20-நாள் அல்லது நாற்பது நாள் சாப்பிடவும் பித்த யெறிவு தீரும். இச்சாபத்தியம்.

## நாபிப் பொடி.

பொரித்தெடுத்த சூரணித்த படிகாரம் பலம் (அரைக் கால்) குங்கிலியம் பலம் (1) யெடுத்து ஒரு சட்டியில் (5) இளநீர் உடைத்து ஊத்தி மேற்படி மருந்தை இளநீரின் நடு வில்வைத்து அடுப்பின்பேரில் வைத்து நீர்சுண்டுகிற வரை யில் யெரித்த பிற்பாடு மருந்தையெடுத்து பொடித்து சீசா வில் வைத்துக்கொண்டு இரண்டு அரிசியெடை சூரணத்தைத் தேனில் குழைத்து சாப்பிடவும் நாபியில் ரிணம் ஆறும்.

## சர்வ மேகசண்டமாருதப் பொடி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | விராகனிடை | 4 | இந்துப்பு | ,, | 4 |
| திப்பிலி | ,, | 4 | பொட்டிலுப்பு | ,, | 4 |
| மிளகு | ,, | 4 | கரியுப்பு | ,, | 4 |
| பூண்டு | ,, | 4 | வாளம் | ,, | 1 |
| ஓமம் | ,, | 4 | பொன்முசட்டை | ,, | 8 |
| திப்பிலிமூலம் | ,, | 4 | பேய்துமட்டி | ,, | 8 |
| அரிசிதிப்பிலி | ,, | 4 | தலைச்சுருளி | ,, | 8 |
| செவியம் | ,, | 4 | காட்டுமுருங்கை | ,, | 8 |
| ஆனைதிப்பிலி | ,, | 4 | மூக்கழஞ்சி | ,, | 8 |
| சீரகம் | ,, | 4 | சத்திசாரணை | ,, | 8 |
| கருஞ்சீரகம் | ,, | 4 | காட்டுமல்லி | ,, | 8 |
| சதகுப்பி | ,, | 4 | மலைமஞ்சி | ,, | 8 |
| சத்திசாரம் | ,, | 4 | மரமஞ்சி | ,, | 8 |
| பூனீறு | ,, | 4 | கரசணங்கண்ணி | ,, | 8 |
| எவாச்சாரம் | ,, | 4 | நிலவேம்பு | ,, | 8 |
| நவாச்சாரம் | ,, | 4 | புங்கன்வேர் | ,, | 8 |
| வெண்காரம் | ,, | 4 | நெருஞ்சிவேர் | ,, | 8 |
| கல்லுப்பு | ,, | 4 | கருணைக்கிழங்கு | ,, | 8 |
| சோத்துப்பு | ,, | 4 | எருக்கன்கிழங்கு | ,, | 8 |
| வளையலுப்பு | ,, | 4 | மூங்கில்கிழங்கு | ,, | 8 |

## மேகத்திற்கு நவநாள் உருண்டை.

வெள்ளை நொச்சிலி மிளகு பூண்டு அரைத்து கெச்சைக் காய் பிரமாணம் 7-நாள் கொடுக்கவும் வேளைக்கு மூன்று உருண்டை கொடுக்கவும். கடும் பத்தியம் மேகம் பிடிப்பு குடைச்சல் இவைகள் தீரும்.

## தேத்தான் கொட்டை பொடி.

தேத்தான்கொட்டை வேண்டியது கொண்டுவந்து நெய்யில் வறுத்துயிடித்து சூரணித்து சீசாவில்வைத்துக்கொண்டு தினம் காலையில் திருகடி பிரமாணம் தின்றுவந்தால் (3760) வியாதியும் வரவொட்டாமல் காப்பாற்றும் பசும் பாலில் கரைத்து காலைமாலை சாப்பிட்டால் மேக நிவர்த்தியாகும்.

## மேகத்திற்கு ஏடு ஐயிர்.

முத்தின மாம்பட்டை கொண்டுவந்து பஞ்சு போல் யிடித்து 5-அரை பலம் நிறுத்தெடுத்து முக்கால்படி யேடுத் தயிரில் போட்டுக் கலக்கி வாய்கட்டி மூனுநாள் சூரியபுடம் வைத்தெடுத்து வேளைக்கு அரையாழாக்குவீதம் 5-நாள் காலை மாலையும் கொக்கவும். கடும்பத்தியம்.

## குலை எரிவுக்கு பொடி.

### அல்லது சூரணம்.

| | | |
|---|---|---|
| பரங்கிச்சக்கை | பலம் | 2-அரை |
| முசிமுசிக்கைவேர் | பலம் | 2-அரை |
| சீரகம் | பலம் | 2-அரை |

இம்மூன்றும் வெய்யலில் உலர்த்தியிடித்து வஸ்திரகாயஞ்செய்து சீசாவில் வைத்துக்கொண்டு காலையில் திருகடி சூரணம் யெடுத்து தேன்விட்டுப் பிசைந்து சாப்பிடவும். இப்படி 20-நாள் அல்லது நாற்பது நாள் சாப்பிடவும் பித்த யெறிவு தீரும். இச்சாபத்தியம்.

## நாபிப் பொடி.

பொரித்தெடுத்து சூரணித்த படிகாரம் பலம் (அரிக்கால்) குங்கிலியம் பலம் (1) யெடுத்து ஒரு சட்டியில் (5) இளநீர் உடைத்து ஊத்தி மேற்படி மருந்தை இளநீரின் நடுவில்வைத்து அடுப்பின்பேரில் வைத்து நீர்சுண்டுகிற வரையில் யெரித்த பிற்பாடு மருந்தையெடுத்து பொடித்து சிசாவில் வைத்துக்கொண்டு இரண்டு அரிசியெடை சூரணத்தைத் தேனில் குழைத்து சாப்பிடவும் நாபியில் ரிணம் ஆறும்.

## சர்வ மேகசண்டமாருதப் பொடி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | விராகனிடை | 4 | இந்துப்பு | ,, | 4 |
| திப்பிலி | ,, | 4 | பொட்டிலுப்பு | ,, | 4 |
| மிளகு | ,, | 4 | கரியுப்பு | ,, | 4 |
| பூண்டு | ,, | 4 | வாளம் | ,, | 1 |
| ஓமம் | ,, | 4 | பொன்முசட்டை | ,, | 8 |
| திப்பிலிமூலம் | ,, | 4 | பேய்துமட்டி | ,, | 8 |
| அரிசிதிப்பிலி | ,, | 4 | தலைச்சுருளி | ,, | 8 |
| செவியம் | ,, | 4 | காட்டுமுருங்கை | ,, | 8 |
| ஆனைதிப்பிலி | ,, | 4 | மூக்கழஞ்சி | ,, | 8 |
| சிரகம் | ,, | 4 | சத்திசாரணை | ,, | 8 |
| கருஞ்சிரகம் | ,, | 4 | காட்டுமல்லி | ,, | 8 |
| சதகுப்பி | ,, | 4 | மலைமஞ்சி | ,, | 8 |
| சத்திசாரம் | ,, | 4 | மரமஞ்சி | ,, | 8 |
| பூனீரு | ,, | 4 | கரசணங்கண்ணி | ,, | 8 |
| எவாச்சாரம் | ,, | 4 | நிலவேம்பு | ,, | 8 |
| நவாச்சாரம் | ,, | 4 | புங்கன்வேர் | ,, | 8 |
| வெண்காரம் | ,, | 4 | நெருஞ்சிவேர் | ,, | 8 |
| கல்லுப்பு | ,, | 4 | கருணைக்கிழங்கு | ,, | 8 |
| சோத்துப்பு | ,, | 4 | எருக்கன்கிழங்கு | ,, | 8 |
| வளையலுப்பு | ,, | 4 | மூஞ்கில் கிழங்கு | ,, | 8 |

மேற்கூறிய (40) தினுசுகளும் சுத்தப்படுத்திய பிறகு நிறைப்படி நிறுத்தெடுத்துக்கொண்டு சிவதைவேர் விராகனிடை (70) நிறுத்தெடுத்து சத்திசாரம் முதல் கரியுப்புவரையில் (11) தினுசுகளை வேறு பாண்டத்தில் வைத்து மற்றவைகளை வெய்யலில் உலாத்தி இளம் வருப்பாக வருத்துயிடித்து முன்னெடுத்துவைத்த (11) வகை மருந்தையும் இடித்து வஸ்திர காயஞ்செய்து பசும்பாலில் சுத்தி செய்து நிழலில் உலர்த்தி பொடித்து சீசாவில் வைத்துக்கொள்ளவும். ஒரு வேளைக்கு திரிகடிபிரமாணம் பொடியெடுத்து தேன் நெய் அல்லது வெண்ணீரிலாவதும் சாப்பிடவும் இப்படி (வ- அல்லது (அரை) மண்டலம் இருவேளையும் சாப்பிட்டுவரில் தீரும் வியாதிகளாவன.

வாய்வு-நரித்தலைவாய்வு-பாரிச வாய்வு முதலிய வாதம் (80)ம் தீரும். நாவரட்சி-குன்மம்-சந்துநோய்-கீல் பிடிப்பு) கைகுத்தல்-கால்குத்தல்-குடைச்சல்-பெருவயறு-ஆமைவயறு தாகம்-உஷ்ணம்- பாண்டு-காமாலை - முகவாதம்-வீக்கம்-உளமாந்தை-இருமல்-குளிர் சுரம்-வாயில் ரத்தம் வருதல்-கக்கல்-பித்தமயக்கம்-மூலநோய்-அஜீரணம்-வயறெறிச்சல் வயிற்றில் புழு-இவை யாவும் தீரும். இச்சாபத்தியம்.

## ஜன்னிவாங்கிப் பொடி.

| | |
|---|---|
| சடாமாஞ்சி | குருவேர் |
| கோஷ்டம் | நன்னாரிவேர் |
| பூலாங்கிழங்கு | பச்சைபிலை |
| தேவாரம் | சந்தனத்தூள் |
| செம்புராப்பட்டை | கொம்பாக்கு |
| கருஞ்சிரகம் | சித்தாமுட்டி |
| கார்போகியரிசி | பளிங்குசாம்பிராணி |

செண்பகமொக்கு
சிறுநாவல்பூ
செவியம்
சிறுதேக்கு
நாணல்வேர்
கிச்சிலிக்கிழங்கு
டிக்காமல்லி
கோழிக்கிழங்கு

இவைகளை வகைக்கு (1) விராகனெடையாக நிறுத்தெடுத்து இடித்து சிறுபொடியாகத்தெள்ளி வைத்துக்கொண்டு தாங்கள் தலைமுழுகத் தகுந்த நல்லெண்ணையை அடுப்பிலேற்றி காய்ந்தவுடன் மேற்படி பொடியில் மூன்று சிட்டிகை பொடிபோட்டு உடனே மேல்மூடி யிறக்கிவைத்துக்கொண்டு தலையில் தேய்த்து ஸ்நானம் செய்யவும். கண்ணில் படக்கூடாது. அன்றைய தினம் பகல் நித்திரைகூடாது. கத்திரி அவரை முருங்கை இவைகளின் பிஞ்சு பொன்னாங்கண்ணி அறைக்கீறை இவை சமைத்துக்கொள்ளவும். அல்லது புரு கோழி மாமிசம் சுரா இவைகளாகும். இப்படி 6-நாள் வட்டமாக 3, 4 ஸ்நானஞ்செய்யுமளவில் ஒத்தைதலைநோய் விடா தலைபாரம் புரங்கழுத்திசிவு மண்டைடி முகஜன்னி முதலான 13-ஜன்னிதோஷங்களும் தீரும்.

## நாதவிர்த்திப் பொடி.

கருவேலன்பிஞ்சி நறுவிலி பிஞ்சி ஆனை நெருஞ்சிக்காய் காட்டுப்பிரண்டையிலை இவைகளைநிழலில் உலர்த்தி தனித்தனியாக இடித்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து அதற்கு சரியிடை வெள்ளை சக்கரைகூட்டி சீசாவில்வைத்துக்கொள்ளவும். இரவில் போஜனம் செய்தபிறகு (கால்பலம்)பொடியையெடுத்து ஜெலம் சேராமல் காய்ந்து சாப்பிடத்தகுந்த சூடுகையுள்ள பசும்பாலில் மேற்படி பொடியைப்போட்டு சாப்பிடவும். இப்படி 15-நாள்கொள்ள நீத்திருந்த இந்திரியம் கட்டும் லாகிரியும் போகமுங்கூடாது.

## தாதுவிர்த்திக்கு மூக்கண்ணிப்பொடி.

இளசியாயுள்ள தென்னம் பாளையைக் கொண்டு மேற் பட்டை நீக்கி உள்ளிருக்கும் அரிசிகளை மாத்திரம் யெடுத்து வெய்யலில் உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்த பொடி பலம் (5) தண்ணிவிட்டான் கிழங்கு கருவேலன்பிஞ்சு கரு விலிப்பிஞ்சு நெருஞ்சிவித்து இவைகளை உலர்த்தி சமனம் கொண்டிடித்த தூள்பலம் (5) சற்கரை பலம் (5) யாவும் ஒன்ருய்க்கலந்து சீசாவில் வைத்துக்கொண்டு மேற்படி வித மாக பாலில் பிரயோகித்து அருந்தவும் போகத்துக்கின்பந் தரும். சுக்கிலம் கட்டும். 10-20-நாள் கொள்ளவும்.

## கரசராட்சதப் பொடி.

| | |
|---|---|
| ஆடாதோடை | சிறுகடுக்காய் |
| கோஷ்டம் | வழுதலைவேர் |
| திப்பிலி | முடக்கத்தான் |
| வசம்பு | சிறுநாகப்பூ |
| நெல்லிக்காய் | வல்லாரை |
| மிளகு | |

இவையாவும் சமனிடைகொண்டு உலர்த்தியிடித்து சூர ணித்து வைத்துக்கொண்டு வேளைக்கு (1) விராகனிடையாக இருவேளையும் பசும் நெய்யில் குழைத்துத்தின்னவும். நீரும் வியாதிகள் அஸ்தி சூடு காவரட்சி யீளை புகை யிருமல் தொண் டைக் கம்மல் சிணுக்கிறுமல் கோழை மூலச்சூடு இவைகள் தீரும். இச்சாபத்தியம்.

## தந்தப்பொடி.

கண்டங்கத்திரி பொடுதலை இரண்டும் நிழலில் உலர்த்தி பொன் வரலாய் வறுத்து வைத்துக்கொண்டு உப்பு பொன்னுங்கொட்டையும் சமன்போட்டு வறுத்துயாவும் வொன்ருய்ப் போட்டுயிடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொண்டு அந்தி சந்தி பல்துலக்கிவரில் பல்லுநோய் அசைதல் குத்தல் கடுத்தல் சிழ் இரத்தம் யாவும் நீங்கும்.

## சுக்குப்பொடி.

தேரிய மாவுசுக்கு கொண்டுவந்துலர்த்தி யிடித்து சூரணித்து அதிற்பாதியிடை சக்கரைசேர்த்து சிசாவில்வைத்துக் கொண்டு வேளைக்கு திருகடி பிரமாணமாக அந்தி சந்தி 10, 20, 30, 40-நாள் சாப்பிட்டுவர தேகத்திலுள்ள வாய்வுகள் யாவும் கண்டிக்கும் பசிதீபன மூண்டாகும்.

## மேகப்பொடி.

பூங்காயும் படிகாரமும் சமனிடைகொண்டு கல்வத்திலிட்டு மைபோலரைத்து சிசாவில்வைத்துக்கொண்டு திருகடி பிரமாணம் இருவேளை வெண்ணெயில் மத்தித்து சாப்பிட வெள்ளை பெரும்பாடு தேக அனல்சூடு இவை தீரும். இச்சா பத்தியம் படிகாரத்தைநெருப்பிலிட்டு பொங்கவைத்துசேர்த்துக்கொள்ளவும்.

| | |
|---|---|
| ஏலம் | திப்பிலிமூலம் |
| சுக்கு | அதிமதுரம் |
| திப்பிலி | குருசானிவோமம் |
| மிளகு | அமுக்கிருவேர் |
| கிராம்பு | கசகசா |
| ஓமம் | லவுங்கம்பத்திரி |
| வாலுளுவை | கொத்தமல்லி |
| ஜாதிக்காய் | பேரீச்சு |
| சீரகம் | முந்திரிகை |

இவைகளை வகைக்கு கால்பலம் வாங்கி இளவறுப்பாக வறுத்து வைத்துக்கொண்டு மேல் பாணிசீவிய இஞ்சியை பில்லைபில்லையாக அறுத்து உலர்த்தி 10-பலம் நிறுத்தெடுத்து நெய்யில்வறுத்து முன் மருந்துடன் போட்டு இடித்து சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து சீனிசக்கரை 10-பலம் போட்டு கலந்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் வேளைக்கு திருகடிபிரமாணம் தேனில் குழைத்துசாப்பிடவும் 10-20 நாள் இருவேளை சாப்பிட வாய்வு பித்தம் அஜீரணம்யாவும் தீரும் வாய்வாசம்வீசும் சீதளங்காணுது இதைசதா நெய்யில்குழைத்து அந்தியில் மாத்திரம் தின்றுவந்தாலும் மேற்படி குணம்செய்யும்.

பொடிவகை சிட்கா முற்றிற்று.

---

# கண்டாவிழ்த சிட்கா

## சீதபேதிக்கு மருந்து.

அத்திக்காயை வேகவைத்து அதின்சாறு அறையாழாக்கு பிழிந்து துட்டிடை மிளகு பொடித்துப்போட்டு துட்டிடை பசும் வெண்ணை போட்டு கலக்கி கொடுக்கவும் தீரும். இப்படி இரண்டுவேளை செய்யவும்.

## சீதபேதிக்கு வேறு மருந்து.

லவுங்கப்பட்டை பலம் (1) கசகசா பலம் (1) கொத்தமல்லி பலம் (1) பனங்கற்கண்டு பலம் (1) இவை நாலும் பொடித்து நெய்யை அடுப்பிலேற்றி லேகியம்போல் கிண்டி இரு வேளையுமாக (5) நாள் சாப்பிட நிவர்த்தியாகும். புளி மிளகாய் ஆகாது.

## மூலசூட்டுக்கு மருந்து.

துத்தியிலை வெங்காயம் சிறுபயறு மூணும் சமபாகஞ் சேர்த்து வேகவைத்து நெய்விட்டுக்கிளறி சாப்பிடவுந்தீரும். 6-வேளை தின்னவும்.

## சீதபேதிக்கு வேறு உபயோகம்.

பாத்துமுட்டையை வேகவைத்து காரமில்லாமல் புட்டிட்டு போதுமானமட்டும் எருமை வெண்ணெயில் காய்ச்சி நெய்விட்டுப்பிசைந்து சாப்பிடவும் இருவேளை மூன்றுநாளில் தீரும்.

## பல்லசைவுக்கு மருந்து.

படிகாரம் பலம் அறை கரியுப்பு பலம் அறை படிகாரத்தை நெருப்பிலிட்டு யெரித்து யெடுத்துக்கொண்டு இரண்டையும் ஒன்றாய்க்கூட்டி அறைத்து எப்பொழுதும் பல்லு துலக்கிவரவும்.

## பல்லுகளில் ரத்தம்வருதலுக்கு பொடி.

கரியுப்பும் சேராங்கொட்டையும் சமமாயெடுத்து கலசத்திலிட்டு மேற்கலசம்மூடி சீலைமண்செய்து 5அல்லது10வரட்டியில் புடம் போட்டெடுத்து பல்துலக்கி வரவும். இரத்தம் வருதல் உடனே தீரும்.

## பல்வலிக்கு வேறு மருந்து.

பெருங்காயம், சீரகம், திப்பிலி, மிளகு, ஓமம், இந்துப்பு, கருஞ்சீரகம், கரியுப்பு இதுகள் வகைக்கு பலம் கால் யெடுத்து இடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு பல் துலக்கி வரவும். ஈறுகட்டுதல், சதை வளர்தல், சீழ் வருதல் நோய் குத்தல் யாவும் தீரும்.

## பல்வலிக்கு வேறு மருந்து.

சீக்காய் அறைத்து பின்னக்காயளவு யெடுத்து அதே திட்டம் துவரையிலையை அறைத்து இரண்டும் ஒன்ருய்ப் பிசைந்துக்கொண்டு இந்த அளவுக்கு கற்பூரமும் கரியுப்பும் பொடித்து ஷை அறைத்த மருந்து யாவும் பிசைந்து பில்லை தட்டி அடுப்பில் வெரும் சட்டிவைத்து அதில் பில்லையை வைத்து யெரித்து நன்ருய்க் காய்ந்தவுடன் யெடுத்து பொடித்து வைத்துக்கொண்டு பல் துலக்கி வரவும் வலிதீரும்.

## அறையாப்புக்கு மருந்து.

மூக்குரொட்டை வேரை அறைத்து பின்னக்கா யளவெடுத்து காலாழாக்கு நெல்லெண்ணையில் கறைத்து குடிக்கவும் இப்படி மூன்று நாள் செய்யவும் மீன் கருவாடு புளி புகையிலை லாகிரிவஸ்து இவைகள் ஆகாது.

## வாய்வுகட்டிக்கு உஷ்ணவாய்வுக்கும் மருந்து.

உத்தாமணி சமூலம் பிடுங்கிவந்து கழுகிப்போட்டு உப்பு போடாமல் அவித்து சுடுகிற சாதத்தில்போட்டு பிசைந்து சாப்பிடவும். இப்படி 3-நாள் 6-வேளை செய்யும் இச்சாபத்தியம்.

## அறையாப்பு கட்டிக்கு வேறு மருந்து.

கெவுரிபாஷாணம் 4குன்றிமணி யெடை யெடுத்து ஊமத்தஞ்சார் விட்டறைத்து இராவிக்கி கட்டியின்பேரில் தடவி படுத்துக்கொள்ளவும். உடைந்த பிறகு வேப்பங்கொழுந்து கொஞ்சம் துளி மஞ்சள் துளி வசம்பு நறுக்கி விளக்கெண்ணெயில் புரட்டி பில்லை தட்டிவைத்துக் கட்டவும் 2-3-வேளையில் தீரும்.

## கல்லடைப்புக்கு மருந்து.

எருக்கன் பூவின்மொக்கு 7-எடுத்துவந்து சுண்ணாம்பு போடாமல் வெத்திலை பாக்குடன் வைத்து தின்னவும். இப்படி 2 அல்லது 3 வேளையில் கல்லுவிழும்.

## புகையிருமலுக்கு மருந்து.

தாளியிலை ஒருபிடி கொண்டுவந்து சட்டியில் போட்டுக்கிண்டி பசும் வெண்ணை ஒரு பலம் போட்டுக்கிண்டி காலை மாலையும் மூன்றுநாள் தின்னவும் புகையிருமல் தீரும்.

## சுகபேதிக்கு மருந்து.

கடுக்காய் 1-நெல்லிக்காய் கொஞ்சம் அவிரி ஆவாரை மூணுவிரல் கொண்டது இதுகளை நருக்கி அறைத்து சக்கரை போட்டு பிசைந்து சாப்பிடவும் பேதியாகும்.

## நீர்கடுத்துப்போவர்களுக்கு நீரிழிவுக்கும் மருந்து.

சாதிக்காய், கிராம்பு, சாதிலிங்கம், ஊசிகாந்தம், ஊமத்தம் விரை இவை சமனெடை கொண்டுவந்து வருத்து அத்துடன் அபின் ஒரு விராகனெடைபோட்டு ஊமத்தஞ் சார் விட்டரைத்து தூதளங்காய்ப் பிரமாணம் உண்டை செய்து நிழலிலுலர்த்தி வெந்நீரிலாவது தேனிலாவது சாப்பிடவும். பித்தம் பிடித்தவர்களுக்கும் சவுக்கியமாகும். நீரிழிவு, மூலக்கடுப்பு, வாதபித்தம் இதுகள் விட்டோடிப்போம் இச்சாபத்தியம்.

## ஆராப்புண்ணுக்கு புகை.

சாம்பிராணி, வெள்ளைப்பூண்டு, தோல், கருவேப்பிலை, நொச்சியிலை இதுகளைபொடிசெய்து புண்ணுக்கு புகைபிடிக்க ஆரிப்போகும்.

## புண்ணுக்கு கட்டு.

வெள்ளாட்டுப் புழுக்கையை சிறுபிள்ளைகள் மூத்திரம் விட்டரைத்து பில்லை தட்டி ஆராத புண்ணுகளின்பேரில் வைத்துகட்ட ஆரிப்போகும்.

## மேகப்புண்ணுக்கு மருந்து.

பெண்கள் மாதவிடா யாகும்போது உதிரச்சீலை சம்பாதித்துக்கொண்டுவந்து நெருப்பிலிட்டுக் கரிக்கி ரிணத்தின் பேரில் போட காயம் ஆரும். அல்லது

## வேறு மருந்து.

படிகாரங் கொண்டுவந்து நெருப்பிலிட்டு பொரித்து புண்ணின்பேரில் தூவிவைக்க ஆரிவிடும் அல்லது

## வேறு மருந்து.

துத்தியிலையை அறைத்து புண்ணில் வைத்து கட்டினாலும் ஆறிவிடும் அல்லது.

## வேறு மருந்து.

மஞ்சள் பொடிசெய்து புண்ணின்பேரில் தூவிவந்தாலும் ஆறிவிடும் அல்லது.

## வேறு மருந்து.

எட்டிப்பழும் இரண்டுகொண்டுவந்து நல்லெண்ணையில் வறுத்து அல்லது நன்ருய் வேகவைத்து கல்வத்திலிட்டு அறைத்து பஞ்சில்துவட்டி புண்ணின்மேல்போட ஆறிவிடும்

## மாதவிடா யில்லாதவர்களுக்கும் பிள்ளையில்லாதவர்களுக்கும் பெண்கள் வயற்று வலிக்கும் மருந்து.

மலைவேம்புச்சார், தனிமஞ்சள் சார் அதாவது பச்சை மஞ்சள்சார் நல்லெண்ணை இம்மூன்றும் சமனெடை சேர்த்து காலை வேளையில் காலாழாக்குவீதம் மூன்று நாள் கொடுக்க பிள்ளையில்லாதவருக்கு பிள்ளையுண்டாம். மாதவிடாய் நாளில் வயிற்றுவலியுந் தீரும்.

## தேக அனலுக்கு மருந்து

அதிமதுரம் அரைபலங் கொண்டுவந்து வெந்நீர் விட்டரைத்து கலக்கி கொடுக்கவும். அந்தி சந்தி இரண்டு நாள் கொடுக்க தணியும்.

## சூட்டிலிருமலுக்கு மருந்து.

அதிமதுரம், கடுக்காய், மிளகு, இவை மூன்றும் சமனிடைச் சேர்த்து இளம்வறுப்பாய் வறுத்து பொடித்து சூரணித்து தேனில் திருகடிப்பிரமாணம் குழைத்துக் கொடுக்க நிவர்த்தியாகும். இப்படி (3) நாள் செய்யவும்.

## அறையாப்புக்கு மருந்து.

எலுமிச்சம்வேர் சத்திச்சாரணைவேர் இரண்டும் அரைத்து கெச்சக்காய் பிரமாணம் நல்லெண்ணையில் குழைப்பி சாப்பிடவும் தீரும். இப்படி (3) நாள் கொள்ளவும்.

## இருமலுக்கு மருந்து.

கடுக்காய் தோல் கொடி முந்திரிப்பழம் வகைக்கி பலம் (2) ஒன்றாய் சேர்த்திடித்து சாப்பிடவும். (3)நாள் கொள்ள தீரும்.

## நீர்யெரிவு அல்லது சுருக்குக்கு.

படிகாரம் பொரித்துக்கொண்டு பூங்காவிக்கல் இரண்டும் சமனெடைசேர்த்து வைத்துக்கொண்டு வேளைக்கு யேழு குண்டுமணி யளவு யெடுத்து (கால் ஆழாக்கு) பசும் பாலில் கலக்கி சாப்பிடவும். இப்படி 6-வேளை சாப்பிடவும்.

## முலைப்பால் சுரக்க மருந்து.

கோவையிலை வேண்டியது கொண்டுவந்து தண்ணியில் அலம்பி பிழிந்து யெடுத்து போதுமான நெய்யில் போட்டு வதக்கி அப்பொழுது வெள்ளைப்பூண்டு கொஞ்சம் நரிக்கிப் போட்டு காலையில் கால்வயறு கீரை சாப்பிடும்படி கொடுக்கவும். பிறகு ஒருமணிநேரம் பொழுத்து ஆகாரம் யெதுவேணுமோ கொடுக்கலாம். இப்படி மூன்று நாள் கொடுக்கவும். பால் கெங்கைபோல் சுரக்கும்.

## வயற்றில் இறந்தபிள்ளை வெளிகாண மருந்து.

அதிமதுரம் தேவதாரம் வகைக்கு பலம் (10) வெந்நீர் விட்டரைத்து உள்ளுக்கு கொடுக்க பிள்ளை கீழேவிழும்.

## மேற்படி வேறுமுறை.

வசம்பு பெருங்காயம் முலைப்பால் விட்டரைத்து அடிவயற்றிலும் முழங்கால்களிலும் தடவ பிள்ளை கீழேவிழும்.

## காது செவிட்டுக்கு மருந்து.

முருங்கைவேறும் கொண்ணைவேறும் சமமாய் யெடுத்திடித்து சார்பிழிந்து கண்ணில் ஒரு துளிவிடவும். இப்படி இருவேளையும் (3) நாள் கொடுக்கவும்.

## கண்திறவாத காய்ச்சலுக்கு

கெஞ்சா குடிக்கிற சிமிளியின் துவாரத்திலிருக்கும் அழுக்கை எடுத்துவந்து கடலை பிரமாணம் உருட்டி ஒரு வெற்றிலையில் மடித்துக்கொடுக்கவும் இப்படி இருவேளையும் 3-நாள் கொடுக்கவும்.

## நல்லபாம்பு விஷத்திற்கு.

சிந்தில்வேரும் புளிச்சக்காடியும் சேர்த்தரைத்து பின்னக்காய் வீதம் கொடுக்கவும். சாந்தியாம் பிறகு தக்கின அவுஷதங்கள் செய்துக்கொள்ளவும்.

## எவ்வித பாம்பு விஷத்திற்கும்:

எவ்விதமான பாம்பு கடித்தபோதிலும் உடனே புகையிலையை வாய் கொண்டமட்டும் மென்று தின்னவும். வாய் கிட்டிவிட்டால் புகையிலையை அரைத்து ஆழாக்கு ஜலத்தில் கரைத்து பல்லைநீக்கி உள்ளுக்குசெலுத்திவிட்டால் பேதியில் விஷம் நீங்கும் வாந்தியும் ஆகும். மஞ்சள் கரைத்ததுபோல் விஷநீர்கள் வந்துவிடும். பிறகு தக்கின அவுஷதங்கள் மெதுவாய் செய்துக்கொள்ளலாம்.

## வாந்திபேதிக்கு.

அரிக்கால் ரூபாயிடை அபினி அரிக்கால் ரூபாய் யிடை கற்பூரம் இரண்டும் உள்ளங்கையில் வைத்து கசக்கி உருண்டையாய் கொடுத்துவிட்டால் சாந்தியாகும்.

## மூளை மூலத்திற்கு.

கோவை யிலையைக் கொண்டுவந்து அறைத்து பில்லை தட்டி இராத்திரியில் ஆசனத்தில் வைத்து (3)நாள் அல்லது (5) நாள் கட்ட தீரும்.

## மேகப்புண்ணுக்கு.

போடுதலையைக் கொண்டுவந்து மஞ்சள் சமம் வைத்து மைபோல் அரைத்து புண்ணின்மேல் வைத்துக்கட்டவும். 3, 4, 5, வேளையில் தீரும்.

## ஊர்சுத்து அல்லது நெகசுத்துக்கு மருந்து.

காட்டுப்புருவின் பச்சை மலம் கெச்சக்காயளவு இலந்தம்பிலை (3) மருதணியிலை (7) இந்த (3) தினுசும் நெகிழ அறைத்து போடவும். சீக்கிரம் வலிவாங்கிப்போகும்.

## நீரழிவுக்கு மருந்து.

| | | |
|---|---|---|
| தேத்தாங்கொட்டை | விராகனிடை | 10 |
| கடுக்கா | விராகனிடை | 10 |
| ஆவாரம்விரை | விராகனிடை | 5 |
| விளாம்பிசினி | விராகனிடை | 5 |

இவைகளை யுலர்த்தி இடித்து சூரணஞ்செய்து மூன்று பாகமாக்கி நிதம் ஒரு பாகங்கொடுத்து பசுமோரில் கலந்து காலையில் சாப்பிடவும். இச்சாபத்தியம்.

## மயிர் உதிர.

அரிதாரம் இரண்டுபங்கு சுண்ணும்பு ஒருபங்கு இரண்டும்சேர்த்து தண்ணீர் விட்டரைத்து மயிர் வேண்டாத இடத்தில் தடவி சற்றுநேரம் பொருத்து கழுவிப்போடவும்.

## உதிரக்கழிச்சலுக்கு.

கலைமான் கொம்பு சீவின பஸ்பம் அரையணு யிடையெடுத்து (கால் பலம்) பசும்பாலில் போட்டு நன்ருய்காய்ச்சி ஒரு யெலுமிச்சம்பழச்சார்விட்டு கலக்கி கொடுக்கவும்.

## சாதாரண பேதிக்கு.

புளியாரை வாழைப்பூ சமயிடைதூக்கி யிடித்துபிட்டவியல் அவித்து தேன்குத்தி பிசைந்து கொடுக்கத்தீரும். இப்படி (2, 3) வேளை செய்யவும்.

## மலஜெலக்கட்டுக்கு.

| | | |
|---|---|---|
| சுக்கு | பலம் | கால் |
| மிளகு | பலம் | கால் |
| உள்ளி | பலம் | கால் |
| இலைக்கள்ளிவேர்ப்பட்டை | பலம் | ஐந்து |

இவைகளை காயவைத்து இடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு குழந்தைகளின் பலமறிந்து முலைப்பாலிலாவது வெந்நீரிலாவது அரை அல்லது 1-காசுயிடைபோட்டு குலிக்கி வார்க்கவும். உடனே மலஜெலம் உதயமாகு இச்சாபத்தியம்.

## முக்கல் அல்லது வயற்றுக்கடுப்புக்கு.

| | | |
|---|---|---|
| ஜாதிக்காய் | விராகனிடை | 2 |
| அதிவிடையம் | ,, | 2 |
| சன்னராஷ்டம் | ,, | 2 |
| ஓமம் | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 |
| பருத்தி இளம்பஞ்சு | ,, | 1 |

இந்த ஆறுவகையும் நிறுத்தெடுத்து குளிர்ந்த ஜெலம் விட்டரைத்து கட்டித்தயிரில் பிசைந்து கொடுக்கவும் இப்படி 2 அல்லது 3 வேளை கொடுக்கத்தீரும். இச்சாபத்தியம்.

## வெள்ளை இரத்தமேகம் மஞ்சாவெள்ளைக்கு

| | | |
|---|---|---|
| மிளகு | பலம் | 1 |
| பூண்டு | பலம் | அறை |
| பனவெல்லம் | பலம் | 2 |
| குமுளம்வேர்ப்பட்டை | பலம் | ஒண்ணறை |

இவைகளைக் காயவைத்திடித்து வஸ்திரகாயஞ் செய்து பனவெல்லங் கலந்து பிசைந்து பெரிய இளந்தங்காய்ப் பிரமாணம் அல்லது காலணு யெடை சாப்பிடவும். இப்படி (3)

நாள் கொள்ளவும். கடும்பத்தியம். மறுபத்தியம் மூன்று நாளும் சுட்டபுளி வறுத்தவுப்பு ஏழாவதுநாள் ஓமந்தேய்த்து தலை முழுகவும்.

## லிங்கப்புத்துக்கு.

| | | |
|---|---|---|
| வெள்ளை குங்கிலியம் | விராகனிடை | 2 |
| பளிங்குசாம்பிராணி | ,, | ஒண்ணரை |
| சுத்திசெய்தகெந்தகம் | ,, | 1 |
| பூரம் | ,, | 1 |

இவைகளை கல்வுத்திலிட்டு பொடித்து படை நெருப்பி லிட்டு லிங்கரிணத்திற்கு 2, 3, 4, வேளை புகைகாட்டவும்.

## பால் வெள்ளைக்கு.

| | | |
|---|---|---|
| தேத்தாங்கொட்டை | பலம் | 1 |
| கடுக்காய்பிஞ்சு | ,, | 1 |
| ஆவாரைவிரை | ,, | 1 |

இவைகளை வறுத்துயிடித்து வஸ்திரகாயஞ் செய்து 3-பங்காக்கி ஒருபங்கை இராத்திரிக்கு அரையாழாக்கு எருமை தயிரில் போட்டுவைத்துக் காலையில் யெடுத்து வடிகட்டி மருந்தை அரைத்து சாப்பிடவும். இப்படி மூன்றுநாளும் செய்யவும் தீரும். இச்சாபத்தியம்.

## தோஷ மாத்திரை

| | | |
|---|---|---|
| அதிமதுரம் | பலம் | 1 |
| தேவதாரம் | ,, | 1 |
| கடுக்காய் | ,, | 1 |
| வசம்பு | ,, | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 |
| அதிவிடையம் | ,, | 1 |
| குங்குமப்பூ | விராகனிடை | 4 |

இவைகளை யிடித்து வஸ்திரகாயஞ்செய்து போடுதலைச் சார் ஒரு நாளைக்கு ஒரு ஜாமமாக நாலுநாள் அரைத்து குன்றின்மணிப் பிரமாணம் மாத்திரைசெய்து சீசாவில் வைத்துக் கொண்டு தேனில் ஒரு மாத்திரை கொடுக்கவும். இச்சாபத்தியம் மருந்து இருவேளையும் கொடுக்கவேண்டியது.

## பாலசுரக் குளிகை.

| | | |
|---|---|---|
| லிங்கம் | விராகனிடை | 5 |
| பூரம் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |

முலைப்பால்விட்டு மூன்று ஜாமம் அரைத்து சிறு பயர் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலுலிலர்த்தி சீசாவில்வைத்துக்கொள்ளவும்.

மாந்த சுரத்திற்கு ஆடாதோடை சாற்றிலிடவும்
வாத சுரத்திற்கு நொச்சி கியாழத்திலிடவும்
சேத்துமசுரத்திற்கு குப்பைமேனி கியாழத்திலிடவும்
சீதசுரத்திற்கு குப்பைமேனி சிறுநீரிலிடவும்
வலஜெலம் அடைத்தால் கடுக்காய் கியாழத்திலிடவும்

இந்தப்படி மூன்று நாள் கொடுக்கவும். இந்த மூன்று நாளும் உப்பு புளி தள்ளிவிடவும். தாயாரும் பத்தியமிருக்க வேண்டியது.

## கோரோஜன உருண்டை.

| | | |
|---|---|---|
| கோரோசனை | பலம் | 1 |
| சாம்பிராணி | பலம் | 1 |
| திப்பிலி | பலம் | 2 |

இவைமூன்றும் கியாழம்விட்டு இரண்டுசாமம்அரைத்து சுண்டாக்காயளவுஉருண்டைசெய்துகாலையில் ஒருஉருண்டை வீதம் 3, 4, 7, நாள் சாப்பிடவும் அஜீர்ணம் சூலை சூதக வாய்வு சலவை சன்னி அக்கினிமந்தம் இவை தீரும். கெர்ப்பந்தரிக்கும் இச்சாபத்தியம்.

## கட்டிகள் கரைய.

| | | |
|---|---|---|
| மஞ்சள் மொழுக்கு | பலம் | அரை |
| வெள்ளை பாஷாணம் | ,, | 1 |

அடுப்பின்மேல் சட்டியை வைத்து மெழுக்கை போட்டு உருகிவருஞ் சமயத்தில் பாஷாணத்தைப் பொடித்துப் போட்டு நன்ருய்க்கிளரி இரக்கவும் ஆரியபிறகு பில்லை தட்டி கட்டியின்மேல் வைத்துக்கட்டவும் கட்டி கரையும் பிறகு பேதிக்கு சாப்பிடவும்.

## பித்தத்தால்கண்ட உதடு நாக்கு வெடிப்புக்கு

மருமாங்காயிலையை அறைத்து பின்னக்காயளவுயெடுத்து ஆழாக்கு பசும்பாலில்கலக்கி காலையில் வெரும் வயற்றில் சாப்பிடவும் இப்படி (3) நாள் கொள்ளவும் பத்தியம் பாலும் சாதங்கொள்ளவும் ஏழாநாள் தலைமுழுகவும்.

## எலிகடி 18-க்கும் மருந்து.

கரும் பூனை மலம் கெச்சக்காயளவு புட்டி வெள்ளம் அவ்விடைசேர்த்து பிசைந்து கொடுக்கவும். இப்படி காலை மாலை இருவேளையுமாக (3) நாள் கொடுக்கவும் கடும்பத்திய மிருக்கவும். மருபத்தியம் சுட்ட புளி வருத்தஉப்பு (7) வது நாள் தலைமுழுகவும்.

## பூனைகடிக்கு மருந்து.

பூனை கடித்தவர்க்கு குப்பைமேனி வேரின்பட்டைக் கொண்டுவந்து அறைத்து கெச்சக்காய் பிரமாணம் பசும் பாலில் கலக்கி கொடுக்கவும். பத்தியம் மேல்கூரியபடி செய்க.

## குமரி கற்பம்.

சிகப்பு சோத்துக்கத்தாழை கொண்டுவந்து மேற்றேல் சீவி நடுப்பங்கை யெடுத்து (7) தரம் கழுவி பின்னக்காயளவு எடுத்து பனங்கற்கண்டு போட்டு பிசைந்து தலைமாட்டில் வைத்து விடியகாலை (4) வது ஜாமத்தில் சாப்பிடவும். இப்படி (40) நாள்கொள்ளவும் திரேகம் குளிர்ச்சிகொடுக்கவும் இந்திரியம் விர்த்தியாகும் மேகம் நீங்கும் கண்கள் செவ்வலரி பூப்போலாகும் தேகத்தில் வாசம்வீசும்.

## ஆராத சூட்டிற்கு எண்ணை

| | | |
|---|---|---|
| நல்லெண்ணை | படி | கால் |
| பசும்நெய் | படி | கால் |

இரண்டும் ஒன்றாய் கலந்து சித்திரமூல வேரின்பட்டை அரைபலம் ஜெலம் விட்டரைத்து ஷையெண்ணையில் கலக்கி அடுப்பிலேற்றி மெழுகுபதமாய் காய்ச்சி யிறக்கிவைத்துக் கொண்டு துட்டிடைப் பிரமாணம் காலையில் கொடுக்கவும். கால், அரை, முக்கால் ஒரு மண்டலம் கணக்காக கொடுத்துவரில் சகல மேகங்களும், கண்டமாலை, புண், சிரங்கு, கிரந்தி, தடிப்பு, சகல வாய்வு, சூலை, கை கால் குத்தல், குடைச்சல் தீரும். பத்தியமில்லை.

## கற்றாழை நாற்றத்திற்கு

| | | |
|---|---|---|
| சிவகரந்தை | விராகனிடை | 7 |
| நன்னாரிவேர் | ,, | 6 |
| கோரைக்கிழங்கு | ,, | 5 |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | 5 |

இவைகளை பன்னீர் விட்டரைத்து அக்குளின் உதட்டில் தளமாய்ப் பூசிவைத்து மறுநாள் வழித்து மனிதர்கள் நடக்கும் வழியில் போட்டுவிடவும். இப்படி 5-10 நாள் செய்யதீரும்.

## வாந்திபேதிக்கு சூரணம்

எட்டிமரத்தின்வடவேர் கொண்டுவந்து மேற்றோலை எலுமிச்சம்பழச் சாற்றிலாட்டி காயவைத்து யெடுத்து சூரணமாக்கி வைத்துக்கொண்டு சிவன்வேம்பு தும்பைசெடி சமூலங் கொண்டுவந்து கியாழமிட்டு ஷை சூரணத்தில் 3 சிட்டிகை போட்டு கொடுக்கவும். பேதி தீரும் பேதியதிகமானால் மறுபடியும் கொடுக்கவும் இப்படி 3-விசைகொடுக்கவும். பத்தியம் வருத்த அரிசி கஞ்சி கொடுக்கவும் பேதி வாந்தி வியர்வை காதடைப்பு யாவும் தீரும்.

## அறையாப்புக்கு

சாரணைவேர் கொடி எலுமிச்சம்வேர் இரண்டும் சமயிடை யெடுத்து குளிர்ந்த நீர்விட்டரைத்து தாணிக்காய் பிரமாணம் சாப்பிடவும். இப்படி இருவேளையும் மூன்று நாள் தின்னத்தீரும்.

## பெண் மதமடங்க

பொரித்தெடுத்த படிகாரபற்பம் இரண்டு பங்கு கற்கண்டு பொடி ஒருபங்கு இவ்விரண்டு கலந்து நாற்பது நாள் கொடுக்க பெண்மத மடங்கும் வேளைக்கு திருகடி பிரமாணம் கொடுக்கவும்.

## சுக பேதிக்கு

பசுங்கோமியம் கொண்டுவந்து காய்ச்சி வைத்துக்கொண்டு எத்தனைதரம் பேதியாக வேண்டுமோ அத்தனைதரம் சாப்பிடவும். ஒரு தடவைக்கு (கால் ஆழாக்கு)

## கண்டமாலைக்கு

வெள்ளை காக்கட்டான்வேர் அவுரிவேர் வேப்பந்துளிர் மஞ்சள், வசம்பு இதுகள் கூட்டியரைத்து இளம்வென்னீரில் கலக்கி சாப்பிடவும். 6 அல்லது 9 வேளையாம்.

## மேகத்திற்கு அல்லது வெள்ளைக்கு

புங்கன் கொழுந்து கொண்டுவந்து நெகிழ அறைத்து நல்லெண்ணைவிட்டு கூட்டிக்கொடுக்கவும் மேகம் வெள்ளை இவைகளை வருத்த உப்புக்கூட்டவும்.

## தீராத வெள்ளை

கவுடி 15-கொண்டுவந்து யிடித்து வஸ்திரகாயம்செய்து பீங்கானில் போட்டு அந்தபொடி முழுகும்படி எலுமிச்சம் பழச்சார்விட்டு ஒரு இராத்திரி பனியில்வைத்து காலையில் வெள்ளைவாங்கிய மணிதனை குந்தவைத்து இரண்டு குடம் தண்ணீர் தலைக்கு யூத்திவிட்டு தலை துவட்டினவுடன் ஷை எலுமிச்சம்பழரசத்தின் தெளிவைமாத்திரம் யிருத்து உள் ளுக்கு கொடுக்கவும். இப்படி 3-நாள் கொடுக்கவும்.

## அறையாப்பு கட்டிக்கு

எருக்கன்செடியின் வடக்கேபோகிற வேறும் களிமண்ணும் சமயிடைவைத்து அறைத்து கட்டியின்மேல் பூசக் கரையும் இப்படி 3-வேளையாம்.

### வேறு முறை.

பாவாட்டம்வேரும் பூலப்பூவும் அறைத்துப்பூசக் கறை யும். இப்படி 3-நாள்.

### வேறு முறை.

முருங்கை வேர்ப்பட்டையும் புழுங்கலரிசியும் உப்பும் சேர்த்தறைத்துக்கட்ட கட்டி கறையும். இப்படி 3-நாள்.

### வேறு முறை.

காஞ்சிரங்கொட்டையின் விறை, மிளகு, மஞ்சள், சீர கம் இவை சமன் கொண்டறைத்து கட்டிமேற்பூசக் கறையும்.

## வேறு முறை.

ஆடுதின்னாப்பாளை சமூலம் வசம்பு இரண்டும் நன்றாய் யிடித்து கட்டிமேல் வைத்து அதின்மேல் கட்டி யளவுக்கு வட்டமாக ஓடுபில்லை வைத்துக்கட்ட கட்டிகரையும் 3 வேளை. பத்தியமில்லை.

## இளம்பிள்ளை வாய்வுக்கு

| | | |
|---|---|---|
| சங்கம் குப்பிச்சார் | படி | கால் |
| விளக்கெண்ணை | படி | கால் |

இவை யிரண்டும்கலந்து அடுப்பேற்றி யெரிக்கும்போது சுத்திசெய்த வாளக்கொட்டை 8-இதை ஷை எண்ணை விட்டு மைபோலறைத்து காய்கிற யெண்ணையில் கலந்து கடுகுபதமாய் காய்ச்சி யிரக்கிவைத்துக்கொண்டு காலையில் ஒரு உச்சிகாண்டி வீதம் 7-நாள் கொடுக்கவும். தாயும் பிள்ளையும் கடும் பத்தியமிருக்கவும். பால் மறந்த பிள்ளையானல் தாய்க்கு பத்தியமில்லை.

## சாரமெழுக்கு

சாரம் ஒரு கட்டியாகக்கொண்டுவந்து சிரியசீலையை பழரசத்தில் நனைத்து சாரத்தின்மேலே சுத்தி விளக்கில் கொளுத்தவும். இப்படி 5-விசைக்கொளுத்த யீரமற்றுப்போகும். பிறகு கொடிக்கள்ளிப் பால்விட்டு அறைத்து கள்ளியளவு யெடுத்து காலையில் சாப்பிடவும். 6 - விசை பேதியாகும். பித்த நீர் யாவும் வாந்தியாகும் பாண்டு வீக்கங்கள் முதல் பித்தம் 48-வாதம் 87-ம் தீரும். 5, 7, 10-நாள் வீதம் சாப்பிடவும். இச்சாபத்தியம்.

## கெற்ப ஸ்திரீகட்கு மலஜெலம் கட்டினல்

பழைய நெல்லிவற்றல் பலம் 1-யிடித்து கியாழம் வைத்து சமனளவு பசும் பால்விட்டு சாப்பிடவும் உடனே மல ஜலம் உதயமாகும் ஜலப்பு செய்யாது தேகம் சவுக்கியமாம்.

## பிரசவமான பின்பு அழுக்கு தங்கினால்

கற்பூரம் சாம்பிராணி லிங்கம் சமனிடைகொண்டு அரைத்தால் மெழுகு போலாம் குன்றிமணிப் பிரமாணம் 3-நாள் காலையில் கொடுக்கவும் வயற்றில் உதிரச்சிக்கல் முதலிய அழுக்குகள் விலகும். இச்சாபத்தியம்.

## மேற்படி அழுக்கு அகலகியாழம்

முள்ளியிலை மூங்கயிலை நாயுருவியிலை வாழைசருகு கண்டங்கத்திரி தூதுவேளை இவை சாம்பலாக்கி கருஞ்சீரகம், ஓமம், கரிமஞ்சள் வெடிக்கவிட்டு ஷை சாம்பலைப்போட்டு கால்படி ஜலம் விட்டு அரிக்கால் படியாகயிறக்கி 1 அல்லது 2-வேளை கொடுக்கவும். அழுக்கு தள்ளும்.

## செங்கரப்பானுக்கு

ஆதொண்டை
முதியார்கூந்தல்
முருக்கிலை
அரசம்யிலை
நெருஞ்சி
கொத்தான்
சின்னியிலை
யீருள்ளி

இவைகளை வகைக்கி ஒவ்வொரு பிடியெடுத்து பஞ்சுப்போல் நன்றாய் யிடித்து கால்படி பசும் நெய்யில் போட்டு நன்றாய் சிவந்து பதமாய்க்காய்ச்சி வடித்துக்கொண்டு காலையில் ஒரு சிறுகரண்டி வீதம் 5, 7, நாள் கொடுக்கவும் தீரும். இச்சாபத்தியம்.

## குழந்தைகட்குண்டாகிய பாண்டுகாமாலை சேர்க்கை

எருமைத்தயிர் படி கால் இந்த பாலில எருமைச்சாணி பால் மூன்று துளிவிட்டு 7-மிளகு பொடி பண்ணிபோட்டுக் கலக்கி 3-நாள் கொடுக்கவும். கடும்பத்தியம். 7 - வது நாள் ஸ்தானம் செய்துவைக்கவும். 8-வது நாள் வருத்த உப்புக் கூட்டவும்.

## மஞ்சள் காமாலைக்கு

அதிமதுரம் சங்கன்வேர் இரண்டும் சமனிடைகொண்டு பழச்சார் விட்டரைத்து பசும்பாலில் கரைத்துகொடுக்கவும்.

## வேறு முறை

கீழாநெல்லியும் மணத்தக்காளியும் சமன்கொண்டு தயிரிலரைத்துக் கொடுக்கவும் தீரும்.

## குழந்தைகள் புஷ்டியாக

| | | |
|---|---|---|
| தண்ணிவிட்டான்கிழங்குச்சார் | படி | கால் |
| வெள்ளாட்டுப்பால் | ,, | கால் |
| தேங்காய்ப்பால் | ,, | கால் |
| பசும் நெய் | ,, | கால் |

இவைகளை ஜெலம் பழகிய பாண்டத்தில் ஒன்றாய்விட்டு கற்கண்டுபொடி 5-பலம்போட்டு சிறுகஎரித்து பாகுபதத்தில் யிரக்கிவைத்துக்கொண்டு காலையில் ஒரு காண்டிவீதம் கொடுத்துவரவும். இச்சாபத்தியம்.

## குழந்தைகட்கு பேதிகண்டால்

புளியாரை வாழைப்பூ சமன் கொண்டிடித்து பிட்டவியல் யவிழ்த்து தேன்குத்தி பிசைந்து கொடுக்கவும் தீரும்.

## குழந்தைகட்கு மலஜலங்கட்டினால்

| | | |
|---|---|---|
| இலைக்கள்ளிவேர்பட்டை | பலம் | ஐந்து |
| சுக்கு | ,, | கால் |
| மிளகு | ,, | கால் |
| உள்ளி | ,, | கால் |

இவைகளைக் காயவைத்துயிடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு குழந்தைகள் பலமறிந்து முலைப்பாலிலாவது வென்னீரிலாவது ஒரு காசுயிடை கொடுக்கவும். இப்படி இரண்டு மூன்று வேளையில் தீரும்.

## குழந்தைகட்கு மூக்கல் வயற்றுக்கடுப்பிற்கு

பருத்திப்பிஞ்சு, ஜாதிக்காய், கிராம்பு, அதிவிடையம், சன்னராஷ்டகம், ஓமம், இலந்தை இவை சமன் கொண்டிடித்து ஜெலம்விட்டு நெகிழ அரைத்து தயிரில் கலந்து கொடுக்கவும் தீரும். இச்சாபத்தியம்.

## லிங்க எண்ணெ.

3-நாள் மூலேப்பாலிலூரிய அரைபலம் லிங்கத்தை கல்வத்திலிட்டு கொஞ்சம் விளக்கெண்ணெ குத்தி இரண்டுசாமம் அரைத்து $1\frac{1}{2}$-சேர் விளக்கெண்ணெயில் கலக்கி ஒரு நாள் சூரியபுடம் வைத்து தினம் அறை பலம் வீதம் 7-அல்லது 10-நாள் சாப்பிடவும். புளி, புகை, போகம் ஆகாது மேகப்படை, கரிமேகம், வெள்ளை, நீர்சுருக்கு தீரும்.

## வெள்ளை எண்ணெ.

வெள்ளைக் காக்கணும் வேர்பட்டை யெடுத்து யிடித்து பொடித்து அறைத்து நல்லெண்ணெயில் போட்டு காய்ச்சி வடித்து 5-அல்லது 7-நாள் சாப்பிடவும். இச்சாபத்தியம் காரமாகாது 3-வித வெள்ளை தீரும்.

## சூதக வாய்வுக்கு

| | | |
|---|---|---|
| கொள்ளுக்காய் வேளைவேர் | பலம் | 2 |
| சுக்கு | பலம் | கால் |
| அதிமதுரம் | பலம் | கால் |

இவைகளை யிடித்து அறைப்படி ஜெலம்வைத்து ஆழாக்கு கியாழமாக யிரக்கி கொடுக்கவும் இப்படி இரண்டுவேளை கொடுக்க சூதகம் வெளிப்படும்.

## சூதக கட்டு உடைய

இலுப்பைப் புண்ணக்கு கொண்டுவந்து ஆர்க்கப் பொடிசெய்து சிறு சீலையில் புன்னைக்காயளவு முடிந்து நிதம்

பக் குழையில் ஒருஜாமம் புகுத்திவைக்கஉடனே சூதகக்கட்டு உடையும் அப்படி உடையாவிட்டால் முன்செய்தமாதிரியாக வேறு புண்ணுக்கு கொண்டுவந்து ஷை மாதிரியாக 3-நாள் செய்ய 5-மாதத்து கருவாயிருந்தாலும் வெளிப்படும்.

## சகலமேகத்திற்கு எண்ணை

| | | |
|---|---|---|
| சித்தாமணக்கெண்ணை | படி | $1\frac{1}{2}$ |
| நல்சங்கன்சாறு | ,, | அரை |
| பீச்சங்கன்சாறு | ,, | அரை |
| கழுதைலத்திச்சாறு | ,, | அரை |
| சிறுசெப்படைச்சாறு | ,, | அரை |
| வெள்ளவெங்காயச்சாறு | ,, | அரை |
| பொற்றலைக்கையான்சாறு | ,, | அரை |
| மஞ்சள் காசனுங்கள்ளிச்சாறு | ,, | அரை |

இந்த சாறுவகையாவும் சித்தாமணக்கெண்ணையுடன் கலந்து சூரிய புடம் வைத்து அப்படி யிருக்கும்போது,

| | | |
|---|---|---|
| சிவனார்வேம்பு | பலம் | $1\frac{3}{4}$ |
| பரங்கிச்செக்கை | பலம் | $1\frac{1}{4}$ |
| மிளகு | பலம் | 1 |
| ஜாதிக்காய் | பலம் | 1 |

இவைகளை யிடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக் கொண்டு இத்துடன் எருக்கன் கிழங்கு (இரண்டரை) பலம் ஆகாசகருடன் கிழங்கு (இரண்டரை) பலம் இவ்விரண்டும் சிறுக அரிந்து சித்தாமணக்கெண்ணை குத்தி பொன் வறுப் பாக வறுத்து யிடித்து வஸ்திரகாயஞ்செய்து முன் பொடி யுடன் யாவும் சாறுவகையூத்தி பாண்டத்தில் போட்டுகலக்கி அடுப்பேற்றி மெழுகு பதமாய்க் காய்ச்சிவைத்துக்கொண்டு காலையில் சிறுகாண்டி வீதம் 7 - நாள் வட்டமாக இரண்டு முறை கொடுக்கவும். கடும்பத்திய மிருக்கவும். இச்சாபத்தி யத்தில் சுட்டபுளி வறுத்த வுப்பு சேர்க்கவும். குஷ்டம், வெள்ளை, கருப்பு, மேகம், புண், கொருக்கு ரிணம் இவைகள் தீரும்.

## உப்புச்சுன்னம்.

முளகரணைவேரை அரைத்து குகைசெய்து உலாத்தி அந்த குகையில் உப்பை கொட்டி மேல்பில்லைமூடி சீலைமண் செய்து 7, 9, வரட்டியில் புடம்போட்டெடுக்க சுன்னமாகும் இதம் திருகடி பிரமாணம் நீராகாரத்தில் அல்லது இஞ்சி சூரணத்தில் சுக்கு சூரணத்தில் சாப்பிட வாய்வு அசீரணம் இவை தீரும்.

## சூதக வாய்வுக்கு தும்மட்டிக்காய்.

ஆத்து தும்மட்டிக்காய் 50-கொண்டுவந்து நவ்வாலாக பிளந்து 5-வகை உப்பும் 5-பலம் கொண்டுவந்து போட்டுக் குலுக்கி மூணு மாதம் சிவக்கப்போட்டெடுத்து உலர்த்தி வைத்துக்கொண்டு வேண்டியபோது கெச்சக்காய் பிரமாணம் யெடுத்து அவ்வளவு பனவெட்டுகூட்டி அறைத்து அந்திச் சந்தி சாப்பிடவும். 2-விசை பேதியாகும். உப்பு புளி சேர்க்கலாம் இச்சாபத்தியம் சூதக வாய்வெல்லாந்தீரும்.

## கை கால் குடைச்சலுக்கு.

பூமி சக்கரைக்கிழங்கை ஜலத்திலறைத்துப் பூசிவர தீரும். அல்லது மருதணிப்பூவை நல்லெண்ணையில் காய்ச்சி பூசவும் தீரும்.

## பசிதீபனத்திற்கு.

புதினாரசம் பலம் (1) பழரசம் (3) கூட்டி கொஞ்சம் சக்கரை சேர்த்துக் குடிக்கவும்.

## மேகசாந்தி.

சீந்திலுப்பு, மூங்கிலுப்பு, ஏலக்கா, கற்கண்டு இவை சமன்கூட்டி யறைத்து சுண்டக்காய் பிரமாணம் தின்றுவரவும் இச்சாபத்தியம்.

## சாராய வெரி நீங்க.

கொத்தமல்லி விரையை காடிவிட்டரைத்து உள்ளுக்கு கொடுக்கவும் படிகாரத்தூளிட்டு சரீஷ் சர்பத்தும் கொடுக்க வெரி தீரும்.

## குழந்தை வயத்து புழுக்கள்விழ.

பூவசரம்விரையை கொண்டுவந்து சக்கரை நெய் பால் சேர்த்து அறைத்து கெச்சக்காய்வீதம் கொடுக்கத் தீரும்.

## வாய் வேக்காட்டிற்கு.

மருதாணி யிலையை பஞ்சுபோலிடித்து இரண்டு கொத்து போட்டு அறைப்படி ஜெலம் விட்டு நாலுக்கொன்றாய்க்காச்சி வடித்து இருவேளையும் வாய் கொப்பளிக்கத்தீரும்.

## கோழை யிருமலுக்கும் கபங்கட்டினாலும்

5-பலம் தேனை நன்றாய்க்காய்ச்சி சுடுகையில்தானே மிளகுதூள் 1-தோலா போட்டு படிகாரத்தூள் 1-தோலா போட்டு குலிக்கி வேளைக்கு கால் தோலாவீதம் கொடுக்கவும்.

## இரத்த வெள்ளைக்கு.

கெச்சக்காயிலை ரசம் அறைபலம் 3-பலம் தயிரில்கலந்து காலையில் கொடுத்து சிறுலவுங்கப்பட்டை கியாழம் வைத்து மாலையில் கொடுக்கவும். இப்படி 3-நாள் கொடுக்கவும் கடும் பத்தியம்.

## மலம் உதைய.

சரக்கொன்றை புளி, சக்கரை, உப்பு, மிளகா இவைகளை வைத்து துகையல் செய்து சாப்பிடவும் மலம் தாராளமாய் உதையும்.

## விக்கல் தீர

லவுங்கப்பட்டையும் ருமஸ்தகி இரண்டும் சமனிடைக் கொண்டு கியாழம் வடித்துக்கொடுக்க தீரும்.

## பல்கூச்சம் நீங்க.

பேராமுட்டிவேரை அந்தி சந்தி 10-நாள் அல்லது இருபது நாள் மெல்லவும் தீரும்.

## வயற்றுக் கடுப்புக்கு.

ஆலம்விழுதை யெருமைத் தயிரிலரைத்து 1 - பலம் யெடுத்து பழரசம் ஒரு பலம் கூட்டிக்கொடுக்கத்தீரும்.

## மேகச்சூடு தணிய.

துத்தியிலையை கியாழம் வடித்து பாலுஞ் சக்கரையுங் கலந்து கொடுக்கவும் இப்படி இருவேளையும் 5-நாள் அல்லது 7-நாள் கொள்ளவும்.

## மலச்சிக்கல் நீங்க.

துத்தியிலையில் வெங்காயம் சிறுபயறு சமமாயிட்டு சமைத்து இரு வேளையும் சாப்பிடவும் அல்லது இரவில் சதா தின்னலாம்.

## நீர்சுருக்கு தீர.

துத்திவேர் பலம் 3, திராட்சிப்பழம் பலம் ஒன்றை நல்ல ஜெலத்தில் கியாழம் வடித்து இரண்டுவேளை கொடுக்கவும் தீரும்.

## சரீரம் நன்றாக.

சுக்கு, கடுக்கா, திப்பிலி, வாலுழுவை சமன் கொண்டு தேனிலரைத்து தூதளங்காய் பிரமாணம் கொடுத்துவரவும். நன்றாய் தீரும்.

## வாய்வு சீதளத்திற்கு.

மலைத்தேன் 8-பலம் யெடுத்துக் காய்ச்சி அதில்அபினி தோலா அரிக்கால் கூட்டி கரைத்து ஓமம் பலம் 3-ஜாதிக்கா

ஜாபத்திரி பவளம் வகைக்கி பலம் அறை தூளாக்கி அத்துடன் போட்டு பிசைந்து புளியங்கொட்டைப் பிரமாணம் கொடுத்து வரவும்.

## சூட்டிற்கு கியாழம்.

குலாப்பு தோலா அறை, சோம்பு கடுக்கா அதிமதுரம் சிந்தில் தண்டு வகைக்கு தோலா அறை இடித்து கூட்டி கியாழமிட்டு கொடுக்கவும். 5-வேளையில் மிக சவுக்கியமாம்.

## அந்திமாலைக்கு.

அதிகாலையில் கிருஷ்ண துளசியிலை ரசம் இரண்டு துளியாக 3-நாள் நேரத்திலிடவும் தீரும்.

## கண்களில் துர்மாமிச வளர்ச்சிக்கு.

பத்து கெஞ்சா விரையை ஊசியில் குத்தி தீபத்தில் கருக்கி எள்ளெண்ணையில் குழைத்து மைதீட்டுவதுபோல் கண்களில் தீட்டிவரவும் சுவஸ்தமாம்.

## காது மந்தத்திற்கு.

பூண்டு திரிகளை பஞ்சுபோல் பிடித்து சிலையில் முடித்து விளக்கில் காட்டிப்பிழிய தைலமிறங்கும் அத்தயிலத்தை 3-வேளை காதில் பிழியவும். மந்தம், சீழ் இவைகள் தீரும்.

## சகல பேதியும் நிருத்த

சூடன் விராகனிடை 1 மிளகு விராகனிடை அறை சுக்கு விராகனிடை அறை லவுங்கம் மாசா 1-கூட்டி நல்ல ஜெலத்தி லரைத்து புன்னக்கொட்டை வீதம் உள்ளுக்குக் கொடுத்து மீதிஜெலம் இரண்டு முணர் கொடுக்கவும் இப்படி 5-வேளையில் தீரும்.

ஜாபத்திரி பவளம் வகைக்கி பலம் அறை தூளாக்கி அத்துடன் போட்டு பிசைந்து புளியங்கொட்டைப் பிரமாணம் கொடுத்து வரவும்.

## சூட்டிற்கு கியாழம்.

குலாப்பு தோலா அறை, சோம்பு கடுக்கா அதிமதுரம் சிந்தில் தண்டு வகைக்கு தோலா அறை இடித்து கூட்டி கியாழமிட்டு கொடுக்கவும். 5-வேளையில் மிக சவுக்கியமாம்.

## அந்திமாலைக்கு.

அதிகாலையில் கிருஷ்ண துளசியிலை ரசம் இரண்டு துளியாக 3-நாள் நேரத்திலிடவும் தீரும்.

## கண்களில் துர்மாமிச வளர்ந்திக்கு.

பத்து கெஞ்சா விரையை ஊசியில் குத்தி தீபத்தில் கருக்கி எள்ளெண்ணெயில் குழைத்து மைதீட்டுவதுபோல் கண்களில் தீட்டிவரவும் சுவஸ்தமாம்.

## காது மந்தத்திற்கு.

பூண்டு திரிகளை பஞ்சுபோல் பிடித்து சீலையில் முடித்து விளக்கில் காட்டிப்பிழிய தைலமிறங்கும் அத்தயிலத்தை 3-வேளை காதில் பிழியவும். மந்தம், சீழ் இவைகள் தீரும்.

## சகல பேதியும் நிருத்த

சூடன் விராகனிடை 1 மிளகு விராகனிடை அறை சுக்கு விராகனிடை அறை லவுங்கம் மாசா 1-கூட்டி நல்ல ஜெலத்தி லறைத்து புன்னக்கொட்டை வீதம் உள்ளுக்குக் கொடுத்து மீதிஜெலம் இரண்டு முணர் கொடுக்கவும் இப்படி 5-வேளையில் தீரும்.

## குளிர்த்தி நெய்

பசும் நெய் பலம் 8, எள்ளெண்ணை பலம் 8, இதில் இரண்டு பலம் சித்திரமூலம்வேர் பட்டையை அரைத்துப் போட்டு கலக்கி பொன்னிரமாகக் காச்சி வடித்து காலையில் அரைபலம் வீதம் நீங்கலாக மற்றவை புசிக்கலாம். உட்சூடு, கொதிப்பு, வெப்பம், யாவுந்தணிந்து தேகம் குளிர்த்தியாம்.

## கம்மல்கொண்ட சரீரம் நன்றாக

| | | |
|---|---|---|
| தேன் | பலம் | 5 |
| கரிச்சாலைச்சார் | ,, | 4 |
| எலிமிச்சம்பழச்சார் | ,, | 1 |
| இஞ்சிச்சார் | ,, | இரண்டரை |

இவையாவும் ஒன்றாய்க்கலந்து சூரியபுடம்வைத்து சுண்டிய பிறகு நாள் ஒன்றுக்கு கால்பலம் வீதமாக உட்கொண்டு வரவும். சூடான வஸ்துவாகா.

## சகல படைகட்கும்

| | | |
|---|---|---|
| ரோஜனம் | பலம் | ஒண்ணரை |
| குழாகெந்தகம் | ,, | அரை |
| பொரித்த வெண்காரம் | ,, | முக்கால் |
| சீனாகற்கண்டு | ,, | அரிக்கால் |

இவையாவும் கல்வத்திலிட்டு வெள்ளாட்டுப் பாலால் அரைத்து பில்லை தட்டி உலர்த்தி வைத்துக்கொண்டு வேண்டியபோது நல்ல ஜெலத்திலிழைத்து படைகள்மீது தடவி வரவும் நீங்கும்.

## பித்தத்திற்கு.

அத்திப்பட்டை ஒருபிடி, தோப்பு நெல்லிக்காய் ஒரு பிடி, வாழைப்பழம், 4, இதுகளை உரலில் போட்டு யிடித்து சாரம் பிழிந்து அந்த சாரத்தில் சீனிகற்கண்டுதூள் கொஞ் சம்போட்டு குலிக்கி கொடுக்கவும். பித்த மயக்கம், ஒக்காளம், உடனே தீரும்.

## எலிகள் சாக

அரிதாரமும் பூனைமலமும் சிறுநீர்விட்டரைத்த ஒரு யெலியைப்பிடித்து அதின்மேலில் முழுமையும்பூசி விட்டு விட இதை முகரும் எலியெல்லாம் சாகும்.

## சுரத்தால் கண்டதாகத்திற்கு.

கற்படகம் அதிமதுரம் அக்கிராகாரம் இம்மூன்றும் சம னிடைகொண்டிடித்து கியாழம் வைத்து பாதியாகக் காய்ச்சி யிரக்கி கொடுக்கவும் தீரும்.

## பல் புழு சாக.

காயம் இந்துப்பு அன்னபேதி சமநிடைகூட்டி தண்ணீ ராலரைத்து உருண்டைசெய்து நோய்தரும்பல்லில்வைத்து அடக்க புழுக்கள்சாகும்.

## மேகரிணக் களிம்பு

வீரம் பூரம் லிங்கம் இரதம் கெந்தி மனோசிலை அரிதா ரம் முதார்சிங்கு சமனிடைக்கூட்டி கல்வத்தில் பொடித்து பசும் வெண்ணெயில் குழைத்து எவ்வித ரிணங்ககளில் தடவி னலும் ஆரிவிடும்.

கண்டாவிழ்த சிட்கா முற்றிற்று.

கடவுள் துணை.

# பற்பவகை சிட்கா.

## பச்சைவெட்டு வீரபற்பம்.

| | | |
|---|---|---|
| வீரம் | பலம் | 1 |
| பொரிகாரம் | ,, | 1 |
| இரசம் | ,, | 1 |

இவை கல்வத்திலிட்டு மூன்று சாமம் அரைத்து வைத்துக்கொண்டு பனைவெல்லத்தில் பணவிடை கொடுக்கவும். புண், வெள்ளை, கிரந்தி, கட்டி, சூலை, சூதக வாய்வு, மலக்கட்டு யாவும் தீரும். 3-நாள் கொள்ளவும். புளி யாகாது. சுட்ட உப்பு கூட்டவும்.

## தாளக பற்பம்

தாளகம் ஒரு கட்டியாக யெடுத்து கால்படி கல் சுண்ணம்பு மத்தியில் வைத்து பனங்கள்ளினால் தாளிக்கவும். இப்படி பத்துவிசை தாளித்துயெடுத்து சரக்கொன்றை சாம்பல் அரைப்படி எடுத்து அதன் மத்தியில் மேல்படி கட்டியை வைத்து கலம்போல 4-ஜாமம் யெரித்து எடுத்து சீசாவில் வைத்துக்கொண்டு திரிகடுகு சூரணம் வெண்ணெ இவ்வித அனுபானங்களிலிட இருமல் சீதளம் கபம் இவைகள் தீரும். இச்சாபத்தியம்.

## கல்நார் பற்பம்

ஒருபலம் சீமைகல்நார் கொண்டுவந்திடித்து தூளாக்கி காட்டாமணக்குப்பால் விட்டறைத்து பில்லை தட்டி யுலர்த்தி ஓட்டில் வைத்து ஓடுமூடி சீலைமண்செய்து (அரை) கெஜபுடமாக இரண்டு புடம் வைக்க பற்பமாம். வெண்ணெயில் பணவிடை கொடுக்க சூடு வெப்பம் தணியும் பல் விளக்கிவர தந்தம் இருகி கெட்டிப்படும்.

## ஷை வேறுமுறை

வேண்டியமட்டும் கல்நார் கொண்டுவந்து கோழியவரை யிலையை அரைத்து தளமாய் அப்பி (50) வரட்டியில் புடம் போட பற்பமாம். வெள்ளை, மேகம், சூடு யாவும் தணியும் தந்தநோய் யாவும் தீரும்.

## ஷை வேறுமுறை

சீமை கல்நார் கொண்டுவந்து ஒரு கலயத்தில் வைத்து அது முழுகும்படி முள்ளாங்கிச் சார்விட்டு மேலோடு மூடி சீலைமண் செய்து (50) வரட்டியில் புடமிட்டெடுக்க கருத் திருக்கும் கத்திரிக்கா யிலையை அரைத்து மேலுக்கு அப்பி (50) வரட்டியில் புடம்வைக்க கொக்கிரகுபோல் வெளுத்து பற்பமாம். ஷை வியாதிகள் யாவும் தீர்க்கும்.

## சிங்கி பற்பம்

கலைமான் கொம்பு (10) பலம் கொண்டுவந்து யிழைப் புளியால் சன்னமாக யிழைத்து ஒரு பானையில் அறை திட் டம் அகத்திக்கீறையை போட்டு படியவைத்து அதன் மேல் யிழைத்த கலக்கொம்பைப் பரப்பி அதற்கு மேலும் ஷை கீரையை பானை நிரம்ப போட்டடைத்து அடுப்புமேலேற்றி (60) நாழிகை யெரித்தெடுத்து உலர்த்தி நீர்முள்ளி யிலையை அறைத்து சீவிய கலைக்கொம்புக்கு தளமாய் அப்பி முத்தை செய்து (30) கைவரட்டியில் புடம்போட பற்பமாம் யெடுத்து கல்வத்திலறைத்து சீசாவில் வைத்துக்கொண்டு நெய்யில் பணவிடைகொடுக்க மார்நோய் இடுப்பு நோய் நாவரட்சி வெள்ளைமேகம் இருமல் நீங்கும் இச்சாபத்தியம்.

## வெள்ளை பாஷாண பற்பம்

வெள்ளைபாஷாணம் ஒரேகட்டியாக 1-அல்லது 2-பலம் கொண்டுவந்து ஒருபாண்டத்தில் பிரமகண்டிச்சார் முக்கால் படி பிழிந்து அடுப்பிலேற்றி ஆடு பாஷாணத்தை நூல்கயற் றினால் கட்டி அந்த சாரத்தில் படாமல் தொளாந்திரமாகக்

கட்டி வாய்புரம் ஓடுமூடி சிலைமண்செய்து 3-சாமம்யெரிக்கவும் பிறகு இறக்கி ஆறியபின் அவிழ்த்து யெடுத்துக்கொண்டு மலைக்காச்சல் முறைக்காச்சல் முதலிய விஷசுரங்கள் யாவும் தீரும்.

## வெள்ளை பற்பம்

ஒருபலம் ஊதுகட்டி வெள்ளியை மூசையிலிட்டு உருகும்போது ஷை யிடை மகிழம்பூ சார்விடவும் மடிந்து போகும் இறக்கி ஆறவைக்க பொடியாயிருக்கும் அதை கல்வத்திலிட்டு ஷை சார்விட்டு 3-ஜாமம் அரைத்து பில்லைதட்டி காயவைத்து முக்காவேளை சமூலம் அறைத்து பில்லைக்கு கவசம் செய்துலர்த்தி குகையிலிட்டு சில்லுமூடிசீலைமண் செய்துலர்த்தி 100-யெருவில் புடம்போட்டு 3-ம் நாளெடுக்க பற்பமாம். சீசாவில் வைத்துக்கொண்டு பசும் வெண்ணையில் பணவிடைகொடுக்கவும் புளிபுகை ஆகாது காசம் இரத்த காசம் மந்தாரகாசம் இளைப்பிருமல் மேகம் யாவும் திரும்.

## வெள்வங்க பற்பம்

வெல்வங்கம் வாலைரசம் கற்பூற சிலாசித்து இம்மூன்றும் வகைக்கு 3-கழஞ்சு நிறுத்தெடுத்து சுண்ணும்பு நீர்விட்டு (2) ஜாமம் அறைத்து பில்லைதட்டி உலர்த்தி யெடுத்து ஓட்டில் இட்டு சீலைமண்செய்து 40-யெருவில் புடம்போட்டெடுத்து மறுபடியும் ஷை நீராலறைத்து பில்லைதட்டி காயவைத்து 50-யெருவில் புடம்போட்டு ஆறியபின்னெடுக்க தும்பைப் போலிருக்கும் சீசாவில் வைத்துக்கொள்ளவும்.

## இதற்கனுபானம்

மாதளம்பூ யிதழ் உலர்த்தியது 2-பலம் அவ்விடை சீரகம் கூட்டி யிடித்து சூரணம் செய்து திருகடி சூரணத்தில் பசும்நெய்விட்டு குழைத்து பணவிடை பற்பம் கூட்டி குழைத்து இருவேளையும் தின்னவும் மூலம் யெலும்புருக்கி மேகமூலம் சளி மூலம் முதலிய நவமூலமும் தீரும். இச்சா பத்தியம்.

## கெந்தி பற்பம்

சிறுசின்னியிலையை அறைத்து குகைசெய்து உலர்த்தி அதில் கெந்தியை போட்டு வாய்மூடி மண்குகைக்குள் வைத்து மேற்குகைமூடி சீலமண்செய்து உலர்த்தி முழப் புடத்திலிட பற்பமாகும். யெடுத்து சீசாவில் வைத்துக்கொண்டு நெய்தேன் இந்தஅனுபானங்களில் பணவிடைகொடுக்க மேகவூரல், தடிப்பு, குட்ட விரணம் இவை தீரும். பத்தியம் நோயின் திடமறிந்து வைக்கவும்.

## சிலாசித்து பற்பம்

(5) பலம் கற்பூரசிலாசித்துக்கொண்டுவந்து சிறுசெறுப் படைச்சாற்றூலாட்டி பில்லை தட்டி காயவைத்து ஓட்டில் வைத்து மேலோடுமூடி சீலமண் செய்து (50) யெருவில் புடம்போட்டு ஆரியபின் யெடுத்து மேற்படி சாற்றூலாட்டி லேசாக பில்லைத்தட்டி புடம் போடவும். மூன்று விசை புடம் போட்டெடுத்து சீசாவில் வைத்துக்கொண்டு பித்த யெரிவு பித்த வெட்டை நீர் கடுப்பு இவைகட்கு பசும் வெண்ணையில் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## வெண்கார பற்பம்

ஒரு கலையத்தில் மேற்படி சிலாசித்து பற்பம் கால்தரமிட்டு அதன்மேல் சுத்திசெய்த வெண்காரமிட்டு மேலும் சிலாசித்து இட்டு ஒடு மூடி சீலமண்செய்து உலர்த்தி 10-யெருவில் புடம் போடவும். நீர்கட்டு சுருக்கு அனல் இவைகட்கு வெண்ணையில் பணவிடை கொடுக்கவும். தீராவிட்டால் முள்ளாங்கி யிடித்த சாத்தில் இரண்டு பணவிடை கொடுக்க உடனே நீர்கட்டு உடையும் இச்சாபத்தியம்.

பற்பவகை சிட்கா முற்றிற்று.

---

# தைலவகை சிட்கா



## பொதிகை முனி.

### மகாசந்தனுதித் தைலம்.

| | | | |
|---|---|---|---|
| எள்ளெண்ணெ படி | 1-கால் | கதலிக்கட்டைசாறு | அரிகால் |
| செவ்விளநீர் | கால் | முழுமுசுக்கைசாறு | ,, |
| பசும்பால் | கால் | சிறுகீரைச்சாறு | ,, |
| நெல்லிக்காய்சாறு | அரிக்கால் | வல்லாரைச்சாறு | ,, |
| கீழாநெல்லிச்சாறு | ,, | தாழைச்சாறு | ,, |
| நெரிஞ்சிச்சாறு | ,, | பழம்பாசிச்சாறு | ,, |
| கற்றாழைச்சாறு | ,, | கரிச்சாலைசாறு | ,, |
| தாமரைச்சாறு | ,, | மயர்மாணிக்கம்சாறு | ,, |
| பொன்னாங்கன்னிச்சாறு | ,, | | |

இவைகள் நிறைப்படி யெடுத்து சாறுமுதலிய எண்ணெ வகை யாவும் பெரிய பாண்டத்திலூத்தி கீழ்மேலாக நன்றாய் துழாவி சூரிய புடம் வைத்துவிட்டு உடனே.

| | |
|---|---|
| அற்றிகட்டை | கொம்பரக்கு |
| கோறைக்கிழங்கு | சித்தாமுட்டி |
| சந்தனத்தூள் | பேராமுட்டி |
| கூவிளம் | தேவதாரம் |
| கார்போகி | செம்புராப்பட்டை |
| பச்சிலை | செவியம் |
| நன்னாரி | சிறுதேக்கு |
| முதியாகூந்தல் | வெட்டிவேர் |

| | |
|---|---|
| சீந்தில் | மல்லிகைக்கொடி |
| சிரியாநங்கை சமூலம் | வெத்திலைக்கொடி |
| சின்னிசமூலம் | ஆலம்விழுது |
| ஓரிலை தாமரைக்கொடி | பனைவேர் |
| குருவேர் | மஞ்சட்டிவேர் |

இவைகள் யாவும் வகைக்கு (4) பலமாக எடுத்து பஞ்சு போல் யிடித்து நீர்பழகிய பாண்டத்திலிட்டு (4) படி ஜலம் விட்டு அரைப்படி கியாழமாக யிறக்கி மேற்படி சாறு வகை நிரைந்திருக்கும் பாண்டத்திலூத்தி அடுப்பேற்றி சிறுதீயாக யெரித்துக்கொண்டிருக்கையில்,

| | |
|---|---|
| மிளகு | கஸ்தூரி மஞ்சள் |
| வெள்ளை மிளகு | தாளிச்சபத்திரி |
| வால்மிளகு | லவுங்கம் |
| கோஷ்ட்டம் | ஜாபத்திரி |
| கிச்சிலிக்கிழங்கு | அதிமதுரம் |
| சீரகம் | திப்பிலி |
| கருஞ்சீரகம் | சடாமாஞ்சி |
| கார்போகிவித்து | கரிபாசி |
| செண்பகமொக்கு | ஏலம் |
| சித்தாமுட்டி | ஜாதிக்காய் |
| பெருங்கிழங்கு | பரிங்கிச்செக்கை |

இவைகள் யாவும் வகைக்கி 3-விராகனிடையாக நிறுத்தெடுத்து உலர்த்தியிடித்து வஸ்திரகாயம்செய்து முதல்தரம் பன்னீர் விட்டறைத்து மேற்படி பாண்டத்தில் கலக்கி நன்ருய் துழாவி வாய்புரம் ஓடுமூடி சீலைமண்செய்து மூணுஜாமம் யெரிக்கவும் யெரிப்பது கமலாக்கினியாக யெரித்து ஷ-

ஜாமம் சென்றபிறகு திரந்து நீர்வற்றுவிட்டால் திரும்பியெரித்து நீர் வற்றியபிறகு யிரக்கி சல்லாச்சிலையில் வடிகட்டி பச்சைகற்பூரம், கஸ்தூரி, கோரோசனை, குங்குமப்பூ, வகைக்கு விராகனிடை முக்கால் நிறுத்தெடுத்து கல்வத்தில்பொடித்துப்போட்டு கணபதி முன் வைத்து தூபதீபங்கொடுத்து வைத்துக்கொண்டு நாற்பது நாள் சென்ற பிறகெடுத்து சிரசில் தேய்த்து ஸ்நானம்செய்ய பித்தம் 42-ம் மேகம் 31-ம் வாய்வு, உஷ்ணம், புண், சிரந்தி, தலைபாரம், ஜன்னி, விரணம் யாவும் தீரும். நேத்திரவியாதி 96-ம் நீங்கும் இச்சாபத்தியம் பகல் நித்திரை, புகை, போகம், அதிகநடை இவை கூடாது. 4 அல்லது 5-தலைமுழுக்கு முழுகவேண்டுவது குருமுன்னிற்பார்.

## சிரஸ்நான தைலம்

கூர் யெள்ளெண்ணை படி அறை, அகத்திக்கீரை ரசம் படி அறை இவ்விரண்டும் கூட்டி ரவியில் வைத்து மறுநாள் கோஷ்டம் 1-பலம் அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து ஸ்நானம் செய்து வரவும் குளிர்ச்சிதரும்.

## சாலேசுர தைலம்.

எள்ளெண்ணை வீசை 1, நிலவிளாயிலையை அறைத்து விளாங்காய் பிரமாணம் வில்வப்பழம் சதை விளாங்காய் பிரமாண மிவ்விரண்டும் பசும் பாலில் அறைத்துப்போடவும். ஒரு பலம் சீரகத்தை முலைப்பாலில் அறைத்து போடவும் நன்றாய் கலக்கிக் காய்ச்சி வடித்து ஸ்நானம் செய்துவந்தால் சாலேசுரம் தீரும்.

## பரிசுத்த நேத்திர தைலம்

பன்னிரண்டரை பலம் வில்வப்பட்டையை 1-படி ஜலத்தில்போட்டு எட்டொன்ருக வற்றக்காய்ச்சி யிரக்கி அத்துடன் 15 - பலம் நல்லெண்ணை ஊத்தி அறைத்த சந்தணம் 1-பலம் போட்டு கலக்கி காய்ச்சி வடித்து ஸ்நானம் செய்யவிரல் பித்தம், உஷ்ணம், மேகம், இருமல், மூலரத்தம் இவை நீங்கும். கண்கள் செவ்வலரிப் பூப்போல் தெளிவுண்டாகும்.

## வேங்கைத் தைலம்

வேங்கைப்பட்டைத்தூள் பன்னிரண்டரை பலம் யெடுத்து ஒருபடி ஜெலத்தில்போட்டு ஆழாக்கு கியாழமாகக் காய்ச்சி யிரக்கி தலைமுழுகிவர மண்டையிடி வீக்கம். பீனிசம் வாதம் இவை நீங்கும் தேகம் காந்தியுண்டாகும்.

## வெட்டிவேர் தைலம்

வெட்டிவேர் 10-பலம் முன்போல கியாழம் வடித்து எள்ளெண்ணை 15-பலம் கூட்டி பாலில் அறைத்த அதிமதுரம் 1-பலம் கூட்டி கலக்கிக் காய்ச்சி வடித்து தலைமுழுகிவர பீனிசம், மண்டைசூலை, குட்டம், சொரி, நீர் கோவை, கண் புகைச்சல், கால் நோய் இவை தீரும்.

## வேம்பு தைலம்

நூறு வருடத்திய வேப்பம்பட்டை 23-பலம் ஐந்துபடி ஜலத்தில் போட்டு ஐந்து ஆழாக்கு கியாழமாகக் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு 30-பலம் நல்லெண்ணையில் கூட்டி ஏலம் ஒரு பலம் பொடித்துப்போட்டு காய்ச்சி வடித்து தலைமுழுகிவர சூலை மேக ஊரல் பேய்ச்சொரி முதலானதும் நீங்கும். செங்கரப்பான் புரைப்புண் நீங்கும்.

## சித்திரமூலத் தைலம்

சித்திரமூலம்வேர் பட்டை10-பலம் கொண்டுவந்துஇர ண்டரைப்படி ஜெலத்தில் போட்டுக் காய்ச்சி எட்டொன்ருக கியாழம் வடித்துநல்லெண்ணே 15-பலம் கூட்டி சீரகம் பலம் 1, பசும் வெண்ணே 2-பலம் கூட்டிக் காய்ச்சி வடித்து தலை முழுகிவர ஆனந்த வாய்வு ஸ்திரீ மேகம் சிறு சொரி குட்ட ரிணம் அறையாப்பு கிரந்திபுண் வீக்கம்தீரும்.

## சீரகத்தைலம்

சீரகம் பலம் 25, எட்டு படி ஜெலத்திலிட்டு எட்டுக்கு ஒரு பங்காக காய்ச்சி யிரக்கி 100-பலம் நல்லெண்ணே கூட்டி கார்போக அரிசி 2-பலம் அறைத்துப்போட்டுக்காய்ச்சி தலை முழுகிவர பித்தம், மயக்கம், பித்த வாய்வு, தலை சுத்தல், வாய் நீரூரல் கைகாலெரிவு இவை நீங்கும்.

## கீழா நெல்லித் தைலம்

கீழாநெல்லி சமூலம் 25-பலம் 8-படி ஜெலத்திலிட்டு 8-க்கு 1-ஆ கியாழம் காய்ச்சி வடித்து 100-பலம் நல்லெண் ணேக்கூட்டி சக்கரை 5-பலம் போட்டு காய்ச்சி வடித்து தலை முழுகிவர தலைவலிமுதலிய செவிநோய்கள் பித்தம் உஷ்ணம் பீனிசங்கள் தீரும்.

தைல வகை சிட்கா முற்றிற்று.

---

இன்னூலில் சேர்ந்த

# சரக்குவகை சுத்திகள்

## வீரசுத்தி

ஒரு யிளநீரில் ஒரு களஞ்சி கர்ப்பூரம் பொடித்துப் போட்டு வீரத்தை தொலாந்திரமாகக்கட்டி நீரில் படாமல் கட்டி வாய்மூடி சீலைசெய்து ஒரு ஜாமம் யெரித்து எடுத்துக் கொள்ளவும் சத்தியாச்சு.

## பூரசுத்தி

வெத்திலை மிளகு சமன் கொண்டிடித்து கியாழ மிட்டு அக்கியாழத்தில் பூரத்தை கிளிக்கட்டி மூன்று நாள் வைத்தெடுத்துக்கொள்ளவும்.

## கெவுரி பாஷாணசுத்தி

ஆவின்பால் அல்லது சாணிப்பால் தொளாந்திரங்கட்டி ஒரு ஜாமம் எரித்தெடுத்துக்கொள்ளவும்.

## மனோசிலைசுத்தீ

மனோசிலையை காடியில் கிளிக்கட்டி எரித்தெடுத்து ஆட்டுமூத்திரத்தில் தொளாந்திரங்கட்டி யெரித்தெடுத்துக் கொள்ளவும்.

## தாளகசுத்தி

சிறுவர்கள் மூத்திரம் கால்படியில் கல்சுன்னம் மேனிரசம் பழரசம் இவைகள் கலந்து அடுப்பேற்றி தாளகத்தை கிளிக்கட்டை யெரித்தெடுத்துக்கொள்ளவும்.

## கெந்தக சுத்தி

கெந்தகத்தை நெய்விட்டு உருக்கி பசும்பாலில் சாய்க்கவும். இப்படி பத்துதிரம் உருக்கி சாய்த்து யெடுத்துக் கொள்ளவும்.

## இரசச்சுத்தி

இரசத்தை எருக்கன்பாலில் ஒருநாள் ஊரவைத்து மறுநாள் யெடுத்து செங்கல் பாவிலிட்டு கலுவத்திலரைத்து சீலையில் பிழிந்தெடுத்துக்கொள்ளவும்.

## படிகாரசுத்தி

படிகாரத்தை சிறுநீரில் மூன்று நாள் ஊரவைத்து எடுத்து பொரித்து பிறகு அவிழ்தங்களுக்கு சேர்க்கவும்.

## இருவங்கசுத்தி

வெள்வங்கம் கரிவங்கம் இவைகளை தேங்காய் எண்ணையில் நவாச்சாரத்தூள் தூவி அதில் வங்கத்தைவிட்டு உருக்கி

கோமியம் மோர் காடி இவைகளில் சாய்த்து ஆரியபின் யெடுத்துக்கொள்க. இப்படி 10-விசை உருக்கி சாய்க்கவும்.

## கல்நார்சுத்தி

கல்நாரை கழுதை மூத்திரத்தில் 3-முக்கால் நாழிகை ஊரவைத்து யெடுத்துக்கொள்ளவும். சுத்தியாம்.

## முதார்சிங்குசுத்தி

முதார்சிங்கியை வெள்ளாட்டுக் கோமியத்தில் ஒரு நாழிகை கொதிப்பித்து யெடுத்துக்கொள்ளவும்.

## சிலாசத்துசுத்தி

கற்பூர சிலாசத்தை பழரசத்தில் கொதிப்பித்து எருக்கன் பாலில் 3 - நாழிகை ஊரவைத்து கழுவி யெடுத்துக் கொள்ளவும்.

## வாளசுத்தி

நேர்வாளக் கொட்டையை சாணிப் பாலில் கொதிக்க வைத்து கழுவி யெடுத்து மேலோட்டை நீக்கி பருப்புகளைப் பிளந்து முளைநீக்கி துளி விளக்கெண்ணெயில் வருத்துயெடுத்துக்கொள்ளவும்.

## செங்கொட்டை சுத்தி

சேராங்கொட்டையை சாணிப்பாலில் 3-நாள் ஊரவைத்துக்கழுவி யுலர்த்தி மூக்குவெட்டி நெய்யில் வருத்து யெடுத்துக்கொள்ளவும்.

## சூரணவகைகள் சுத்தி

எவ்வித சூரணங்களையும் பசும் பாலில் யேடுகட்டவியலாக அவித்து நிழலிலுலர்த்தி பிறகு உபயோகப்படுத்தவும்.

## எண்ணெ அல்லது தைலவகைகள் சுத்தி

எவ்வித தைலம் எண்ணெகளையும் தானிய புடத்தில் 20 நாள் வைத்து எடுத்து உபயோகப்படுத்தவும் அல்லது பூமி புடமாக 10-நாள் புதைத்துவைத்து யெடுத்துக்கொள்ளவும்.

**சரக்கு வகை முதற்பாகம் முற்றிற்று.**

உ

முருகன் துணை.

மகாமருத்துவம் பொருந்தியுள

நாற்பத்தி யெண்மர்களீண்டிய

# ஊர்வசி வயித்திய சிட்கா



## இரண்டாம் பாகம்.

### பாயிரம்.

ஊர்வசி வாக்கு

அண்டரண்டம் பரந்துநின்ற ஆதிகாப்பு
ஆதாரமான ஜோதிகாப்பு
மண்டலத்தை யுண்டளித்த மாயோன்காப்பு
மண்பிசையுங்குயவன் மலர்த்தாளே காப்பு
யண்டுயுகச் சீர்தர்மம் தெய்வங் காப்பு
பாரதியினிருபாத பத்மங் காப்பு
எண்டிசையாந் திக்குடைய தேவர் காப்பு
இந்திரனார் பாதமல ரென்றுங் காப்பே.

காப்பாகுங் குணபதியுஞ் சித்திமுத்தி
கந்தனொடு தெய்வானைக் குறமின்னுத்தாள்
தாயானசிவகாமி சிறுபெண்வாலை
தயிரியஞ்சேர் லட்சுமியோ டிளையமாது

மூப்பான வயிரவரும் வீரபத்திரர்
முமமூர்த்தியானவர்க்கும் முறையேபோற்றி
ஆர்ப்பான இந்திராணி கேள்வன்முன்னே
அபிநயக்கும் ஊர்வசியா னறையக்கேளே.

வசிமென்றே வானவர்கள் நித்தம்சூழும்
வாயிரங் கண்ணிந்திரனுர் சபையிலேதான்
இசைநொடியில் மிக்கவளா யிருந்தயானும்
யேழை மதித்தன்னாலே காவிலோர்நாள்
சதியின்றிவனமேகும் புரூரவன்றன்னை
சருவினதா லென்பிழையை சகித்தார்முந்த
பசியின்றி சுரர்கோனைத் திரும்பயானும்
பரதயிசை தன்னாலே பணிந்துவாழ்ந்தேன்.

தேன்சொரியும் அத்திபுரிக் காவிலன்று
திவுகணிகர் புனலாடத் தேர்ந்தகாலை
வான்புகழுஞ் சந்திரகுலத் திலகனுனை
வணங்கணிகர் சந்தணனை வனத்திற்கண்டு
நான்புணர்ந்த குற்றமதால் யோனிக்கண்ணன்
நலிவகலச் சிரகதனை நருக்கச்செய்தாள்
கான்சுரந்தவா றதுபோற் றுயரங்கண்டு
கருணைவளர்சித்தரெனைக் கார்த்திட்டாரே.

கார்த்திட்ட காலாங்கி கலசநாதர்
கமலமுனியூகமுனி கருணுநந்தர்
பார்த்திட்ட போகமுனி சட்டைநாதர்
பதஞ்சலியார் சோரக்கர் பவணந்திசர்

# இரண்டாம் பாகம்

சேர்த்திட்ட புலிப்பாணி யழுகண்சித்தர்
ஜெகம்புகழும் பாம்பாட்டி யிடைக்காட்டீசர்
பேர்த்திட்ட வசிஷ்டரொடு கவுசிகத்தோர்
பிரமமுனியாக யின்னம் பெரியோர்தானே.

தானான வேதகுரு வியாசரோடு
தன்வந்திரி சட்டைமுனி புண்ணாக்கீசர்
கோனான நந்தீசர் அகப்பைச்சித்தர்
கொங்கணவர் குருபாத நதர்மச்சர்
தேனானபரத்துவாசர் கூனக்கண்ணர்
தெளிவருளும்கடுவெளியாம் சித்தர்முத்தர்
பானனரோமரிஷி புஜண்டரோடு
பாராசரமாரிஷியிவரைப் பணிந்தேனையா.

ஐயமற்றதேரையர் புலத்தியீசர்
அந்தமுள்ள சுந்தரா நந்தசித்தர்
செய்யறைத் திருமூலர் கருவூர்நாதர்
சிவவாக்கியரோடு தொழுகண்சித்தர்
துய்யமன நவநாதர் வசுக்களானோர்
தூர்வாசரானசத்த ரிஷிகள்மாரை
பையனவே யான்பணிந்த யிதக்கங்கண்டு
பகாறிய வெகுநூலை பாலித்தாரே.

தாரிலுயர்மனுக்களிட பிறப்பிறப்பை
தான்பேசிவிண்டயனுந் தர்க்கமிட்டு
பேரிலுயர் தாம்தாமே பெரியோரென்று
பூமிமிசை பலபிணியைப் பரவவிட்டு

சீரிலுயர் நான்குசத நான்குநூற்றி
நாற்பத்தி யெட்டெனவே விகற்பமாக்கி
சீரலகவிட்டகுறை வருமைநீங்க
சித்தரெனக் குபதேசம் செய்தவாரே.

வாரகப்பதினெண்ம ரானவாேேர்
வனுக்கிரகம் செய்தபடி வணங்கிக்கேட்டு
சீராகசிலதுமுறை யுபயோகித்து
சிந்தாமல்நடைவழியாய்ச் சிரக்கச்செய்து
தேராமல் பலய்பரும் செய்துக்கொள்ள
தொந்தறையொன் றில்லாமல் திரைகணீக்கி
நேராகஉலகமுழு தென்போரோங்க
நிகழ்த்தினேன் ஊர்வசிநூல் சிட்காவாமே.

ஆமேதான்மாத்திரைகள் சிந்தூரங்கள்
அடைவான பற்பமுதற் கற்கமெண்ணே
தாமேதான் லேகியங்கள் கிருதங்கட்டு
தனித்தனியே வகைபிரித்துத் தண்மையாக
பூமேதான் சிறுமணலூர் தன்னில்மேவும்
புலவன் முனுசாமியின்கூர்புத்திகொண்டு
பாமேதான்முந்திமுதல் காண்டஞ்சொன்னேன்
பதிப்பித்தேனிது ரெண்டாங் காண்டமாமே.

ஊர்வசி வயித்திய சிட்காவின்

பாயிரம் முற்றிற்று.

மகாமருத்துவம் பொருந்தியுள

## நாற்பத்தியெண்மர்களீண்டிய

# ஊர்வசி வயித்திய சிட்கா

| | | | |
|---|---|---|---|
| மீனம் | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
| கும்பம் | இராசி சக்கரம். | | கடகம் |
| மகரம் | | | சிங்கம் |
| தனுசு | விருஷ் | துலாம் | கன்னி |

## விநாயகர் துதி.

### விருத்தம்.

சீர்வளருலகமீதுச் சிறப்புடனுரு மோங்கும்
பேர்வளரூர்வசியின் புகழ்தரும் வயித்தியசிட்கா
நேர்வளர் புவியின்மீது நிகழ்த்திடத் தமிழினாலே
கார்வளர்விநாயகன்றன் கடிமலர்க்காப்புதானே.

## கோசாரப் பலனறியும்படி

## சூரியன் பலாபலன்.

சூரியன்-ஜென்மத்திலாதல் 4-5-7-8-லாதல் நிற்பானா இல் ஸ்தான மாருதல் மான ஆணிவிசாரம் பிரயாணம் தேக

ஜாட்டியம் கலகம் பொருள் விரையம் கண்ணோய் தலைவலி இவைகளுண்டாம் மேற்கூறிய விடந்தவிர மற்ற யிடங்களில் இருக்கில் நன்மை புரிவன் யென்று அரியவும்.

## சந்திரன் பலாபலன்.

சந்திரன்-இரண்டிலாதல் 4-5-8-ல் இவ்விடங்களில் நிற்கில் திரவிய நாசம் வயற்றுநோய் காரியக்கேடு மரணச் சங்கட்டம் மொளுவனம் இவைகளுண்டாம் மற்றயிடங்கள் நன்மையுண்டாம்.

## செவ்வாயின் பலாபலன்.

செவ்வா-ஜென்மமாதல் 2-4-8-10 இவைகளில் நிற்கில் சத்துரு பயம் தனநாசம் துக்கம் தேகாபிமானம் பலவித வியாதியுண்டாம் இது தவிர மற்ற யிடங்களில் நிற்க நனமையுண்டாம்.

## புதன் பலாபலன்.

புதன்-4-6-7-8 நின்று அவனுடன் பாபக் கிரகங்கள் கூடியிருக்கில் பந்தனம் அபிமானம் ரோகம் விரையம் இவ்வைகளுண்டாம் மற்ற யிடங்களில் இருக்கில் நன்மையை தருவர்.

## குருவின் பலாபலன்.

குரு-ஜென்மத்திலாதல் 3-4-6-8-10-12 இவ்விடங்களில் நிற்கில் பயம் ரோகம் விரையம் இடமாறுதல் பீடை இவைகளுண்டாம் மற்ற யிடங்களில் நிற்கில் நன்மையாம்.

## சுக்கிரன் பலாபலன்.

சுக்கிரன்-6-8-10-12 இவ்விடங்களில் நிற்கில் சத்துரு பயம் ரோகம் மனவருத்தம் அழுகை அவமானம் இவைகளுண்டாம் மற்ற யிடங்களில் நிற்கில் நன்மையைத் தருவார்.

## சனியின் பலாபலன்.

சனி—ஜென்மத்திலாதல் 2-6-8-12 இவ்விடங்களில் நிற்கில் பயம் தனஆணி மனதிற் பீடை விரையம் துக்கம் வியாதி பில்லி சூனிய முதலானவைகளால் பிணி யுண்டாம். மற்ற யிடங்களில் நன்மையைத் தருவார்.

## இராகு கேதுகளின் பலாபலன்.

கேது இராகுகள்-4-8-10-5-9-ம் இவ்விடங்களில்நிற்கில் பொருளழிவு வெரி காணும், மனம் போனபடிக்கெல்லாம் பேசுவான் மற்ற யிடங்களில் நிற்கில் நன்மையைத் தருவார்.

---

# முதலாவது

# சுத்திவகை சிட்கா

## மாத்திரை வகை சிட்கா.

### பூபதி மாத்திரை.

| | | |
|---|---|---|
| இரசம் | விராகனிடை | 1 |
| சுக்கு | ,, | 1 |
| கெந்தகம் | ,, | 1 |
| வெங்காரம் | ,, | 1 |
| நேர்வாளம் | ,, | 4 |

இவைகளை சுத்திசெய்து கல்வத்திலிட்டு குளிர்ந்த நீர் விட்டு அரைத்து கடலைப் பிரமாணம் உருண்டைச்செய்து வைத்துக்கொண்டு ஒரு உருண்டையை தண்ணீரில் யிழைத்துக்கொடுக்க ஊதுமாந்தம் பொருமல் வாதம் இவைகள் தீரும். பத்தியமில்லை.

## பேதிமாத்திரை

சுக்கு லிங்கம்
திப்பிலி பூரம்
மிளகு வாளம்

இந்த ஆறு தினுசுகளில் வாளத்தை மாத்திரம்இரண்டரைபலம்யெடுத்துக்கொள்ளவும் மற்ற ஐந்து தினுசுகளையும்சமமாகக்கலந்து ஐந்து உள்பட ஒண்ணேகால் பலம் நிறுத்து ஆறுவகையும் ஒன்றுபட கல்வத்திலிட்டு 150-யெலுமிச்சம் பழம் ரசம் விட்டு அரைக்கவும் ரசம் கொள்ளாவிட்டால் அப்போதிக்கப்போது உலர்த்தி பிறகு சார்விட்டு அரைத்து இப்படியே மேற்படி ரசம் பூர்த்தியானபிறகு மிளகு பிரமாணம் மாத்திரைகள்செய்துநிழலிலுர்த்தி புட்டியில்வைத்துக்கொள்ளவும் வெந்நீரில் இரண்டு மாத்திரை சாப்பிட பேதியாகும். பத்தியம் கத்திரி முருங்கை அவரை இறச்சிசூப்பு ஆகும் அந்தியில் மிளகு சுக்கு கியாழம் பேதியதிகமானால் மோர்சாதம் சாப்பிடவும்.

## பேதிக்கு சண்பகப்பூ மாத்திரை

சண்பகம் யேலம்
இலவங்கம் கோஷ்டம்
கடுகுரோகணி நேர்வாளம்

இந்த ஆறுதினுசுகளில் வாளம் மாத்திரம் 5-விராகனிடையாகவும் மற்ற ஐந்து தினுசுகளையும் விராகனிடை ஒன்றுகக் கொள்ளவும். இவைகளை சுத்திசெய்து கல்வத்திலிட்டு வென்னீர் விட்டு அரைத்து கால்கழஞ்சு நிறையாக உண்டை செய்து புட்டியில் வைத்துக்கொள்ளவும். தேனிலாவது சுக்குக் கியாழத்திலாவது கொடுக்க பேதியாகும். ஆள் பலமரிந்து மாத்திரைக் கொடுக்கவும். (பத்தியம்) இரச்சி சூப்பு அல்லது மிளகுநீர் துவரைத் தொகையல் ஆகும். யதிக பேதியானால் வென்னீர்சாதம் கொடுக்கவும். பேதி நிற்கும்.

## பேதிக்கு அமுர்த சஞ்சீவி மாத்திரை.

| | | |
|---|---|---|
| ஜாதிலிங்கம் | விராகனிடை | 1 |
| வெங்காரம் | ,, | 1 |
| ஆமணக்கன்பருப்பு | ,, | 2 |
| நேர்வாளம் | ,, | 4 |

இந்நான்கையும் சுத்திசெய்து கல்வத்திலிட்டு குளிர்ந்த நீர்விட்டு அரைத்து குன்றுமணிப் பிரமாணம் உருண்டை செய்து நிழலில் உலர்த்திவைத்துக்கொண்டு குளிர்ந்த தண்ணீரில் ஒரு மாத்திரை கொடுக்க பேதியாகும்(பத்தியம்) மிளநீர் சாதமும் துவரைத் தொகையலாகும் அதிக பேதியானல் வென்னீர் கொடுக்க பேதி நிற்கும்.

## காய்ச்சல் முதலானத்திற்கு யேலாதி மாத்திரை.

| | | |
|---|---|---|
| யேலம் | விராகனிடை | 1 |
| கிராம்பு | ,, | 1 |
| உலர்ந்த யிஞ்சி | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 |
| முந்திரிப்பழம் | ,, | 1 |
| பேரிச்சம்பழம் | ,, | 1 |
| தாளிச்சப்பத்திரி | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 |
| கோஷ்டம் | ,, | 1 |
| விலாமிச்சம்வேர் | ,, | 1 |
| பலாக்காய் | ,, | 1 |
| சந்தணம் | ,, | 1 |
| லவங்கப்பத்திரி | ,, | 1 |
| ஜாதிக்காய் | ,, | 1 |
| ஜாதிபத்திரி | ,, | 1 |
| கோரோசனை | ,, | 1 |

| | | |
|---|---|---|
| இலுப்பப்பூ | ,, | 1 |
| சண்பகப்பூ | ,, | 1 |
| ஓரிலைதாமரைவேர் | ,, | 1 |

இந்த 19-தினுசுகளுக்கு நிகர் கடுகுரோகணி சேர்த்து செவ்விளநீரால் 2-ஜாமமரைத்துப் பரித்திவிரைப் பிரமாணம் உருண்டைசெய்து நிழலில் உலர்த்தி சீசாவிலிட்டு வைத்துக் கொள்ளவும்.

உள்ளுக்குச் சாப்பிடும் விதம் உட்காச்சல் அதிசாரக் காச்சல் ஆமைக்காச்சல்- வெப்புக்காச்சல் இவைகட்கு முலைப் பாலில் கொடுக்கத் தீரும். காசம் மூர்ச்சிக்காசம் ரத்த காசம் இவைகளுக்குத் தேனில் இழைத்துக் கொடுக்கத்தீரும். (இச் சாபத்தியம்) மாத்திரை 1 அல்லது 2 - ஆள் பலமறிந்துக் கொடுக்கவும்.

## உஷ்ண காய்ச்சலுக்கு சீரக மாத்திரை.

நர்ச்சீரகம்-பேரிச்சம்-யேலம் - முந்திரி பழம் - செங்கழு னீர்க் கிழங்கு-திருகடு-கோஷ்டம்-அதிமதுரம்-சந்தணம் கருஞ் சீரகம்-கஸ்தூரிமல்லி கல்வத்திலிட்டு இளநீர் விட்டு அரை த்து தூதுளங்காய்ப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும். முலைப்பாலில் உரைத்து ஆறுவேளை கொடுக்க உஷ்ணக்காச்சல் தீரும் இச்சாபத்தியம்.

## காய்ச்சலுக்கு சஞ்சீவி மாத்திரை.

| | | |
|---|---|---|
| வெள்ளைக்காக்கணம் விரை | பலம் | அரை |
| திரிபலை | ,, | அரை |
| மிளகு | ,, | அரை |
| திப்பிலி | ,, | அரை |
| இரசம் | ,, | அரை |
| கெந்தகம் | ,, | அரை |
| வாய்விளங்கம் | ,, | அரை |

இந்த யேழு தினுசும் கல்வத்திலிட்டு கரிப்பாலைச் சாற்றில் ஒரு நாளரைத்து கழஞ்சுக்காய் பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொள்ளவும். ஒருமாத்திரை இஞ்சி சாற்றிலிட காய்ச்சல் நீங்கும். (இச்சாபத்தியம்)

## சகல சுரத்திற்கு இரத்தபேதி மாத்திரை.

| | | |
|---|---|---|
| உலர்ந்த இஞ்சி | பலம் | கால் |
| மிளகு | ,, | கால் |
| திப்பிலி | ,, | காய் |
| கடுக்காய் | ,, | கால் |
| இந்துப்பு | ,, | முக்கால் |
| கடுகுரோகணி | ,, | கால் |
| இரச பஸ்பம் | ,, | கால் |
| நேர்வாளம் | ,, | ஒண்ணேமுக்கால் |

இந்த 8 - தினுசுகளையும் சுத்திசெய்து கல்வத்திலிட்டு யெலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரை அனுபானத்திலிட விரோசனமாகி குளிர்க்காச்சல் தீரும். (பத்தியம்) முருங்கை கத்திரி அவரை இவைகள் ஆகும். அதிக பேதியானால் பாலுஞ் சாதங்கொடுக்க பேதி நிற்கும்.

## சன்னி 13-க்கும் காலானந்தவயிரவன்

| | | |
|---|---|---|
| இரசபற்டம் | விராகனிடை | கால் |
| சொர்னபற்பம் | ,, | முக்கால் |
| சங்கு | ,, | அரை |
| கெந்தகம் | ,, | கால் |
| முத்து | ,, | அரை |
| வெங்காரம் | ,, | அறிக்கால் |

இந்த 6-தினுசும் சுத்திசெய்து கல்வத்திலிட்டு கொடிவேலிவேர் கியாழத்தில் இரண்டு நாள் விடாமல் அரைத்து உருண்டைசெய்து நிழலிலுலர்த்தி பிறகு ஒரு பாண்டத்தில் குறுணி உப்பிட்டு அதின் மத்தியில் உலர்த்தி உண்டையை வைத்து மேலும் குறுணி உப்பிட்டுமூடி நாலு ஜாமம் யெரித்து நன்ருய் ஆறினபிறகு யெடுத்து பார்க்க பஸ்பமாகும். சீசாவில் வைத்துக்கொள்ளவும். உள்ளுக்குச் சாப்பிடும் அளவு நாலு குன்றுமணி யிடை பற்பமும் பத்து மிளகும் பத்து திப்பிலி வெதுப்பி பொடித்தத்தூளும் அரைக்கால்படி இஞ்சி சாற்றில் மூன்று நாள் கொடுக்க சன்னி பதிமூன்றும் தீரும். (இச்சா பத்தியம்)

## சன்னி13-க்கு ராமபான மாத்திரை

| | | |
|---|---|---|
| காந்தம் | பலம் | 10 |
| சூதம் | ,, | 10 |
| கெந்தி | ,, | 10 |
| மனோசிலை | ,, | 10 |
| செம்புபற்பம் | ,, | 10 |
| லிங்கம் | ,, | 10 |
| பெருங்காயம் | ,, | 10 |
| வெள்ளைப்பூண்டு | ,, | 1 |

இந்த 8-தினுசுகளையும் கல்வத்திலிட்டு குமரிச்சாற்ருல் 3-நாள் அரைத்து குப்பியிலடைத்து வாயை மரக்கால் மூடி சீலைமண் செய்து மணல்மேல் வைத்து முத்தியும் மூன்று நாள் எரித்து ஆரினபிறகு யெடுக்க செந்தூரமாகும் அதில் திப்பிலிமூலம் சாதிபத்திரி கடுகுரோகணி வகைக்கு பலம் கால் வீதம் கூட்டி வெண்கருவால் அறைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரை செய்து வைத்துக்கொள்ளவும். வேளைக்கு 1-மாத்திரை வீதம் மூன்று நாள் முள்ளிசாற்றில் உரைத்துக்கொடுக்க சன்னி பதிமூன்றும் தீரும் (இச்சா பத்தியம்)

## சீதசன்னிக்கு அரிவானந்த வயிர மாத்திரை.

| | | |
|---|---|---|
| வெங்காரம் | பலம் | அரை |
| அயபற்பம் | ,, | அரை |
| அரிதாரம் | ,, | அரை |
| கருவங்கபற்பம் | ,, | அரை |
| வெள்வங்கபற்பம் | ,, | அரை |
| இரசம் | ,, | அரை |
| சாதிலிங்கம் | ,, | அரை |
| தாம்பர பற்பம் | ,, | அரை |

இந்த 8-தினுசும் கல்வத்திலிட்டு திரிபலை கியாழத்தால் 4-ஜாமம் அரைத்து உலர்த்திக்குப்பியிற்போட்டு தீபம்போல் மூணுசாமம் எரித்துக் கல்வத்தில் கொட்டி ஒருசாமம் யெலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து குன்றுமணிபிரமாணம் மாத்திரை செய்து அனுபானத்தில் ஒரு மாத்திரை கொடுக்க சீதஜன்னி தீரும். (பத்தியம்) தினைக்கஞ்சி காச்சி கொடுக்கவும்.

## தித்திப்பு சுகபேதிக் குழம்பு.

| | | |
|---|---|---|
| ரஸ்தாளி வாழைப்பழம் | | 10 |
| திராக்ஷைப்பழம் | பலம் | 5 |
| ஓமம் | விராகனிடை | 1 |
| சுக்கு | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |
| கடுகுரோகணி | பலம் | 3 |
| சுத்திசெய்தவாளம் | ,, | 5 |

இந்த யேழுதினுசுகளையும் கல்வத்திலிட்டு நாலுஜாமம் அரைத்துவழித்து யெடுத்து கல்ஜாடியில் வைத்து காற்றுப் போகாமல் மேல்மூடி வைத்துக்கொள்ளவும். குழந்தைகளுக்கு அரை காசளவும் பத்து வயதுக்கு முதிர்ந்தவர்களுக்கு ஒரு காசு அளவும் பெரியவர்களுக்கு காலணா யிடையும் கொடுக்க சுகபேதியாகும். பேதி யதிகமானால் வசம்பைசுட்டு இளம் வெந்நீரில் உரைத்துக் கொடுக்க பேதி நிற்கும். (இச்சா பத்தியம்.)

## சுகபேதி பேரிச்சன் குழம்பு.

| | | |
|---|---|---|
| பேரிச்சம்பழம் | பலம் | அரை |
| கொடி முந்திரிபழம் | ,, | அரை |
| சீனகற்கண்டு | ,, | அரை |
| பொரிச்ச வங்காரம் | ,, | அரை |
| இந்துப்பு | ,, | அரை |
| சுத்திசெய்தவாளம் | ,, | அரை |
| பூரம் | விருகனிடை | கால் |
| லிங்கம் | ,, | கால் |

இந்த எட்டு தினுசுகளையும் கல்வத்திலிட்டு தேன் விட்டு அரைத்துமாட்டு சிமிளில் வைத்துக்கொள்ளவும் சிசுகளுக்கு அரை குன்றுமணிப் பிரமாணமும் பெரியவர்களுக்கு ஒரு குன்றுமணிப் பிரமானமும் கொடுக்க சுகமாக பேதியாகும். (இச்சாபத்தியம்)

## குழந்தைகளுக்கு மாந்த மாத்திரை.

| | | |
|---|---|---|
| சுக்கு | விராகனிடை | 1 |
| திப்பிலி | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |
| ஆமையோடு | ,, | 1 |
| ஓமம் | ,, | 1 |
| கடுகுரோகணி | ,, | 1 |
| வாய்விளங்கம் | ,, | 1 |
| பெருங்காயம் | ,, | 1 |
| இந்துப்பு | ,, | 1 |
| நேர்வாளம் | ,, | 1 |

இந்த பத்து தினுசுகளையும் சேர்த்து கல்வத்திலிட்டு உத்தாமணி சார்விட்டு அரைத்து குண்டுமணிப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்

கொள்ளவும். (இதற்கு அனுபானம்) அகத்திக் கீரையை வதக்கி சார்பிழிந்து அதில் ஒரு மாத்திரை அல்லது ஒண்ணரை மாத்திரையாகக் கொடுக்கலாம். கலியாண முருக்கன் யிலையை வதக்கி அதின் ரசத்திலும் கொடுக்கலாம்.

## இதனுல் தீரும் வியாதிகள்.

அள்ளுமாந்தம் முக்குமாந்தம் சுரம் இதுகள் தீரும் இரண்டொருதகுதி வலசுத்தியாகும் பத்தியம் புளிநீக்கவும்.

மருந்துகூட்டும்போது ஆமையோட்டை மாத்திரம் உத்தாமணிசாற்றில் ஒருராத்திரிபகல் ஊறவைத்து யெடுத்துக் கொள்ளவும்.

## சுரகோடலி மாத்திரை

| | | |
|---|---|---|
| வெள்ளை பாஷணம் | விராகனிடை | 1 |
| கௌரி பாஷணம் | ,, | 1 |
| சூதகம் | ,, | 1 |

இந்த மூன்று தினுசும் கிளிக்கட்டிக் கியாழத்தில் 2-ஜாமம் யெரித்து அதையெடுத்து ஊமத்தன் சாற்றிலும் கொம்பு பாகற்சாற்றிலும் வகைக்கு 2-ஜாமமரைத்து உளுந்திடைக்கு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி புட்டியிலிட்டு வைத்துக் கொள்ளவும். சுரமுள்ளவர்கள் ஒரு மாத்திரை யெடுத்து யிளநீரிலாவது வென்னீரிலாவது காடியிலாவது 6 - நாளைக்கு 6-மாத்திரை கொடுக்க சகல சுரமும் தீரும். (பத்தியம்) புளி தள்ளவும். உப்பு வாத்துச்சேர்க்கவும் 8-நாளில் ஓமந்தேய்த்து தலைக்கு தண்ணீர்விடவும் அதன்பிறகு புளிக்கூட்டவும்.

## சன்னி முதலானத்திற்கும் ஆனந்தவயிரவன் மாத்திரை.

| | | |
|---|---|---|
| நாவிக்கிழங்கு | பலம் | 1 |
| சூதகம் | ,, | 1 |
| மனோசிலை | ,, | 1 |
| சாதிலிங்கம் | ,, | 1 |
| வெங்காரம் | ,, | 1 |

இந்த 6-தினுசும் சுத்திசெய்து கல்வத்திலிட்டு நிம்பழம் சாற்றில் அரைத்து சிறுபயரளவு மாத்திரை சீசாவில் வைத்துக்கொள்ளவும் சன்னிக்கு முலைப்பாலிலும் குளிர்சுரத்திற்கு இஞ்சி சாற்றிலும் கொடுக்கத்தீரும். (இச்சாபத்தியம்)

## சன்னிதலைவலிக்கு மாத்திரை.

| | | |
|---|---|---|
| நற்சீரகம் | பலம் | அரை |
| கருஞ்சீரகம் | ,, | அரை |
| அசமதாகம் | ,, | அரை |
| திப்பிலி | ,, | அரை |
| கிராம்பு | ,, | அரை |
| வசுவாசி | ,, | அரை |
| அதிவிடையம் | ,, | அரை |
| மனோசிலை | ,, | அரை |
| பெருங்காயம் | ,, | அரை |
| அதிமதுரம் | ,, | அரை |
| வாய்விளங்கம்வேர் | ,, | அரை |

இந்த 11-தினுசும் கல்வத்திலிட்டு கழச்சிலைச்சாற்றில் மைபோல் அரைத்து குன்றுமணிப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி புட்டியிலிட்டு வைத்துக்கொண்டு கழச்சிலைசாற்றில் ஒருமாத்திரை கொடுக்க சன்னிதீரும் நொச்சிச்சாற்றில் கொடுக்க தலைவலிதீருல். (இச்சாபத்தியம்)

## வாந்திபேதி நிவாரண மாத்திரை

மிளகு பெருங்காயம் அபின் இவை வகையொன்றுக்கு காலே வீசம் பலம் எடுத்து செவ்வையாய்க் கல்வத்தி லரைத்து 12 - மாத்திரை செய்து அரைமணிக்கு வொரு தரம் கொடுக்க பேதி நிற்கும். 7-முதல் 24-வயதுள்ளவற்கு அரை மாத்திரை கொடுக்கவும்.

மாத்திரைவகை சிட்கா முற்றிற்று.

---

# இரண்டாவது
# கட்டுவகை சிட்கா

## லிங்கக் கட்டு.

பத்து விராகனிடை லிங்கம் வாங்கி முலைப்பாலில் ஒரு ஜாமம் சுருக்குக்கொடுத்து யெலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு சாமம் கொடுத்து மாவிலங்கம் பழச்சாற்றில் ஒரு ஜாமம் கொடுத்து ஐவிரலிச்சாற்றில் ஒரு ஜாமங்கொடுத்து தேனில் ஒரு ஜாமம் சுருக்குக்கொடுத்து பிறகு 5-விராகனிடை சூடத்தையும் அஞ்சு விராகனிடை சாம்பிராணியும் மெழுகு போலரைத்து அதை 10-பங்குசெய்து ஒவ்வொரு பங்காய் சீலையிற்றடவி லிங்கத்தின் பேரில் சுத்தி தீயிற்கொளுத்தி ஆறின பிறகு கரியெல்லாஞ் சுரண்டிப்போட்டு வைத்துக்கொள்ளவும். தேனில் யிழைத்துக்கொடுக்க வாய்வு தீரும். திரிகடுகு கியாழத்தில் கொடுக்க சன்னிதோஷம் தீரும். இஞ்சிச் சாற்றில் கொடுக்க நெஞ்சடைப்பு, வாயு மூர்ச்சை, பேதி, வயற்றுப் பொருமல் இவைகள் தீரும். கொடிவேலிக் கியாழத்தில் கொடுக்க விஷபாகம் வயற்றுவலி, குன்மம், சோகை, மூலை, பித்த பாண்டு இவைகள் தீரும். பத்தியம் அரை புளிப்பு (இச்சாபத்தியம்)

## வேறுவகை லிங்கக்கட்டு

ஒரு பலம் ஜாதிலிங்கக் கட்டியின்பேரிற் குன்றுமணிப் பருப்பின் பசையினால் ஒரு விராகனிடை தங்கரேக்கை ஒட்டி அதின்மேல் ரோமத்தை அரைவிரைக்கனம் சுத்திபிரியாமல் கட்டி ஒரு சட்டியில் அதற்குக் கீழ் மேலும் கெந்தகம் அரிதாரம் வகைக்குப்பலம் அரைவிதம் யெடுத்து பொடித்து

டித்து அதற்குக்கீழ் மேலும் போட்டு 5-கோழி முட்டையை உடைத்துவிட்டு மூடி அடுப்பேற்றி சிறுதீயாக யெரிக்க பொங்கும் அதின்பின் உருகும் ஆறினபின் யெடுக்கக்கட்டியிருக்கும் அதை அனுபானங்களில் உரைத்துக் கொடுக்க சன்னிசுரம்நாவறக்ஷி மலக்கட்டு இவைகள் தீரும் லிங்கக்கட்டுடன் சேர்த்துக்கொடுக்க வாதமேஹ் தீரும். (இச்சாபத்தியம்)

## வேறு வகை ரசகர்ப்பூரக்கட்டு

நாலுவிராகனிடை ரசகற்பூரத்திற்குமுன்னுதாக முலைப் பாலில் இரண்டு ஜாமம் சுருக்குக்கொடுத்து நண்டை யிடித்து சாறுபிழிந்து அதில் இரண்டு ஜாமம் சுருக்கொடுத்து முசுக்கைச்சாற்றில் இரண்டு ஜாமம் சுருக்குக் கொடுத்தெடுக்க கட்டும் மேற்கூறிய வியாதிகளுக்கும் கொடுக்கலாம்.

## தாளகக் கட்டு.

| | | |
|---|---|---|
| வெடியுப்பு | விராகனிடை | 20 |
| சீனம் | ,, | 20 |
| நவாச்சாரம் | ,, | 10 |
| வங்காரம் | ,, | 10 |

இந்த 4-தினுசையும் பொடித்துக் கரண்டியில் போட்டு தீயில் வைத்து உருகும்போது அதில் சுத்தி செய்த 5-விராகனிடை தாளகக் கட்டியைப்போட்டுப் புரட்டிக் கொடுத்து யெடுத்த பிறகு அதில் மீந்ததையுமை அரைத்து தாளகக் கட்டியின்மேல் கவசம்போல் பூசி காயவைத்து அதின் மேற் சுண்ணாம்பு நீறும் பூநீரும் அரைததுத் துணியிற்பூசி 7-சீலை செய்து காடைப் புடமிட்டெரித்து யெடுக்கக்கட்டும். அனுபானங்களில் கொடுக்க யீளை காசம், எலிகடி, விப்புருதி, உளைமாந்தை குளிர் சுரம் இவைகள் தீரும். (இச்சா பத்தியம்)

டித்து அதற்குக்கீழ் மேலும் போட்டு 5-கோழி முட்டையை உடைத்துவிட்டு மூடி அடுப்பேற்றி சிறுதீயாக யெரிக்க பொங்கும் அதின்பின் உருகும் ஆறினபின் யெடுக்கக்கட்டியிருக்கும் அதை அனுபானங்களில் உழைத்துக் கொடுக்க சன்னிசுரம்நாவறக்ஷி மலக்கட்டு இவைகள்தீரும் லிங்கக்கட்டுடன் சேர்த்துக்கொடுக்க வாதமேஹ் தீரும். (இச்சாபத்தியம்)

## வேறு வகை ரசகர்ப்பூரக்கட்டு

நாலுவிராகனிடை ரசகற்பூரத்திற்குமுன்னுதாக முலைப் பாலில் இரண்டு ஜாமம் சுருக்குக்கொடுத்து நண்டை யிடித்து சாறுபிழிந்து அதில் இரண்டு ஜாமம் சுருக்குக் கொடுத்து முசுக்கைச்சாற்றில் இரண்டு ஜாமம் சுருக்குக் கொடுத்தெடுக்க கட்டும் மேற்கூறிய வியாதிகளுக்கும் கொடுக்கலாம்.

## தாளகக் கட்டு.

| | | |
|---|---|---|
| வெடியுப்பு | விராகனிடை | 20 |
| சீனம் | ,, | 20 |
| நவாச்சாரம் | ,, | 10 |
| வங்காரம் | ,, | 10 |

இந்த 4-தினுசையும் பொடித்துக் கரண்டியில் போட்டு தீயில் வைத்து உருகும்போது அதில் சுத்தி செய்த 5-விராகனிடை தாளகக் கட்டியைப்போட்டுப் புரட்டிக் கொடுத்து யெடுத்த பிறகு அதில் மீந்ததையும அரைத்து தாளகக் கட்டியின்மேல் கவசம்போல் பூசி காயவைத்து அதின் மேற் சுண்ணாம்பு நீறும் பூநீரும் அரைதது துணியிற்பூசி 7-சீலை செய்து காடைப் புடமிட்டெடுத்து யெடுக்கக்கட்டும். அனுபானங்களில் கொடுக்க யீளை காசம், எலிகடி, விப்புருதி, உளைமாந்தை குளிர் சுரம் இவைகள் தீரும். (இச்சா பத்தியம்)

## வேறுவகை தாளகக்கட்டு

பத்து விராகனிடை தாளகக் கட்டிக்கு சிவகாந்தைச் சாறு கரிப்பான்சாறு வகைக்குப்படி 1-யெடுத்து முதலில் சிவகரந்தைச் சாற்றில் சுருக்குக் கொடுத்து இரண்டாவது கரிப்பான் சாற்றில் சுருக்குக் கொடுத்து உலர்த்தி 50-யெருவில் வெடியுப்பை அடக்க வறுத்து யெலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து பிறகு மூன்றுபுடம்போட்ட கரியுப்பு விராகனிடை 14-யெடுத்து சிறுநீர்விட்டு அரைத்து தாளகத்திற்கு கலசஞ் செய்து காயவைத்து சீலைமண் செய்து 15 - யெருவில் புடம் போடக் கட்டும். முன்போல் உபயோகிக்கலாம்.

## வீரக்கட்டு

ஒரு விராகனிடை வீரத்திற்கு அமுரியிலே சாற்றைப் பிழிந்து அதில் அரைபடி சாறுயெடுத்து வீரத்தை அதில் போட்டு சுருக்குக்கொடுத்து கட்டியை ஒரு கரண்டியிலிட்டு ஆவி நெய் விட்டுக்காச்சி கட்டியை யெடுத்துக்கொண்டு அந்த நெய்யில் பரங்கிப்பட்டைச் சூரணத்தைப் பிசைந்து சுண்டக் காய்ப் பிரமாணம் உருண்டை செய்து கரும்பு கட்டியில் வைத்து மூன்றுநாள் ஆறு வேளை கொடுக்க மேகம் கிரந்தி முதலான மேக ரணங்கள் தீரும். (பத்தியம்) புளி நீக்கிச் சாப்பிடவும்.

கட்டுவகை சிட்கா முற்றிற்று.



## மூன்றுவது

# பற்ப வகை சிட்கா.

### ரசபற்பம்.

காட்டு வெங்காயமும் கெந்தகமும் ஓர் நிரையாய் நிறுத்து பில்லைத் தட்டி கலசத்தில் வைத்து தயிலமிறக்கி வாலை ரசத்தில் விட்டு வெய்யலில் வைத்து உலர்ந்த பிறகு மறுபடியும் அந்த தயிலத்தால் அரைத்து பில்லை செய்துகொண்டு நன்றாய் வெந்த செங்கல்லை பாக்கு போலரைத்து ஒரு குண்டு சட்டியில் அரைவாசிப்போட்டு அதின்மேல் ஒரு படி உப்புக் கொட்டி பாத்திரத்தில் மேற்படி பில்லையை வைத்து மூடி ஏழு சீலைமண்செய்து அடுப்பேற்றிக்காடாக்கினியாய் மூன்று ஜாமம் எரித்து ஆறினபின் யெடுக்க பற்பமாகும். சீசாவில் போட்டு வைத்துக்கொள்ளவும். பணவிடையெடுத்து வெல்ல முதலான அனுபானங்களில் ஏழு நாள் சாப்பிடவேண்டும். தீரும் வியாதி குஷ்டம், குலைநோய், பவுத்திரம், கழலை, காமாலை, விப்புருதி, வீக்கம், வெள்ளை படருதல், சூலைசுரை, அரையாப்பு, யோனிப்புற்று, மூலமுளை, கண்டமாலை, கிரந்தி தடுப்பு, வெள்ளை, கருங்கறுப்பன், வண்டுகடி, மேக வாயு, குன்மம் இவைகள் தீரும். மருந்து வாய்ப்பிடிக்காது பத்தியம் (கடும்பத்தியமாக) யிருக்கவேண்டும்.

### வீரபற்பம்.

ஒருபடி பூநீரை 4-படி அமுரியிற் கரைத்து தெளிவிறுத்து ஒரு பாண்டத்தில்விட்டு அதின் வாயிற் சீலையால் வேடுகட்டி அதின்மேல் ஐந்து வீராகனிடை வீரக்கட்டியை வைத்து மேல் வாயைமூடி நீர் வற்றும் வரைக்கும் தீயெரித்துப் பார்க்கப் பற்பமாகும். அதை கிரந்தி நாயகச் சாற்றால் 12-ஜாமம் கல்வத்தில் அரைத்து பில்லைசெய்து காயவைத்து

டி பில்லையை அரைத்து குகைசெய்து அதற்குள் மேற்படி பில்லையைவைத்துமூடி ஒரு சட்டியில் நாலுவிரக்கடை மணல் போட்டு அதின்மேல் குகைசெய்ததை வைத்து நாலுநாழிகை யெரிக்க சிவந்த நிரமான பற்பமாகயிருக்கும். அதை யெடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும். அதில் பணவிடை திரிகடுகுச் சூரணத்தில் வைத்து தேன்விட்டு மத்தித்துக் கொடுக்க தீரும் வியாதி. ஜன்னி, தோஷம், கபக்கட்டு, வாயு வாதம் இவைகள் தீரும். மருந்து மூன்று வேளை கொடுக்க வேண்டும். பத்தியம் இச்சாபத்தியம்.

## தாளக பற்பம்.

சுத்திசெய்த தாளகத்தை ஒருபலம் யெடுத்து வாழைக் கிழங்குக்குள் வைத்துமூடி ஏழு சீலைமண் செய்து காய வைத்து 50-யெருவில் புடம்போட நீறும் ஆறினபின் எடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் அதில் பணவிடை யெடுத்து அனுபானங்களிலிட தீரும் வியாதி சிலேத்துமரோய் 96-ம் தீரும். சுரம், அரையாப்பு, கிரந்தி, குஷ்டம் தீரும். இச்சாபத்தியம்.

## வேறுவகை தாளக பற்பம்.

ஒருபலம் தாளகத்தை யெடுத்து சுத்திசெய்து பிறகு கோடாசுழி நிலதுத்தி குட்டிவிளாம் இந்த மூன்றையும் கொண்டுவந்து அதின்விழுதை சரியிடையாக யெடுத்து தேங் காய்ப் பிரமாணம் அரைத்து உண்டை செய்து அதினுள் தாளகத்தை வைத்து சீலைசெய்து கொடுக்கும் புடமிடக் கட்டிப்போகும். அந்தக் கட்டுக்கு மிளகறணை பட்டையைச் சிறுநீரால் அரைத்து கவசித்து அதின்மேல் சீனம் பலம் 1, கல்லுப்பு பலம் 1, வெடியுப்பு பலம் 1, இம்மூன்றும் உமிநீரால் அரைத்துக் கலசஞ்செய்து யீணுக் கிடாரிச் சாணியும் புளியம்பரணிச் சாம்பலில் கலந்து பெருங்குகைப் பிடித்து குகைக்குள் புளியம்பரணைச் சாம்பலைப் போட்டு அதில் கவசித்த தாளகத்தை வைத்து மேல்சில் போட்டுச் சீலைமண்

செய்து பத்து யெருவில் புடமிட பஸ்பமாகும். இதை அனுபான கிரகங்கள் லேக்கியங்கள் தேனில் அரிசியிடைகொள்ள மேகம், சூலை, சுரம், குஷ்டம், சிலேத்துமனேப் 96-ம் தீரும். இச்சாபத்தியம்.

## தாம்பிர பற்பம்.

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த தாம்பிரம் | விராகனிடை | 12 |
| சூதகம் | ,, | 8 |
| கெந்தி | ,, | 8 |
| தாளகம் | ,, | 8 |

இந்த நாலு தினுசையும் கல்வத்திலிட்டு வெள்ளெருக்கன் பால் விட்டு அரைத்து பில்லைசெய்து காயவைத்து ஒட்டிலிட்டுச் சீலைசெய்து கெஜபுடம் போட்டு அப்பால் சுத்திச் சாரணைச் சாற்ருல் ஒருநாளரைத்து முன்போற் புடம்போட பற்பமாகும். ஆறினபின் யெடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும். அதில் பணவிடை யெடுத்து தேனிற்கொள்ள குன்மவாய்வு சூலை மூலந்தீரும்.

## வெள்ளி பற்பம்.

சரிகை வெள்ளி பலம் கால் உருக்கி ஆரவிட்டு பாலரசம் விராகனிடை 5-விட்டுக் கலக்கியபின் யெடுத்துத் துருசு விராகனிடை 2-க்கு சிறுநீர்விட்டு அரைத்து மேற்படி கனங்குக்குக் கவசமிட்டுக் காய்ந்த பிறகு மகிழம்பூவை மூலைப் பாலால் அரைத்து கவசஞ்செய்து அதின்மேல் வெள்ளெருக்கு அரைத்து கவசஞ்செய்து காயவைத்து 3-சீலை மண் செய்து 15-யெருவில் புடமிடப் பஸ்பமாகும். அதில் பணவிடை யெடுத்து நெய்யிலாதல் லேக்கியத்திலாதல் கொடுக்க தீரும். வியாதி மேகம் வெட்டைகள் நீங்கும். தாதுபுஷ்டியாகி தேகம் அழகு மிகும் பத்தியம் இச்சாபத்தியம்.

## வேறுவகை வெள்ளி பற்பம்

## செந்தூரம்.

சரிகை வெள்ளியை லேசாகத்தட்டிப் பழுக்கக்காய்ச்சி பழுப்பாக கிழங்குச் சாற்றில் யேழுதபா தோய்த்துக் குகை யில் வைத்து உருக்கி கண்விட்டாடும்போது மகிழம்பூச் சாற் றைச் சிறுகவிட்டு ஊதப் பொடியாய்ப்போகும் அதை ஷை சாற்றால் அரைத்து பில்லை தட்டிக் காயவைத்து மூக்காவேளை வேரை மேற்படி சாற்றால் அரைத்து குகை செய்து வைத்து மூடி ஏழு சீலைமண் செய்து 10-யெருவில் புடம்போட நீரும் அதில் பணவிடை திப்பிலி லேக்கியத்திற்கொள்ள சிலேத்து மம் 96-ம் சூலையும் தீரும் இச்சாபத்தியம்.

## தங்கபற்பம்

நெல்லிக்காய் கெந்தகம் விராகனிடை 16-செங்கட்டு பூனகம் விராகனிடை 8-பொரிச்சவெங்காரம் விராகனிடை 8 இம்மூன்றுக்கும் உமிநீருடன் கோவையிலைச்சாறும் விட்டு 16-ஜாமம் அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரைதிரட்டி நிழலில் உலர்த்திக்கொண்டு தங்கரேக்கு ஒரு விராகனிடை மூசையில் போட்டு குமிட்டியில்வைத்து குருகும்போது ஷை மாத்திரைகளை கிராசங் கொடுத்துக்கொண்டே அப்போது தைக்கப்போது மூசைகளை மாற்றிக்கொண்டு மாத்திரைமுழு மையுமான பிறகு சிறுசெப்படைசார் அல்லது குப்பிலாங் கொடிச்சார் தெளிவு விட்டு இரண்டுஜாமம் அரைத்துப் பில்லைதட்டிக் காயவைத்து ஓடு மூடி சீலைமண்செய்து 15-யெ ருவில் புடம் போடவும். இப்படி ஆறுபுடம் போட பஸ்ப செந்தூரமத்தியான களங்கு நீளத்துடன் தங்க சம்பூரமாகும் இதில் ஒரு குண்டுமணியிடை லேக்கியங்களில் அனுபானிக்க தீரும் வியாதி மேகம், உகம், சோகை, காமாலை, பித்தபாண்டு தேகவாக்ஷி காந்தல் முதலியவை நீங்கும். தாதுவிர்த்தியால் வீரிய விர்த்தி மிகுந்த அழகு உண்டாகும். இச்சா பத்தியம்.

## பவள பற்பம்.

ஒருபலம் யெலுமிச்சம் பழஞ்சாற்றில் போட்டு ஒரு நாள் ரவியில் வைத்து மறுநாள் யெடுத்து சலத்தில் கழுவிப் போட்டு இலந்த மிலையாவது தைவேளை யிலையாவது அரைத்துக் குகைசெய்து பவழத்தை அதற்குள் வைத்துமூடி எழு சீலைசெய்து காயவைத்து 50-யெருவில் புடம்போட்டெடுக்கப் பஸ்பமாகும் அதை யெடுத்து ஒரு பீங்கானிலிட்டு ஆவின் பால் விட்டு ரவியில் காயவைத்து யெடுத்து புட்டியிலிட்டு வைத்துக்கொள்ளவும். ஒரு குன்றுமணி யிடை வேளை யொன்று தேன் பசு நெய் பசும் வெண்ணெ இதுகளில் கொள்ளத் தீரும் வியாதி மேகச்சூடு, காங்கை, ஈயம், யீளை, யிருமல் நீர் கடுப்பு இவைகள் நீங்கும். பத்தியம் இச்சாபத்தியம்.

## நாக பற்பம்.

இருபதுதபா யிலுப்ப நெய்யில் உரிக்கிக்காய்ச்சி சுத்தி செய்த நாகத்தை அரைப்பலம் யெடுத்து மூசியில் வைத்து உருக்கும்போது கண்விட்டு ஆடும்போது சித்தாமணக்கிலையைக் கசக்கி அஞ்சாறு சொட்டுப்பிழிய சத்தமடங்கும் துரித்தியை விசையாய் ஊதி மறுபடியும் அஞ்சாறு சொட்டுப் பிழிந்து மேற்படி வேரால் கிண்டிவர மல்லிகைப் பூப்போல் நீறும் அதை அநுபானங்களிலிட தீரும் வியாதிகள் வெள்ளை, வெட்டை, சிலேத்துமம், குன்மம், மூலம் இவைகள் நீங்கும். தாது விர்த்தி யுண்டாகும்.

## வேறுவகை பற்பம்.

சுத்திசெய்த நாகம்பலம் 1, இரசப்பலம் 1 இவை யிரண்டையும் சேர்த்து உருக்கி வேலிப்பரித்தி சாற்றால் அரைத்து பில்லை தட்டிக் காயவைத்து அதற்குமேல் துத்தி யிலையை அரைத்துக் கவசஞ்செய்து எழுசீலைமண்செய்து முழப்புடம்

போட நீரும் இப்படி மூன்று புடம் போடவும் பிறகு யெடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் வெண்ணெயில் பத்தியமாய்க்கொள்ள மேற்கூறிய வியாதிகள் தீரும்.

## வெள்வங்க பற்பம்.

சுத்திசெய்த வெள்வங்கம் பலம் 1, பாதரசம் பலம் 1, இவையிரண்டும் சேர்த்து உருக்கி கெஞ்சாயிலை சார்விட்டு அரைத்து பில்லை செய்து காயவைத்து அதற்கு மேற்படி யிலையை அரைத்துக் கவசஞ்செய்து ஓட்டிலிட்டுமூடி சீலை செய்து 30-யெருவில் புடம்போட்டு மறுபடியும் மேற்படி சாற்றால் அரைத்து இப்படி மூன்று நாள் புடம்போட நீரும். அதை யெடுத்துப் புட்டியில் வைத்துக்கொண்டு பிறகு மாதளம்பூவை நிழலில் உலர்த்தி அத்துடன் சரியிடை சீரகம் சேர்த்து சூரணித்து திரிகடுகுப்பிரமாணம் பணவிடைப் பிரமாணம் கலந்து கொடுக்கத்தீரும் வியாதி நவமூலம் மேகநோய், மேகம், யெலும்புருக்கி தீரும் நாடி வலுத்துத் தாது வுண்டாகும். பத்தியம் மீன், கருவாடு, கொள்ளுப் பருப்பு பூசினிக்காய் நீக்கவும், நெய் சேர்த்துக் கொள்ளவும். நாளொன்றுக்கு இருவேளை மண்டலங் கொள்ளவும்.

## கருவங்க பற்பம்.

கருவங்கக் குண்டுகளை உருக்கி புளிச்சத் தண்ணீரில் பத்துதரம் சாத்துத் தகடுதட்டிக் காலணுதிட்டம் துண்டுகள் செய்து தில்லைப்பாலில் மூன்று நாள் ஊரப்போட்டு வெய்யவில் வைத்து பிரட்டிக்கொடுத்து நன்றாய்க் காய்ந்த பிறகு கருங்கமுதைதலத்தை வீசை 1, இடித்துக் கொஞ்சம் சிறுநீர் விட்டு பிசைந்துக்கொண்டு மூன்றில் வொருபாகம் எடுத்து பில்லையாய் உள்ளங்கை அகலம்செய்து அதின்மேல் கருவங்கத் தகடுகளை ஒன்றோடொன்று சேராமல் மேலும் இம்மாதிரியாக பில்லை வைத்து மீதி தகடு யிருந்தால் இவ்விதமே அடுக்காய் மூன்று அடுக்காய் வைத்து இரண்டு சீலைமண் செய்து

காட்டெருவால் வெட்டின குழிக்குள் அடங்கியிருக்க கெஜ புடம்போட்டு மேல் 10-படி உமியைக் கொட்டவும் புடமாறி யெடுத்த பற்பத்தை புட்டியிலிட்டு வைத்துக்கொள்ளவும். அரிசியிடை நெய்யிலாவது வெண்ணெயிலாவது கொள்ள வேண்டும் தாதுபுஷ்டிக்கான லேக்கியங்களில் காலரிசி யிடையும் வைத்துப் பத்துநாள் கொடுக்க தாதுபுஷ்டி யதிகமாகும் மேக ரோகங்கள் சகலமுந் தீரும். இச்சாபத்தி யம், ஸ்திரீ போகம் பரிச்சேதங்கூடாது.

## கற்பூரசிலாசத்து பற்பம்.

கற்பூர சிலாசத்தை ஆவின் பாலிற்போட்டுக் காய்ச்சிக் கழுவிச் சுத்தி செய்து சிருசெறுப்படைச் சாற்றால் 4-ஜாமம் அறைத்து லேசாய் பில்லைத் தட்டிக் காயவைத்து ஓட்டி லிட்டுச் சீலைசெய்து 50-யெருவில் புடம் போடவும், இந்தப் படி மேற்படி சாற்றாலாட்டி 3-புடம் போட்டு யெடுக்க பற்ப மாகும், 2 - குன்றின்யிடை ஆவின் வெண்ணெயிற்கொள்ள தீரும் வியாதி மேலெரிவு, பித்த வெட்டை, நீர்கடுப்பு இவை கள் தீரும். (இச்சாபத்தியம்)

## மான்கொம்பு பற்பம்.

ஒரு வீசை மான்கொம்பு வாங்கி நாளாய்ப்பிளந்து சிறு துண்டுகளாய் நறுக்கி ஒருநாள் குப்பமேனிச் சாற்றில் ஊற வைத்து ஷை யிலையை அரைத்துக் கவசஞ்செய்துக் காய வைத்து ஓட்டிற் பரப்பி மேலோடுமூடி சீலைமண் செய்து 50 யெருவால் புடம்போட்டு எடுத்து ஆவின்பால் விட்டு அரை த்து பில்லைதட்டிக் காயவைத்து முன்போற் புடம்போட்ப் பற்பமாகும் அனுபானங்களில் மேற்படி பற்பத்துடன் பவள பற்பம் சேர்த்துக்கொடுக்கத் தீரும் வியாதி நீரடைப்பு, கல்ல டைப்பு, சதையடப்பு, நீரெரிவு, சயம், சளி, இருமல், உஷ் ணம், மேக காங்கை இவைகள் தீரும். இச்சா பத்தியம்.

## கல்நாரை பற்பம்.

சீமை கல்நாரை 5-பலம் கொண்டுவந்து துண்டு துண்டாக வெட்டி ஓட்டில் வைத்து அதற்குக் கீழும் மேலும் யெருக்கன் வேரை யிடித்துத் தூளைப்போட்டு மூடி கெஜ புடம்போட்டு யெடுத்து மேற்படி பாலில் அரைத்து 3-புடம் போட்டு யெடுக்கத் தவளம்போல் நீரும் அதில் இரண்டு குன்றியிடை பிரமாணம்நாளொன்றுக்கு தேனிலாவது தூது வேளை லேகியத்திலாவது கொள்ளத்தீரும் வியாதி சிலேத் துமம் 96-ம் மேக காங்கை இவைகள் தீரும், மேற்படி பற்யத்தை பல்விளக்க தந்தம்போல் யிருக்கும் இச்சா பத்தியம்.

## பஞ்சலவண பற்பம்.

பஞ்சலவணம் வகைக்குப் பலம் கால் கல்வத்திலிட்டுப் பிரண்டை, முருங்கப்பட்டை, குப்பமேனி, நொச்சி, குமரி இவைகளின் சாற்றில் வகைக்கு ஒரு ஜாமம் அரைத்துவிட்டு காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து 10-யெருவில் புடம் போடப் பற்பமாகும், இந்த பற்பத்திற்கு நாலிலொன்று பெருங்காயஞ்சேர்த்து தேன்விட்டு மைபோலரைத்து சிமிளில் வைத்துக்கொண்டு வேளை யொன்றுக்கு கழஞ்சி விதம் சாப்பிடவும், தீரும் வியாதி வாதம், வாய் குற்றல், குடைத் தல், வலிகடுப்பு, குன்மம், அண்ட வாயு, கிராணி, பௌத்திரம், ருத்திரவாயு, குடல் புரட்டல், வயிற்றுப் பொருமல், செவியாமை மந்தம், மகோதரம் இவைகள் தீரும். இச்சாபத்தியம் வியாதிபலமறிந்து கால் மண்டலம் அரை மண்டலம் கொடுக்கவும்.

பற்பவகை சிட்கா முற்றிற்று.



நாலாவது

# செந்தூர வகை சிட்கா.

## அயச்செந்தூரம்.

அரப்பொடியைப் பழஞ்சாற்றில் மூன்று நாள் ஊற வைத்துப் பிசைந்துக் கழுவிப்போட்டு அப்பால் ஜாடியில் 3-நாள் ஊறவைத்து கழுவி சுத்திசெய்து காட்டாமணக் கன்பாலில் 3-நாள் ஊறவைத்து ரவியுலர்த்தி கல்வத்திலிட்டு மேற்படி பாலால் 4-ஜாமம் அரைத்து பில்லைதட்டிக் காய வைத்து ஓட்டிலிட்டுச் சிலைமண் செய்து கெஜபுடம் போட வும் இந்தப்படி மேற்படி பாலில் 11-புடம் போட்டு அப் பால் மருதம்பட்டை நாவற்பட்டை கற்றாழைசமூலம் இவை களை யோர் நிறையாக யிடித்து சார்பிழிந்து அதில் 25-நாள் ஊரவைத்து அரைத்து 64-புடம்போட்டு பிறகு பொற்றலைக் கரிப்பானிலையும் சிந்தில் தண்டும் ஓர் நிரையாய் நிறுத்து யிடித்துப் பிழிந்த ரசத்தில் 25-புடம் போட்டு எடுக்கச் செக் செந்தூரமாகும் சீசாவில் வைத்துக்கொள்ளவும், உள்ளுக்குச் சாப்பிடும்முறை யெவ்விதமெனில் வாததேகிக்கு தேனிலும் பித்ததேகிக்கு வாழைப்பழத்திலும் நெய்யிலுங் கொள்ள தீரும் வியாதி சோகை, விஷபாகவீக்கம், குடல்வாதம், தேக வெளுப்பு, நயன ரோகம் 96-ம் தீரும், தேகம் பொன் போ லாகும் ஒளியுண்டாகும் அதிக பலமுண்டாகும் உதிர்ந்த ரோமங்கள் முளைக்கும் நரைமாறும் மேற்சொல்லியதை திரு கடிகைக்கொள்ள குன்மசுத்தி, காசம் தீரும். இச்சாபத்தியம்.

## அயக்காந்த செந்தூரம்.

சுத்திசெய்த அயக்காந்த செந்தூரம் வகைக்குப்பலம் 1, ஜாதிலிங்கம், கெந்தகம் வகைக்குபலம் 2, வெங்காரம் இரசம் வகைக்கு பலம் கால் மூப்பகழஞ்சு 2-யெலுமிச்சம் பழச் சாற்றால், நாலு சாமம் பொற்றலைக் கரிப்பான் சாற்றில் நாலு

ஜாம மரைத்து பில்லை செய்து காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து 30-யெருவிற் புடமிட்டு யெடுக்கச் செந்தூரமாகும் இதை அனுபானத்திற் கொள்ளத் தீரும் வியாதி பாண்டு 6, கிராணி 6, பித்தம் 40-ம் வாயு, வாதம், அக்கினி மந்தம் இவைகள் தீரும். தாது புஷ்டியாகி திரேக வெளுப்பு நீங்கும் தேனிற்கொள்ள பாண்டுசூலை, கெற்பநோய், வாந்தி பொருமல், உஷ்ண வாயு, தலை மயக்கம், வாயூரல், பித்தம் தீரும். இச்சாபத்தியம்.

## மண்டூர செந்தூரம்.

நாள்சென்ற 4-பலம் மண்டூரத்தை இடித்து வெள்ளாட்டுநீர் குறுணிவிட்டு ஊரவைத்துக் காச்சி அப்பால் ஆவிநீரில் பத்துதபா காச்சித் தேய்த்துக் கழுவிப்போட்டு கற்றுழஞ்சாற்றில் ஒருநாள் அரைத்து பில்லை செய்துக் காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைமண் செய்து கெஜபுடம் போடவும் இந்தப்படி ஷைசாற்றில் அரைத்துப் பத்துப்புடம்போடவும் பிறகு நீர்முள்ளி கரிப்பான் வீழிவேலிப்பருத்தி மாதுளம் பழம் இவைகளின் சாற்றில் வகைக்கு புடம் 10, போட்டு யெடுக்க செந்தூரமாகும் அதில் பணவிடை கரிப்பான் சாற்றில் சாப்பிடத் தீரும் வியாதி மகோதரம், விஷநீர்க்கோவை கெண்டைபாண்டு, விஷபாகம், சோகை, சூலை, பெருவயறு, குன்மம், தேக வீக்கம், நிர்க்கடுப்பு வாதம், குடல் வாதம், இவைகள் தீரும். பத்தியமாகச் சாப்பிடவும்.

## பஞ்சலோக செந்தூரம்.

தங்கம் வெள்ளி செம்பு காந்தம் இரும்பு இவைகளை ஓர் நிரையாய் சுத்திசெய்து அதற்கு ரெண்டு பங்கு கெந்தகமும் சூதம் அரை வீரங் கால்கூட்டி முப்புச்சுன்னங் கழஞ்சு 1, யெலுமிச்சம்பழஞ் சாற்றிலும் கரிச்சாலைச் சாற்றிலும் வகைக்கு நாலு ஜாமம் அரைத்து முழப்புடத்திற் போட்டு

ஆரினபின் எடுக்க செந்தூரமாகும் அதிற் பணவிடை திரி கடுகு சூரணத்தில் வைத்து தேன்விட்டு மத்தித்து 40-நாள் சாப்பிட வாய்வு 80-பித்தம்மூலம் சிலேத்துமம் இவைகள் தீரும். இச்சாபத்தியம்.

## அபிரேக்கு செந்நூரம்.

5 பலம் அபிரேக்கு நவநீதத்தை யெருக்கன் பாலில் 7-நாள் ஊரவைத்து நாலு ஜாமம் அரைத்து பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு சீலைசெய்து கெஜபுடம்போட்டு பின்பு முள்ளங்கிக் கிழங்கு செங்குமரி நாயுரிவி கொழிஞ்சி இஞ்சி மருட்கிழங்கு கரணைக் கிழங்கு கருவாழை பொன்னாங் கண்ணி சாரணை மணத்தக்காளி கனிப்பிரண்டை நீர் முள்ளி கொட்டாய் கரந்தை திருநீற்றுப்பச்சை சந்திராய் பொற்ற லைக்கரிப்பான் இவைகளின் சாற்றிலும் ஆலம்விழுதுக் கஷா யத்திலும் வகைக்கு மூன்று புடம்போட்டு யெடுக்க செந்தூர மாகும். அதில் பணவிடை அனுபானங்களில் சாப்பிடதீரும். வியாதிகள் தாதுகட்டும் நரம்புகள் முறுக்கேரும் திரேகம் பலக்கும் பத்தியமில்லை.

## கருவங்க செந்தூரம்.

சுத்திசெய்த கருவங்கம்பலம் அரை அயசட்டியிலிட்டு உருக்கையில் அதில்ரசம் அரை கெந்தகம் மனோசிலை அரி தாரம் வகைக்கு பலம் கால் இவைகளை ஒன்றாய்ப்பொடித்து வைத்திருந்து உரிகிய வங்கத்தில் சிருகத்தூவி பிறகு கற்ரு ழைச் சோற்றில் கடுக்காய்ப் பொடி-தூவி பிசைந்து வைத்தி ருக்க ஜலம் ஊரும் அதைவிட்டு அயக்காம்பால் கிண்டிவர செந்தூரமாகும் அதில் பணவிடை யெடுத்து நெய்யில் சாப் பிட தீரும் வியாதி சீதழிவு நீங்கும் சுக்குக்கியாழத்தில் சாப்பிட சுரம் நீங்கும் கரிப்பான சாற்றில் கொள்ள காமாலை பாண்டு நீங்கும், இச்சாபத்தியம்.

## தாம்பிர செந்தூரம்

சுத்திசெய்த தாம்பிரம் விராகனிடை 10, கெந்தகம் விராகனிடை 5, இரசம் விராகனிடை 6, இவைகளை கல்வத்தி லிட்டு நொச்சிலை சாற்றால் மூன்றுநாள் அரைத்து அரசிலை யைப்போல் லேசாகதட்டி காயவைத்து பிறகு ஒரு சட்டியில் பாதி வரைக்கும் உப்புக்கொட்டி அதின்மேல் பில்லைகளைப் பரப்பி மேலும் உப்புக்கொட்டி அடுப்பேற்றி தீபம்போல் யெட்டு ஜாமம் யெரித்து ஆரியெடுக்க செந்தூரமாகும் அதில் பணவிடை யெடுத்து திரிகடுகு சூரணத்தில் சாப்பிடத் தீரும் வியாதி குன்ம வாய்வு, பீலிகை, பவுத்திரம், பெருவயறு நீர் கோவை, சீராமை இவைகள் தீரும். பத்தியம் நெய் பால் சேர்த்துக்கொள்ளவும் ஆவின்பாலாக இருக்கவேண்டும்.

## நாக செந்தூரம்

ஒருபலம் நாகத்தை உருக்கி இலுப்பை நெய்யில் பத்து தபா காச்சி சுத்திசெய்த குகையிலிட்டு உலையிட்டு உருக்கி அதில் 1-பலம் மனோசிலையை பொடித்துத்தூவி ரெண கொ ழிஞ்சி வேரூர்.கிண்டிவர சீரும் அதை கல்வத்திலிட்டு சூதம் வீரம் வகைக்கு பலம்கூட்டி முலைப்பாலால் நாலுஜாம மரை த்து பின் பு கெந்தகம் அதற்கு ரெட்டிப்பாய்ச் சேர்த்து பொற்றலை கரிப்பான் சாற்றாலரைத்து ஆறுதபா கோழிப் புடம்போடச் செந்தூரமாகும் அதில் குன்றியிடை அனுபா னங்களில் சாப்பிட தீரும் வியாதிகள் காசம், குன்மம், யெரி குன்மம், கவுசி பணங்குலை, கிராணி, உள்மூலம், மேகம், வா தம், பீலிகை, காமாலை, காச்சல் குளிர், மந்தாரக்காசம் இவை கள் தீரும் இச்சா பத்தியம்.

## லிங்க செந்தூரம்.

ஒருபலம் லிங்கத்தை அயச் சட்டியிலிட்டு அதற்குக் கீழ் மேலும் ஒரு பலம் கெந்தியை பொடித்துப்போட்டு காற்படி கழுதைப்பாலைச் சிறுகச்சிறுக மெழுகுபோ லுருகும்படி விட்டுக்கொண்டு நாலு ஜாமம் யெரித்து யெடுத்துக் கழுவிப் பொடித்துப் பணவிடை யிஞ்சிச் சாற்றிலும் திரிகடுகு சூரணத்திலும் கொடிவேலி கியாழத்திலுங் கொடுக்க சன்னி சுவாசம், வாதம் யெண்பதும் தீரும் இச்சாபத்தியம்.

## கரியுப்புச் செத்தூரம்.

ஒன்னேகால் பலம் கரியுப்பை யெடுத்து எருக்கன்பால் திருகு கள்ளிப்பால், தும்பை, அவுரிதருதம்பட்டை குமரி, எலுமிச்சம்பழம், பொடுதலை இவைகளின் சாற்றில் வகைக்கு இரண்டுபுடம் போடச் செந்தூரமாகும் அதில் மூன்று பணவிடை யெடுத்து தேனிற்குழைத்துக்கொடுக்க குன்மம், உதரரோகம், க்ஷயம், சூலைவீக்கம், வாயு, கிராணி முதலானவை தீரும் இச்சாபத்தியம்.

## கந்தர் காளகண்டமேக நாரணச்செந்தூரம்.

ஏட்டாங்காச்சல் வெடியுப்பு பலம் 15, வெங்காரம்பலம் 1, படிகாரம் பலம் 10, வெண்மையாய் வருத்த துருசு பலம் அரை, நவாச்சாரம் பலம் 1, இந்துப்பு பலம் அரை, சிவக்க வருத்த அன்னபேதி பலம் அரை, இவை வகை 6-க்கு பலம் 30-தரையும் பொடித்து மூன்று பங்கு செய்து ஒரு பங்கை பாலில் திராவக மிறக்கி மற்றொரு பங்கில் விட்டுப் பிசரிக் காயவைத்து முன்போல் திராவக மிறக்கிச் சீசாவில் வைத்துக்கொண்டு சுத்திசெய்த பாற்ரசம் விராகனிடை 30, சுத்தி செய்த நெல்லிக்காய் கெந்தகம் விராகனிடை 15, சுத்தி

செய்த சாதிலிங்கம் விராகனிடை 15, சுத்திசெய்த அரிதாரம் விராகனிடை 10, தங்க ரேக்கு விராகனிடை 2, இவைகளை மேற்படி திராவகத்தால் ஒரு ஜாமம் ஆட்டிக் குப்பிக்கு முந்தி ஏழு சீலைமண்செய்து அதில் போட்டு மேல்மாவுக் கல்பிரடைப்போட்டு ஒரு பெரிய சட்டியில் அரிமணலாகிய கருமணல் நாலு விரக்கடை போட்டுப் பரப்பிவைத்துத் தொப்பை யளவு மறுபடியும் மணலால் மூடி மேற்சட்டி மூடி வாயுக்குச் சீலைமண் செய்து காய வைத்து கணபதியைத் துதித்து அடுப்பிலேற்றி ஆவாரன்விரகால் தீபகமலம் காடாக்கினியாய் 24-ஜாமம் யெரித்து மேற்சட்டியைத் திறந்து பிரடையை நீக்கி சலாக்கைப்போட்டுக் கிண்டிக் கொடுத்து நிறமில்லாவிட்டால் பின்னும் இரண்டு ஜாமம் யெரித்து ஆரவிட்டெடுக்க செந்தூரமாயிருக்கும் அந்த செந்தூரத்தை குப்பிலடைத்து சண்முகக் கடவுளைத் துதித்து வைத்துக்கொள்ளவும் தேகபலமறிந்து அதில் அறைபணம் யிறையெடுத்து தகுந்த லேகியம் கிரதம் ரசாயனம் சூரணம் கியாழம் முதலிய அனுபானங்களில் கலந்து ஒரு மண்டலம் சாப்பிடத் தீரும் வியாதி சுரோகத்தொகை 312-ம் அலத்தால் கிளத்த பிரகம் 251-முதலிய அதோங்கத்தைப்பற்றிப் பிறக்கின்ற ரோகங்கள் 3123-ம் தீரும் சரீரத்துக்குள்ள அழகு தாது புஷ்டி மிகுதியுண்டாம் நோய்களுக்குத் தகுந்த பத்தியமிருக்கவும்.

செந்தூர வகை சிட்கா முற்றிற்று.



# ஐந்தாவது

# மெழுகு வகை சிட்கா.



குமரிச்சாற்றில் கடுக்காய் தூளைப்போட்டுப் பிசைந்து வைத்து அதில் வருகிற நீரைப் பத்து விராகனிடை லிங்கத்திற்கு ஒரு ஜாமம் சுருக்குக்கொடுத்து சீனக்காரம் துருசு வெங்காரம் பூநீரு வகைக்கு விராகனிடை 5, கல்வத்திலிட்டு யெருக்கன் பால்விட்டு மெழுகுபோலரைத்து மூன்று பங்கிட்டு ஒரு பங்கை கட்டிக்குப்பூசிக் காயவைத்து நன்றாய்க்காய வைத்து காய்ந்தபின்பு மற்ற இரண்டு பங்கையும் அதுபோற் பூசிக் காயவைத்து மண்ணையரைத்து துணியில் பூசி ஐந்து சீலைசெய்து குக்குப்புடம் போட்டு யெடுத்துக் காண்டியில் வைத்து கொடிக்கள்ளிச் சாற்றால் ஒரு ஜாமம் சுருக்குக் கொடுத்துக் கட்டியில் ஊசியினாற் குத்திப்பார்க்க ஊசியிறங்கும் அந்தப்பதத்தில் கல்வத்திலிட்டு அறைக்க மெழுகாகும் அதில் பணவிடை அனுபானங்களிலிட தீரும் வியாதி கிரந்தி, குஷ்டம், கரப்பன், காசம், சுரம் சூலை நீரோடுதல் புண் பேதி வாதம் ரணம் இவைகள் தீரும். இச்சாபத்தியம்.

## வீர மெழுகு.

பரங்கிப்பட்டை கொடிவேலிவேர் சிவன் வேம்பு சமூலம் செங்கொட்டை இவைகளை ஓர் நிறையாக வெடுத்துக் கரிக்கிப் பாண்டத்திலிட்டுக் குழித்தைலமிறக்கி சுத்திசெய்த சவ்வீரம், லிங்கம், ரசகற்பூரம் இவைகள் வகைக்கு விராகனிடை 3, ரசம், அரிதாரம், துருசு பற்பம், இந்துப்பு வகைக்கு விராகனிடை 1 இவைகளை மயினமாகப் பொடித்துக் காண்டியிற் போட்டுக் காற்படித் தயிலம்விட்டு ஓயாமல் கிண்டிக்கொடுத்து வற்றினபின்பு தேன்படி அரிக்கால் விட்டு கிண்டி கொடுத்து மெழுகு பதத்தில் கல்வத்திலிட்டு பிறகு ஜாதிக்காய், கார்கோலரிசி, திரிகடுகு, கோஷ்டம், அரத்தை,

தேசாவரம், அக்கிராகாரம், சன்னி நாயகம், திப்பிலி, மூலம், ஓமம், திப்பிலி, கொடிவேலிவேர் பட்டை வகைக்கு விராகனிடை 1 பொடித்து வடிகட்டிசேர்த்து தேன்விட்டு இரண்டு ஜாமம் மெழுகுபோல் அரைத்து தந்த சிமிளில் அடைத்து வைத்துக்கொள்ளவும், சுண்டக்காய்ப் பிரமாணம் நல்ல வெல்லத்தின் உள்வைத்து ஏழுவேளைச் சாப்பிட தீரும் வியாதிகள் நெஞ்சடைப்பு, மார்புக் குத்துவிப்புருதி, வலிப்புகள், வயற்றுவலி, முகவாத சன்னி சூலை 18, கரப்பான் உதிரத்திரக்ஷி, தேகக்கடுப்பு, சூதவாய்வு, மந்தாரக்காசம், சன்னி தோஷம், கைகால் விழுதல், கருப்பு, வெள்ளைச்சொரி, சிரங்கு, படர்தாமரை, குஷ்டம், மேக ரணம், கிரந்தி, அரையாப்பு, மேகப்புற்று, துர்மாங்கிச அடைப்பு இவைகள் தீரும். பத்தியம் புளி, புகைதள்ளவும் கொஞ்சம் இருமல்வரும்பல்கட்டும்.

## ரச மெழுகு.

ஒரு பலம் கெந்தகத்தில் ஆவின் வெண்ணையைபோட்டு உருக்கி மூன்றுதபா வானபிறகு மிளகு தக்காளிச் சாற்றிலும் இரண்டு தபா உருக்கி வேலிப்பருத்திச் சாற்றிலும் காய்த்தெடுத்து அதையும் நாலு செங்கொட்டையும் வெட்டி அரைக்கால்படி விளக்கெண்ணையிற் போட்டுக்காய்ச்சி ஒரு சொட்டுக் கீழேவிட்டுப்பார்க்க கெந்தக நிறமில்லாதிருந்தால் அந்த பதத்தில் இறக்கிவைத்துக்கொண்டு ஒரு விராகனிடை ரசத்தில்விட்டு மத்தித்து வேளைக்குக்காற்பலம் யிடைவீதஞ் சர்க்கரையில் சாப்பிட தீரும் வியாதி மேகம் 21-சூலை கிரந்தி அரிச்சிரங்கு வெட்டை இவைகள் தீரும்.

## வேறுவித ரசமெழுகு.

கெந்தகம் விராகனிடை 15-யெடுத்து ஆவின்வெண்ணை பலம் 2, சேர்த்துத் தீயிற்கொளுத்திச் சுடர் தையிலமிறக்கி கல்வத்திலிட்டு ரசம் விராகனிடை 4 சேர்த்து மெழுகுபோல் அறைத்து வைத்துக்கொண்டு ஒரு பணவிடைவீதம் மூன்று நாள் ஆறு பொழுது நல்ல வெல்லத்தில் சாப்பிட வாதசூலை

தீரும் சங்கன் குப்பிச்சாற்றில் சாப்பிட கிரந்தி, அரையாப்பு, பவுத்திரம் தீரும், செருப்படைச் சாற்றில் கொடுக்க சிரங்கு, சொரி இவைகள் தீரும்.

## லிங்கர கற்பூர மெழுகு.

இரசகற்ப்பூரம் விராகனிடை 1, லிங்கம் விராகனிடை 1 இவைகளை முலைப்பாலில் யெலுமிலுச்சம் பழச்சாறு, தேன் இவைகளில் வகைக்கு ஒரு ஜாமம் அரைத்து கரண்டியில் வழித்துப்போட்டு மேற்படி சாறு கொஞ்சம் விட்டு தீபம் போல் யெரிக்க உருகி மெழுகுபோலாகும் அதில் பணவிடை வீதம் கருப்பங் கட்டியில் கொடுக்கத் தீரும் வியாதி வயற்று வலி, சூதகத்திரக்ஷி நீங்கும் திரிகடுகுப் பொடியில் சாப்பிட வாய்வு தீரும் இச்சாபத்தியம்.

## வாந்திபேதிக்கு கைகண்ட மெழுகு.

மிளகாய் பலம் 1, வருத்து விரையும் காம்பும் நீக்கி தோலை கல்வத்திலிட்டு குங்குமப்பூ விராகனிடை 1, கோரோசனை விராகனிடை அரை, இரசச்செந்தூரம் விராகனிடை 1, சாதிலிங்கம் விராகனிடை ஒன்று, பச்சை கர்ப்பூரம் விராகனிடை கால், இதில் குங்குமப்பூவை கரண்டியில் வதக்கிக் கொண்டும் ரசச் செந்தூரத்தை வெற்றிலைச் சாற்றில் சுத்தித்தும் பின்பு யாவும் வொன்ருய்க் கல்வத்திலிட்டும் தேன்விட்டு இரண்டு ஜாமம் அரைத்து மெழுகாகும் சமயத்தில் பலவகை கற்பூரம் விராகனிடை 3, கொளுத்தினதும் அமத்திக்கூடச் சேர்த்து மற்றும் ஒரு ஜாமம் அரைத்தெடுத்து குப்பியில் அடைத்து வைத்துக்கொள்ளவும் ஊழிக்கண்ட பேர்களுக்கு பச்சைக் கடலை பிரமாணம் கொடுக்கவும் தாகம் அதிகங்கண்டால் ஆற்று மணலும், நாவுரிஞ்சி, சமூலமும் போட்டுக் கரிக்கினதில் இரண்டுபடி ஜலம்விட்டு ஒருபடி ஜலமாய்ச் சுண்டக் காச்சி கொஞ்சங் கொடுத்துவர தாகம் நீங்கும்.

மெழுகுவகை சிட்கா முற்றிற்று.



## ஆறுவது

# லேக்கிய வகை சிட்கா.

### அமிர்த சஞ்சீவி லேகியம்.

| | | |
|---|---|---|
| வல்லாரை | பலம் | 6 |
| சிருபுள்ளடி | ,, | 6 |
| கொடுப்பை | ,, | 6 |
| சிற்றுமுட்டி | ,, | 6 |
| தாழைவிழுது | ,, | 6 |

இந்த ஐந்து தினுசையும் இடித்து 2-படி சலத்தில் போட்டு வற்றக்காய்ச்சி கியாழ மிருத்துக்கொண்டு ஆவின் பால், இளநீர் வகைக்குபடி ஒன்றாய்கலந்து அதின்மேல் மேற் பாணீக்கின 10பலம் இஞ்சியை மைபோலரைத்து கியாழத் துடன்சேர்த்து அடுப்பேற்றி வேகவைத்து வெந்ததின்பேரில் சீனிகற்கண்டு வகைக்கு பலம் 12, போட்டு பாகுசெய்து பிறகு கோஷ்டம், வால்மிளகு, ஏலம், கருஞ்சீரகம், நற்சீரகம் ஜாதிக்காய், கிராம்பு, அக்கராகாரம், சிவதை, ஓமம், சுருக்கு மூலம், திருகடுகு, அரைத்த ஜாதிபத்திரி, தாளிச்சபத்திரி, அதிவிடயம், திருபலே இவைகள் வகைக்கு பலம் அரைவீதம் வெதுப்பிப் பொடித்த சூரணத்தையும் வில்வப்பூ பாலில் அவித்துச் சுத்திசெய்த பரங்கிப்பட்டை வகைக்குப் பலம் 2, அன்னபேதி, காயம், முந்திரிப்பழம், பேரீச்சம்பழம், குகை நீர் வகைக்குப் பலம் அரை, குங்குமப்பூ, கோரோசனை, கஸ் தூரி, பச்சைக் கற்பூரம், அபின் வகைக்குக் கழஞ்சு 6, பொ டித்தச் சூரணத்தையும் அரை பலம் தேற்றான் விரையை ஆவின்பாலில் ஊறவைத்து அரைத்ததையும் நாலுபலம் சீந் தில் சக்கரையும் சிருகச் சிருகப்போட்டு மருந்துக்குத்தகுந்த நெய்யை சிருகச்சிருக விட்டுக்கிண்டி மெழுகு பதத்திலிரக்கி

ஆற்றி ஒருபடி தேன்விட்டு பிசைந்து வேலை ஒன்றுக்கு ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர தீரும் வியாதி மேகத்திலடுத்த சகல ரோகமும், அஸ்திசுரம், காங்கை, சீதம் இரத்தம் விழுதல் வாயுபாண்டு, சோகை, காமாலை முதலான சகல ரோகமும் தீரும். இச்சாபத்தியம்.

## வில்வாதி லேகியம்.

வில்வவேர் பலம் 5, அதின்பழம் 20, யிடித்துப்பதக்கு நீர்ப்போட்டு மூன்று படியாய் வற்றவைத்து கஷாயத்தில் வெல்லம் பலம் 10, கரைத்துக்காச்சிப் பாகு செய்து திப்பிலி மூலம், செவியம், சித்திரமூலம், மிளகு, சீரகம், ஏலம், லவங்கம், சிருநாகப்பூ, தாளிச்சபத்திரி, அதிமதுரம், குகைநீர், வாலுளுவையரிசி, சடாமாஞ்சி, அதிவிடையம் அதில் இந்துப்பும் பலம் வகைக்கு 2, குங்குமப்பு, கிராம்பு, பத்திரி, சாதிக்காய், கோரோசனை வகைக்கு விராகனிடை 2, வெதிப்பி பொடித்துத்தூவி நெய் தேன்விட்டு லேக்கியஞ்செய்து வேளையொன்றுக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர தீரும் வியாதி குன்மசத்தி, விக்கல், நெஞ்சிவலி, அரோசியம் மூக்கு நீர்ப்பாய்சல், சூலையெரிவு, காமாலை, கிராணி, சுவை இரும்பல், வயற்றுவலி கிரிமிமூலந்தீரும் இச்சாபத்தியம்.

## ஆவாரன்பூ லேகியம்.

| | | |
|---|---|---|
| ஆவாரன் பூதனிசார் | படி | 1 |
| பசுவின்பால் | ,, | 1 |
| செவ்விளநீர் | ,, | 1 |

ஆக இம்மூன்றும் ஒரு பாத்திரத்தில் விட்டு

| | | |
|---|---|---|
| முதிர்ந்த ரஸ்த்தக்காளிப்பழம் | | 12-அரை |
| அத்திப்பட்டையிடித்துப்பிழிந்த சாறுபடி | | அரை |
| கொடி மாதுளம்பழம் | ,, | முக்கால் |
| புளிப்பு மாதுளம்பழம் | ,, | 2-அரை |

| | | |
|---|---|---|
| யெலுமிச்சம்பழம் | ,, | 7-அரை |
| சோட்டாக்கிச்சிலிப்பழம் | ,, | 2-அரை |
| மணியிலாக்கிச்கிலிப்பழம் | ,, | 2-அரை |
| சீமை அத்திப்பழம் | ,, | 2-அரை |

இந்த பழங்களை ரசம்பிழிந்து வடிகட்டி முன் சாறுடன் சேர்க்கவும் பிறகு.

| | | |
|---|---|---|
| திராக்ஷிப்பழம் | பலம் | 2-அரை |
| பேரிச்சம்பழம் | ,, | 1-கால் |
| வாதுமைப்பருப்பு | ,, | 2-அரை |
| சாரைப்பருப்பு | ,, | 2-அரை |
| கசகசா | ,, | 2-அரை |

இவைகளை பசும்பாலால் நெகிழ மைபோலரைத்து ஷை சாற்றில் கறைத்து அடுப்பிலேற்றி பாதிபாகம் சார்சுண்டி வரும்போது.

| | | |
|---|---|---|
| கற்கண்டு | பலம் | 5 |
| சர்க்கரை | ,, | 7 அரை |

சேர்த்துக் கரைத்து முக்கால்பாகு பதம் வருங்காலத்தில் சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்தோல், நெல்லிக்காய்த் தோல், தானிக்காய் தோல், சோம்பு, சீரகம், தனியா, யேலக்காய், லவங்கம், ஜாதிக்காய், ஜாபத்திரி, வால் மிளகு, கடலைநீர், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, அதிமதுரம், கர்கடகசிங்கி, வாய்விளங்கம், நிலப்பனங்கிழங்கு, பூமிசக்கரைக் கிழங்கு, அமுக்கிறாங்கிழங்கு, நன்னாரிவேர், பாங்கிச்சக்கை, வாலுளவித்து, முருங்கைவித்து, ஆவாரைவித்து சப்ஜாவிரை, பூனைக்காலிவிரை, துளசிவிரை, முள்ளாங்கி விரை, வெள்ளரிவிரை, வெட்டிவேர், தேற்றான்விதை, சீந்தில் சர்க்கரை, ஆலன்விழுதின்கொழுந்து, சந்தணம் ஆகிறதுசக்

குப் பலம் கால் ஆகவும் தாளிச்சபத்திரி, மாசிக்காய் தினுசுக்குப் பலம் வீசமாகவும் இந்தச்சரக்குகளைப் புனிதப்படுத்தி வெய்யலில் உலர்த்தித் தனித்தனியே இடித்து வஸ்திர காயஞ்செய்து வகைக்குப்பலம் படிநிறுத்தெடுத்துக்கொண்டு பசும்பாலில் பிட்டுவைத்து சுத்திசெய்து யெடுத்துக்கொண்டு அந்த யீரம் உலர்த்திய சூரண கல்வத்தில் குலாப்பு பலம் அரையே அரிக்கால் பேதனை அம்பர் வீசம் ரூபா யிடை பம்பாய் குங்குமப்பூ, பச்சை கர்ப்பூரம், கோரோஜனம் ஜூன் திரியாபர்க் தினுசுக்கு விராகனிடை கால் ஆக சரக்குகளைப் பொடி செய்து சூரண கல்வத்தில் கலந்துவைத்துக்கொண்டு மேற்படி பாலில் சிறுகச் சிறுகத்தூவித் துழாவிக் கிளரிப் பாகும் சூரணமும் ஒன்று படுந்தருணத்தில் பசு நெய் வீசை காலேவீசம் விட்டு கை ஓயாமல் கலக்கும்படிக்குத்துழாவி லேக்கிய பதத்தில் இறக்கி தங்க ரேக்கு 2 அரை அல்லது தங்க பஸ்பம் விராகனிடை காலும், வெள்ளி ரேக்கு 2 அரை அல்லது வெள்ளி பஸ்பம் விராகனிடை காலும் சேர்த்துக் கொடுத்து பன்னீர் பலம் 2 அரையும் தெளித்து ஆறிவருங் காலத்தில் தேன் பலம் 2அரை விட்டு பிசைந்து இளஞ் சூடுகையுடன் சாடியில் வழித்து வைத்து வாய்மூடி வஸ்த்திர பந்தனம் செய்து விதிப்படி கால் மண்டலம் தனிப்புடம் வைத்து யெடுத்து அந்த லேக்கியத்தில் கொட்டைப்பாக்கு அளவு யெடுத்து காலே மாலே இரண்டுவேளையும் ஒரு மண்டலக்காலம் அமிர்தம்போல் யெண்ணி சாப்பிட (தீரும் வியாதிகள்) மேகம், மந்தாக்கினி, பாண்டு, வாய்வு, நீரழிவு முதலிய மூத்திரரோகம், குன்மம், க்ஷயம், அதிதூலம், அதிசுஷ்கம், உடல் விருத்தி உஷ்ணரோகம், முதலிய ரோகங்கள் நீங்கி, ஞாபக சுத்தி, சுக்கிலபரிசுத்தம், புஷ்டியுமாகி சரீர காதுக்களிரிக்கிப் பலத்தைக் கொடுக்கும். இவைகளன்றியும் மேகம் 21-க்கும் இரசித பஸ்பத்திலும் இரச செந்தூரத்திலும் நீரழிவுக்கு அபிரேக்கு செந்தூரத்திலும் தேக புஷ்டிக்குத் தங்க சம்பூரம் இரசித பஸ்பம் லோக செந்தூரத்திலும் வாய்வுக்கு அயச்செந்தூரம் முதலாகிய செந்தூரங்களிலும் கொடுக்கச் சீக்கிரத்தில் குணமாகும் இச்சாபத்தியம்.

## நெல்லிக்காய் லேகியம்.

அருபது பலம் நெல்லிவற்றலை 32 - படி தண்ணீரில் போட்டு யெட்டொன்ருய் வற்றவைத்து வடித்த கியாழத்தில் 25-பலம் சக்கரையை பாகுசெய்து அதில் அதிமதுரம், கூகை நீர், முந்திரிப்பழம் வகைக்குப்பலம் ரெண்டு, பேரிச்சம்பழம் திப்பிலி வகைக்குப்பலம்3, இவைகளை அரைத்து நெய்விட்டு கிண்டி மெழுகு பதத்தில் தேன் விட்டுப் பிசைந்து வேளை யொன்றுக்குப் புண்ணைக்காய் பிரமாணம் சாப்பிட தீரும் வியாதி வாந்தி, பித்தம், காமாலை, பித்த பாண்டு, வரட்சி, திமிர் வாய்வு, சோகை, நீர்சுருக்கு, குன்மம், உடம்பெரிவு இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## சுக்கு லேக்கியம்

நூறு பலம் சுக்கைச் சிதைத்து பதக்குநீரில் போட்டு யெட்டொனருய் வற்றவைத்து கஷாயத்தை வடித்து அதில் 10பலம் பனவெல்லத்தை கரைத்து பாகுசெய்து ஓமசூரணம் கருவேப்பலைச்சூரணம் வகைக்குப்படி அரைவிதந்தூவி அரை படி நெய் விட்டுக்கிண்டி வைத்துக்கெண்டு வேளை யொன் றுக்குக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர தீரும் வியாதி கிராணி, மூலம், திசைவாய்வு, அதிசாரம், கடுப்பு இரத்தம், பாரிச வாய்வு, வீக்கம், சூலை, பொருமல், மந்தம் செரியாமை புளித்தேப்பம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## மிளகு லேக்கியம்.

நூறு பலம் மிளகைச் சிதைத்து பதக்குநீரில் போட்டு எட்டொன்ருய் வதக்கக்காச்சி வடித்துக்கொண்டு அதில் 10 பலம் கற்கண்டைக் கரைத்துப் பாகுசெய்து அக்கிராகாரம், சீரகம், கிராம்பு, யேலம், கோஷ்டம், மதுரம், வாய் விளங்கம், பத்திரி நகருக்கு மூலம் வகைக்குப் பலம் 1, இடித்துத்தூவி நெய்நாழிவிட்டுப்பிசைந்து வேளை யொன்றுக்கு கொட்டைப்

பாக்கு பிரமாணம் சாப்பிட்டுவர தீரும் வியாதி சிலேத்துமம் 96, கபம், நீர்மேதாஷம், சிலவிஷம், வாதம், வாய்வு, இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## திப்பிலி லேக்கியம்

நூறுபலம் திப்பிலியை தூணிநீர்ப்போட்டுயெட்டொன்ருய் வற்றக்காச்சி கியாழத்தை வடித்துக்கொண்டு அதில் 10 பலம் கற்கண்டை கரைத்துப் பாகுசெய்து சுக்கு, அரத்தை, அக்கிராகாரம், கடுக்காய், ஓமம், சீரகம், கொத்தமல்லி,வெட்பாலை அரிசி, சண்பகப்பூ, கோஷ்டம், வகைக்குப் பலம் 1, பொடித்து வடிக்கட்டித்தூவி அரைப்படி நெய்விட்டுகிண்டி தேன்படி அரைக்கால் விட்டுப்பிசைந்து வேளை யொன்றுக்கு புன்னைக்கா யளவுகொள்ள தீரும் வியாதி சிலேத்துமம் 96 வாதம், அதிசாரம், வாய்வு குன்மம, உப்பிசம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## இஞ்சி லேக்கியம்.

ஒருபடி ஆவின் நெய்யில் 30-பலம் சீனியைக் கலந்து காச்சிக் கரைத்த பின்பு இறக்கி அதின் மேல் தோல் நீக்கின 10-பலம் இஞ்சியை யெலுமிச்சம் பழச்சாற்ருல் மெனமாக அரைத்து உலர்த்தின சூரணத்தையும் அரிந்து உப்புங் கலந்து மோரில் ஊரப்போட்டப் பிரண்டை, உலர்ந்த கரிப் பூவரசன்பட்டை இவைகளின் சூரணம் வகைக்குப் பலம் 1, வாலுளுவையரிசி, தாளிசபத்திரி, கடுகு, மல்லி, சித்திரை மூலம், கர்க்கடக சிங்கி, குராசாணை, ஓமம், மிளகு, சீரகம், ஏலம், திப்பிலி, அதிமதுரம், கோஷ்டம், திப்பிலி மூலம் வகைக்குப்பலம் அரை இவைகளை இடித்து வடிகட்டின சூரணத்தையுந் தூவிக்கிண்டி வேளை யொன்றுக்குக் கொட்டைப் பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர தீரும் வியாதி பித்த வாய்வு, உஷ்ணம், சத்தி, குன்மம், அரோசியம், விக்கல், அஸ்த்தி சுரம், ஜன்னி, அஜீரண வாய்வு, உப்பிசம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## அஷ்டகுன்ம லேக்கியம்.

தைவேளை பிரண்டை, குப்பைமேனி இவைகளின் சாறு வகைக்குப்படி 1, ஒன்ருய்க்கலந்து அடுப்பேற்றிக் காச்சிக் குழம்பு பருவத்தில் கல்வத்திட்டு 15-பலம் இலுப்பை அரப்புச் சுட்டக்கரியும், திருகடுகு, ஓமம், வகைக்குப்பலம் 1, கடுகுரோகணி, அன்னபேதி, குராசாணி, வோமம், காயம் வகைக்குக் கழஞ்சி 3, இவைகளையும் கூடப்போட்டு மெழுகுபோல் அரைத்துப் பின்பு 5-பலம் பனவெல்லத்தைச் சேர்த்துப் பிசைத்து தான்றிக்காய்ப்போற் குளிகை செய்து வேளையொன்றுக்கு ஒருஉண்டைவிதஞ் சாப்பிட்டுவர தீரும்வியாதி அண்ட்வாத குன்மன கெண்டை, வுப்பிசம், சமியாகம், பெருவயறு, வாய்வு திரகூபி, மலக்கட்டு, வாயால் நீர் ரத்தம்வடிதல் சகல வாய்வுந்தீரும் பத்தியம் கசப்பு புளிப்பு இவைகளைத் தள்ளவும்.

## நஷ்ட இந்திரியத்துக்கு லேக்கியம்.

முருங்கைப்பூ பலம் 10, பசும்பால் அரைபடி இரண்டுங் கலந்து அடுப்பிலேற்றி எரித்து முருங்கைப்பூ குழையவெந்த பிறகு பிசைந்துப் பிழிந்து சக்கையை நீக்கி ஜாதிக்காய், ஜாபத்திரி, லவங்கம், லவங்கப்பட்டை, குரோசாணி, ஓமம் தினுசுக்குப் பலம் ஒன்ருக இவைகளைச் சூரணித்து வடிக்கட்டி சீனுகற்கண்டு பலம் 15 மேற்படி பாலில் சேர்த்துப் பாகுபதத்தில் சூரணத்தைக் கொட்டிப் பசும் நெய் பலம் 5 விட்டு லேக்கிய பதமாய் கிளரி ஆரவிட்டு தேன் பலம் 1கால் விட்டுப் பிசைந்து அந்தி சந்தி இரண்டு வேளையும் கொட்டப்பாக்களவு சாப்பிடவும் இச்சாபத்தியம்.

## பஞ்ச தீபாக்கினி லேக்கியம்.

திருகடுகு, யேலம், சீரகம், வகைக்குப்பலம் 1,வெதுப்பி பொடித்துப் பாகுசெய்து அதில் சூரணத்தை தூவி நெய் படி அரிக்கால் விட்டுக்கிண்டி மெழுகு பதத்தில் ஆற்றி தேன் படி மாகாணிவிட்டுப் பிசைந்து வைத்துக்கொண்டு வேளை யொன்றுக்கு 1-கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர தீரும் வியாதி வாய்வு, வாதம், ஊஷ்ணம், பித்த வாய்வு சரீரத்தில் உளவு, குத்தல், வலிகடுப்பு, யெரிச்சல், பேதி, பொருமல், வாயுகிராணி இவைகள் தீரும் இச்சா பத்தியம்.

லேகிய வகை சிட்கா முற்றிற்று.



உ

ஏழாவது

# எண்ணெய் வகை சிட்கா.



## பித்தம் நாற்பதுக்கும் அயத்தெண்ணை.

அயம் பலம் 1, எலுமிச்சம்பழம் 15 அறுத்து உப்பு வைப்பதுபோல் அயத்தை உள்ளே வைத்து ஒரு விசை சாம்பிராணிப் பூண்டென்ன பிரமிவழுக்கையைச் சுத்தஞ் செய்து பேர்பாதியாக்கி ஒரு பெரிய பாண்டத்தில் போட்டு காலரைபடி ஜலம்விட்டு மேற்படி பழத்தைவைத்து வெள்ளை வெங்காயம் பலம் 2, பொடித்து மேல்தூவி பின்பு பேர்பாதி யிலையை மூடி அசையாமல் அடுப்பலேத்தி தினமொன்றுக்கு

இரண்டு நாழிகை 9-நாள் யெரிக்கவும் சிதைச் சுண்டினே பிறகு நன்றாகப் பிசைந்து கிட்டியால் பிழிந்து சரிபிடை சித் தாமணக்கெண்ணே சேர்த்து மெழுகுபதம் காச்சவும் அரை யணு யிடைப் பிரமாணம் சாப்பிட்டு இரண்டு நாழிகைப் பொருத்து தயிருஞ் சாதம் சாப்பிடவும் தீரும் வியாதிகள் பித்தம், 40 தலைசுண்டு, தலைப்புத்து, தலை நடுக்கம், தேக நடுக்கல், காமாலை, தலைமயிர் விழுந்துபோகின்றது கால், கை, அசதி, பித்தப்பாண்டு முதலியவைகள் நீங்கும் விந்துக்கட்டி பலம் அதிகமாகும் இச்சாபத்தியம்.

## முடக்கத்தான் எண்ணே.

முடக்கத்தான்சாறு கள்ளியை வாட்டிப்பிழிந்த சாறு வகைக்குப்படி முக்கால் சிற்றுமணக்கெண்ணே படி ஒன்ன ரையில் சிவதைவேர், கொடிவேலிவேர், வெள்ளைக் காக்கணம் வேர், சிற்றரத்தை, சதகுப்பை, தேவதாரம், இந்துப்பு, திப் பிலி, பெருங்காயம், கடுகுரோகணி கழற்சி பருப்பு வகைககு பலம்1, சுத்திசெய்த கோவாளமுத்து 20, வெள்ளுள்ளி பலம் 4, இவைகளை அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து வைத் துக்கொள்ளவும் கடும் பத்தியமாய்க் காண்டிவீதம் சாப்பிட தீரும் வியாதிகள் அண்டவாதம், குடல்வாதம்,வாய்வு இவை கள் தீரும்.

## கொடிவேலி எண்ணே.

நெல்லெண்ணெய் கால்படி, கொடிவேர்ப்பட்டை அரை பலம், கருப்புக்கட்டி கால்பலம் அரைத்துப்போட்டு மெழுகு பதத்தில் காச்சிக் கடுகுடன் வேளையொன்றுக்கு ஒரு உச்சிக் காண்டிவீதம்சாப்பிட மூன்றுநாள் ஆறுவேளை தீரும் வியாதி கள் அரையாப்பு தீரும் கடும்பத்தியமாக யிருக்கவேண்டும் நாலாம்நாள் தலைக்கு தண்ணீர் விடவும் அன்றைக்கு வருத்த உப்பு சேர்க்கவும்.

## நீரடைப்புக்கு எண்ணை.

விளக்கெண்ணெய் படி காலில், யீருள்ளி பலம் 1, சிதைத்துப்போட்டு பொன்னிறமாய்க்காய்ச்சி வடித்து பொரித்த வங்காரம், கடுக்காய்த்தூள் வகைக்கு கழஞ்சு 1, போட்டுக் கலக்கிக்கொடுக்க நீரும் வியாதிகள் துன்மாங்கிசம் நீரடைப்பு இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## குழந்தைகளுக்கு மாந்த எண்ணை.

## (குமாரதேவர் முறை)

சன்னியாசி கிழங்குயென்று சொல்லுகிறசெம்பிரண்டை நெடுங்கொடியாய் படராத குருங்கொடியின் கிழங்கு முள்ளாங்கிக் கிழங்குபோல் யிருக்குமதை பில்லை பில்லையாய்த் திரித்தியதை பலம் 25, வெங்காயம் பலம் 10, உரித்த வெள்ளைப்பூண்டு பலம் இரண்டரை, சித்தாமணக்கெண்ணெய் பலம் 50, இம்மூன்றையுஞ் சேர்த்து அடுப்பிலிட்டுத் துடுப்பினால் துழாவச் சிலம்பை சப்தத்தில் யெடுத்து வடித்துக் கொண்டு கரிமஞ்சள் பலம் அரை, கார்போகவரிசி பலம் அரை, வெட்பாலையரிசி பலம் 1, கருஞ்சீரகம் பலம் அரை, வெந்தயம் பலம் அரை இளம் வருப்பாய் வருத்து வடிக்கட்டி மேற்படி யெண்ணெயிற் கலக்கி குழந்தைகளுக்கு வாரத்துக்கு ஒருவிசை ஒரு கரண்டி கொடுத்தால் மாந்தம் அணுகாது இச்சாபத்தியம்.

## உள்ளுக்கும் மேற்பூசுக்கும் கரப்பான் எண்ணை.

சீரகம், கார்போகவரிசி வெட்பாலையரிசி, கருஞ்சீரகம், ஏலம், நிறுசுக்கு அரை பலம், கம்பிசின் கால் பலம், கடுகுரோகணி அரையரிக்காப்பலம் இவைகளையும் பொடித்துச்சிறுதுத்திவேர்ப்பட்டைபலம் 5, நய்யத்தட்டி விளக்கெண்ணெய் அரைபடி விட்டு மேற்படி சாக்குகளையுஞ் சேர்த்து கல்வத்

தில் ஒரு ஜாமம் நன்ருய் அரைத்து 3-நாள் சூரிய புடம் வைத்து உள்ளுக்குக்கொடுத்து மேலுக்கும்பூச தீரும் வியாதிகள் மண்டைக் கரப்பான் கைகால் ரணம் உப்புப்போல் உலர்ந்துபோகும் இச்சாபத்தியம்.

## சந்தன எண்ணெ.

சந்தனத்தூள் பலம் 8, நெல்லெண்ணெய் பலம் 10, இவைகளை பதக்குநீரில் கலந்து நீர் வற்றக்காய்ச்சி வடித்து சீசாவிலடைத்துக்கொண்டு பஞ்சில் தோய்த்துக் கையில் வைத்திருக்கத் தேகத்தில் வாடையேரிச் சுகத்தைத்தரும் சொரி, சிரங்கு, கரப்பான் புண்ணிற்றடவ ஆரும்.

## மேக ராஜாங்கத்தெண்ணெ.

| | | |
|---|---|---|
| சிற்ருமணக்கெண்ணெய் | படி | 4 |
| சுருள்ளிசார் | ,, | 2 |
| கழுதை லத்திசார் | ,, | 2 |
| கொமட்டிச்சார் | ,, | 2 |
| கையாந்தகரைசார் | ,, | 2 |
| புளியாரைசார் | ,, | 2 |
| சங்குசார் | ,, | 2 |
| வல்லாரைசார் | ,, | 2 |
| பொடுதலைசார் | ,, | 2 |
| செருப்படைச்சார் | ,, | 2 |
| கருநொச்சிசார் | ,, | 2 |
| பொன்னுங்கண்ணிசார் | ,, | 2 |
| நுணயிலைசார் | ,, | 2 |
| ஆடாதோடைசார் | ,, | 2 |
| வெள்ளெருகுசார் | ,, | 2 |
| சிவன்வேம்புசார் | ,, | 2 |

இந்த பதினறு தினுசுகளின் சார்வகைக்குபடி இரண்டு யெடுத்து ஒன்றாகக் கலந்து வைத்துக்கொண்டு பிறகு கொடிவேலி, பூவரசம், நிலாவரைவேர், கிளிமூக்குக் கிழங்கென்ற கற்றாழைக்கிழங்கு, அப்பைக் கிழங்கு, சங்கங்குப்பிவேர், இவைகளை வகைக்குப் பலம் 1 நிறுத்து இடித்து குறுணி நீரிற்போட்டு யெட்டொன்றாய் வற்றக்காச்சி கிஷாயத்தை வடித்து மேற்படி சாரில் சேர்க்கவும்.

ஜாதிக்காய்
கிராம்பு
யேலம்
சன்னலவங்கப்பட்டை
வால்மிளகு
அதிமதுரம்
ம்காஷ்டம்
திப்பிலிமூலம்
வெங்காரம்
குறுசாணி ஓமம்
தான்றிக்காய்
கருஞ்சிரகம்
கார்போகவரிசி
கஸ்தூரிமஞ்சள்
அரைத்த சுக்கு
அதிவிடையம்
அக்கிராகாரம்
கடுகுரோகணி
சடாமாஞ்சில்
தாளிச்சபத்திரி

கசகசா
கஞ்சா
வலம்புரிக்காய்
பரங்கிப்பட்டை
அழிஞ்சிர்ப்பட்டை
வாலுளுவையரிசி
சிருநாகப்பூ
ரகமோசம்
வசம்பு
சுக்கு
அபிவசன்வாசி
சீரகம்
ஆனைத்திப்பிலி
குங்குமப்பூ
சாத்திரபேதி
வாளம்
செங்கொட்டை
சத்திச்சாரம்
யேவச்சாரம்
நவாச்சாரம்

இந்த நாற்பது தினுசும் வகைக்குவிராகனிடை நாற்பது யெடுத்துப் பொடித்துப்போட்டு அடுப்பேற்றிக்காச்சி மெழுகுப் பதத்தில் வடித்து வைத்துக்கொள்ளவும். வேளையொன்றுக்கு உச்சி கரண்டிவீதம் மூன்று நாள் ஆறுவேளைகொள்ள தீரும் வியாதிகள் கிரந்தி, அரையாப்பு, சூலை, விப்புருதி, கண்ட மாலை, மேகம், உஷ்ணம், சோகை, பாண்டு, கழல் வாதம், அண்டவாதம், கல்வாதம், பக்கவாதம், பௌத்திரம், மூலப்பற்று, மண்டைச்சூலை, வாயு ரணம், சூலை இவைகள் தீரும். கடும்பத்தியமாக யிருக்கவேண்டும் தொவரம்பருப்பு வறுத்த உப்பும் கூட்டிக்கொள்ளலாம்.

## மதனகாமேசுரப்பூ யெண்ணை.

இரண்டுசேர் மதனகாமேசுரப்பூவை மலருமுன்கொண்டு வந்து பதக்கு நீரில்போட்டு வைத்திருந்து மலர்ந்த பின்பு நாலு பலம் நல்லெண்ணைவிட்டு வேகவைத்து யிறக்கி யெண்ணையைத் துண்டாயப் பிரித்து யிருத்து சீசாவில் வைத்துக் கொள்ளவும் உடம்பிற் பூசிக்கொள்ள சுகம் நல்கும் வசியமாகும்.

## ஜாதிக்காய் யெண்ணை.

நல்லெண்ணை படி 5, முலைப்பால்படி அரிக்கால், ஆவின் பால் கால் படி ஒன்ருய்க்கலந்து ஜாதிக்காய்ப்பலம் 2, ஜாபத்திரி வெந்தியம் வகைக்குப் பலம் 1, குமரிச்சாற்ருல் அரைத்து மேற்படி யெண்ணையில் போட்டுக்காச்சி வடித்து வைத்துக்கொள்ளவும் அதில் 1 துளியவாது அல்லது 2 துளியாயாவது நல்ல சலம்விட தீரும் வியாதிகள் கணம், தோஷம், இரத்தவாந்தி இரத்தக்காசம், வாந்தி, இருமல், கக்குவாய், சீதபேதி, இரத்தபேதி இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

யெண்ணை வகை சிட்கா முற்றிற்று.



# தைல வகை சிட்கா.



## சகலரோக நிவாரண சந்தனாதித் தைலம்.

சந்தனத்தூள் பலம் 10, நன்னாரி, நத்தைச்சூரி, தண்ணீர்விட்டான் காரடை, இருவேலி, அயக்கார சிந்தி இவைகளின் சமூலம், முத்தக்காசு, அதிமதுரம், செஞ்சந்தனம், அகில், வில்வவேர், தேவதாரம், மதுரம், கோஷ்டம், லவங்கம் லவங்கப் பத்திரி, கருவாய்ப்பட்டை தக்கோலம் வகைக்குப் பலம் 1 இவைகளை இடித்து தூணிநீரிர் போட்டு பதினாறில் ஒன்றாய்வற்றக்காச்சி வடித்துக்கொண்டு அதில்நல்லெண்ணை நாலுபடி முசுமுசுக்கைச்சாறு படி 3 பொன்கரையான் சாறு படி அரை, ஒன்றாய் கலந்து பின்பு வால்மிளகு, சுக்கு,கோஷ்டம், பச்சைப்பூலாக்கிழங்கு, அரைத்த ஜடாமஞ்சள், ஓமம், வெளிச்சிப் பிசின், வேம்பாடம் பட்டை, ஏலம், மல்லி, அபின்,சாதிக்காய், கருஞ்சிரகம், கார்போகவரிசி, சாதிபத்திரி மாசிக்காய், சண்பகப்பூ, சிறுநாகப்பூ, கிராம்பு, கிளியூரப் பட்டை, நாகணம், புனுகு இவைகள் வகைக்கு விராகனிடை 2, ஆவின் பாலால் அரைத்து முன் கஷாயத்துடன் சேர்த்து அடுப்பேற்றிக் காச்சி பதத்தில் வடித்து வைத்துக்கொள்ளவும் அதில் ஸ்தானம் செய்துவர தீரும் வியாதிகள், வாயுவுஸ்த்தந்தம், முத்திய நீர்ப்பாச்சல், மண்டைநோய், கபால வலி, கண்ணோய், செவிநோய், வியர்வை, தாகம், பீனிசம், வாக்ஷியீளை, சோகை, விஷபாகம், குஷ்டம், குன்மம், தடிப்பு, க்ஷயம், மேகம், பிரமேகம், கிருகிருப்பு, அரோசியம் இவைகள் தீரும் பத்தியம் ஆட்டிரச்சி, கத்திரிப்பிஞ்சு, முருங்கை, துவரை, மிளகு நீர் இதுகளாகும் ஸ்தானஞ் செய்த தினம் பகலில் நித்திரை, புகை, பொடி புத்தகங்கள் வாசிப்பு, அதிக நடை, ஸ்ரீபோகம் இவைகள் நீக்கவும்.

யில் அரைத்து மேற்படி சாற்றில் கலந்து அடுப்பேற்றி யெரித்துக்காச்சி வடித்துக்கொண்டு ஸ்தானஞ் செய்துவர தீரும் வியாதிகள் உட்சுரம், உஷ்ணம், கைகால் உடம்பெரிவு, கண்ணெரிவு, சூடு இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## கீழ்காய் நெல்லித்தைலம்.

கீழ்காய், நெல்லி சமூலம், துலாசம் 4, இடித்து தூணி நீரில்போட்டு யெட்டொன்ருய்க் கியாழஞ்செய்து பின்பு யெல்லெண்ணை ஆவின்பால் வகைக்குப்படி 2, சீரகம் பலம் அரை போட்டுக்காச்சி மெழுகு பதமாய் வடித்துக்கொண்டு ஸ்தானஞ் செய்துவர தீரும் வியாதிகள் பித்தவெட்டை, மஞ்சட் காமாலை, வாந்தி, தலைமயக்கம், வாயூரல், உட்சுரம், நடுக்கம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## அருகன்வேர் தைலம்.

அருகன்வேர் பலம் 100, இடித்து தூணிநீரில் போட்டு எட்டொன்ருய் வற்றக்காச்சி வடித்தக் கஷாயத்தில் நல்லயெண்ணை படி 1 விட்டு கோரைக்கிழங்கு, பூமிச் சக்கரைக் கிழங்கு, அமுக்காரங்கிழங்கு வகைக்குப் பலம் 1, ஆவின் பாலாலரைத்துப்போட்டுக் காச்சி வடித்துக்கொண்டு ஸ்தானம் செய்துவர தீரும் வியாதிகள் மூலச்சூடு, மேகக்காங்கை, பித்தம், வாதம், அரிகிரந்தி, சூலை, வயரெரிவு, நெஞ்சு நோய், தேகவரட்சி நீர்கடுப்பு இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## துளசித் தைலம்.

| | | |
|---|---|---|
| துளசிச்சாறு | படி | 1 |
| தின்னீற்று பச்சிலைச்சாறு | ,, | |

| | | |
|---|---|---|
| நெல்லெண்ணை | ,, | 1 |
| பசும்நெய் | ,, | 1 |
| பசும்பால் | ,, | 4 |
| சிற்ருமணக்கெண்ணை | ,, | 2 |

இவைகளை ஒன்ருய்க்கலந்து பிறகு மஞ்சள் மரமஞ்சள் சுக்கு முத்தக்காசு வெட்டிவேர் விலாமிச்சம்வேர் சீரகம் அதிமதுரம் கர்க்கடகசிக்கி சன்னலவங்கப்பட்டை வலம்புரிக் காய் சாதிக்காய் தக்கோலம் சடாமஞ்சி ஓமம் பரங்கிப்பட்டை சண்பகப்பூ கசகசா அதிவிடையம் கடுகுரோகணி பீதரோ கணி தேவதாரம் சந்தனக்கட்டை அபின் சிருநாகப்பூ வகை க்கு விராகனிடை 3-இவைகளை பசும்பால் விட்டு அரைத்து மேற்படி சாற்றில்போட்டு அடுப்பேற்றிக் காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு ஸ்னானம் செய்துவர தீரும் வியாதிகள் க்ஷயம், காசம், பீனிசம், குன்மம், கிராணி, பாண்டு, மண்டை யிடி, சூலை, காதுமந்தம், கண்புகச்சல், தேகவலி நீங்கும் இச்சாபத்தியம்.

## ஸ்தானத்திற்கு மிரிஞ்சித் தைலம்.

நல்லெண்ணைபடி 2, பசும்பால் படி 2, இவை யிரண்டும் ஒரு பாண்டத்தில் விட்டு மிளகு படி 1, நன்ருகபாலிரைத்து மேற்படி பாலில் கலக்கி மஞ்சள் பலம் 1, அதிமதுரம் பலம் அரை, செஞ்சந்தனம் பலம் அரை, கோஷ்டம் பலம் அரை, தேவதாரம் பலம் அரை, சீரகம் பலம் அரை, கருஞ்சீரகம் பலம் அரை, கிராம்பு கால் பலம், அரிசி திப்பிலி கால் பலம், இலுப்பப்பட்டை பலம் அரை இவைகளை பசும் பாலால் நெகிழ அரைத்து மேற்படி எண்ணையில் கலக்கி அடுப்பேற்றி சிறு தீபாகக் காய்ச்சி பக்குவமணம் உண்டாகும்போது

வடித்து அதில் புனுகு சட்டம் 1-பலம் தைலமிரக்கி அதையும் சேர்த்து வைத்துக்கொண்டு ஸ்தானம் செய்ய தீரும் வியாதிகள் கண்டத்திற்கு மேற்பட்ட சகல வியாதிகளும் தீரும், தலைநோய், கண் சிவப்பு முதலியவைகள் தேய்க்கமாகும் இச்சாபத்தியம்.

## சங்கன்வேர் தைலம்.

சங்கன்வேர்ப்பட்டை 3-பலம் இடித்து நாலுபடி நீரிற் போட்டு ஒருபடியாய் வற்றக்காச்சிய கியாழத்தில் ஆவின் பால் இளநீர் நல்லெண்ணெ வகைக்கு அரைபடி கூடவிட்டு மிளகு விராகனிடை 5, பூலாக்கிழங்கு சிரகம் கஸ்தூரி மஞ்சள் வகைக்கு விராகனிடை இரண்டரை இவைகளை அரைத்து கஷாயத்தில் சேர்த்து அடுப்பேற்றிக் காச்சி வடித்து வைத்துக்கொண்டு ஸ்நானஞ்செய்ய தீரும் வியாதிகள் மேகக் காங்கை, சொரி, மற்ற தேகத்திலடுத்த வியாதி வாய்வு முதலான ரோகம் தீரும் இச்சாபத்தியம்.

## சிறு சந்தனாதி தைலம்.

நல்லெண்ணெ பசும்பால் வகைக்கு 1 - பலம் ஒன்றாய்க் கலந்து அதில் சந்தனத்தூள் 2 பலம், திருமஞ்சன திரவியம் கால் பலம், பசும் பாலால் அரைத்துப்போட்டுக் காய்ச்சி பூசிவர பித்தமேகம், உடம்பெரிவு, வெட்டை, கண் கைகால் காந்தல் தீரும் இச்சாபத்தியம்.

## சகல சுரநாசத் தைலம்

அரத்தை அமுக்குராகிழங்குசதகுப்பை கோஷ்டம் மாமஞ்சள் கொம்பரக்கு திரிகடுகு மதுரம் திரிசாதம் கடுகுரோ

கணி முத்தக்காசு வகைக்குக் கழஞ்சு 2 இடித்து ஒருபடி நல்லெண்ணெயிற் போட்டுக்காய்ச்சி வடித்து ஸ்நானஞ் செய்துவர தீரும் வியாதிகள் சுரம் காந்தல் வெப்பு பழஞ்சுரம் சுரத்தினுலுண்டாகும் பலபிணிகளும் தீரும் இச்சாபத்தியம்.

## கரிப்பான் தைலம்

கரிப்பான் சாறு நல்லெண்ணெய் வகைக்கு 1-படி கற்றாழைச்சாறு நெல்லிக்காய்ச்சாறு வகைக்கு கால்படி, கஸ்தூரி மஞ்சள் சாதிக்காய் வகைகுக் 1-பலம் பசும்பாலினுல் அரைத்து மேற்படி சாற்றில் சேர்த்து அடுப்போற்றி சிறுகத்தீப் போட்டுக் காய்ச்சி வடித்துக்கொண்டு ஸ்நானஞ் செய்துவர தீரும் வியாதிகள் கண்ணேய் தலைநோய் செவிநோய் பித்தம் உஷ்ணம் பீனிசம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## நச்சுவலிக்கு தைலம்.

எலுமிச்சம்பழச்சாறு 1அரை நல்லெண்ணெய் படி 1-இவைரெண்டும் ஒன்ருகச் சேர்த்து கர்ப்பூரசலாசத்து கல்நார் அதிமதுரம் அக்கிராகாரம் லவங்கப்பத்திரி சாத்திரவேதி கோஷ்டம்வாய் விளங்கம் சாதிக்காய் லவங்கப்பட்டை கருஞ்சீரகம் கோரோசனை பூலாக்கிழங்கு மரமஞ்சள் வகைக்கு கால் பலம்அரைத்து மேற்படிஎண்ணெயிற் போட்டு அடுப்பேற்றி சிறு தீயாக யெரித்துக் காய்ச்சி பதத்திலிறக்கி வடித்துக் கொண்டு ஸ்நானஞ் செய்து உள்ளுங்குச் சாப்பிட்டுவர மேகபித்தம் நச்சுவலித்தீரும் இச்சாபத்தியம்.

தைலவகை சிட்கா முற்றிற்று.



## ஒன்பதாவது
# குளிகை வகை சிட்கா.

### மதனகாமேசுரக் குளிகை.

வாலைரசம் கழஞ்சு 3, லிங்கம் கழஞ்சு 1, முருங்கை வித்து, சாதிக்காய், முத்தக்காசு, கிராம்பு, அபின், கஞ்சா, பூனைக்காலிவித்து, பூமிசக்கரைக் கிழங்கு, நிலப்பனைக் கிழங்கு, சமுத்திர சோகிவிரை, சாதிபத்திரி, சாரைப் பருப்பு, வெங்காரம் வகைக்கு அரை பலம் இவைகளைப் பொடித்து முத்தின தேங்காய்க்குள் அடைத்து மூடி சாணியிற்போட்டு பூசி காயவைத்து சிரட்டைக் கருகும்படிப் புடம் போட்டு ஆறவிட்டு யெடுத்துச் சிரட்டை நீக்கி மெழுகுபோல் அரைத்து தேற்றான்விரைப் பிரமாணம் உருட்டி நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு சக்கரையில் வைத்துச் சாப்பிட்டு பிறகு பசும் பாலும் அன்னமும் சாப்பிடவும் தாது விர்த்தியாகும். புணரும் காலத்தில் விந்து கலிதமாகாவிட்டால் எலுமிச்சம் பழம் வாயிலிட்டு சப்பி சார்முழுங்க கலிதமாகும்.

### வேறுவகை வீரியவிர்த்திக் குளிகை.

அபின், மவனப்பூ, கிராம்பு, சாதிக்காய், மாருட்டி மொக்கு, தங்க பற்பம், சாம்பிராணிப்பூ, முருங்கை வித்து, ஆலன் வித்து, அரசு வித்து, அத்தி வித்து, அதிமதுரம் இவைகளை வோர் நிறையாய் முருங்கைப்பூ சாற்றில் அரைத்துச் சுண்டக்காய்ப்பிரமாணம் உருண்டைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். ஆவின் பாலில் முருங்கைப்

பூவைப்போட்டுக் காச்சி வடித்து வேளைக்கு ஒரு உண்டை மேற்படி கஷாயத்தில் ஒரு மண்டலம் சாப்பிட தேகம் பல த்து வீரிய விர்த்தியாகும் பத்தியம் புளி உப்பு நீக்கவும். பசும்பாலாகும்.

## இந்திரிய புஷ்டிக்கு

அமுக்கிராங்கிழங்கு, நீர்முள்ளி வித்து, குருந்தொட்டி வேர் இவைகளை பொடித்து வடிக்கட்டி திரிகடுகுப் பிரமா ணம் ஆவின் வெண்ணெயில் மத்தித்துச் சாப்பிட்டுவர இந்தி ரிய புஷ்டியாகும்.

## இந்திரியங்கட்ட.

மூன்று கோழி முட்டை மஞ்சள் கருவும் அபினும் அக் கிராகாரம், நிலப்பனங்கிழங்கு, சக்கரை இவைகளை ஓர் நிறை யாய்த் தேன் விட்டு அரைத்துச் சுண்டக்காய்ப் பிரமாணம் உருண்டைசெய்து சாப்பிட்டு பிறகு ஆவின் பால் குடிக்கவும் இந்திரியங்கட்டும்.

## இந்திரிய பந்தனம்.

திரிகடுகு, சிறுநாகப்பூ, கிராம்பு, பத்திரி, வால் மிளகு, சீரகம், தக்கோலம் வகைக்குக் கலஞ்சி 16, கோரக்கர் மூலி, அபின் வகைக்குக் கழஞ்சி ஒண்ணேகால் இவைகளை பசும் பால்விட்டு அரைத்து மூன்றுவீசம் படி நெய்யில் வேக வை த்து நெய்யை வடித்து வைத்துக்கொள்ளவும் அதில் ஒரு சிறுகரண்டி யெடுத்துச் சாப்பிட்டுபிறகு பாலும் அன்னமும் போசித்துப் புணர இந்திரியம் கலிதமாகாது புளி தள்ளவும்.

## வீரிய விர்த்திக்கு.

சாதிக்காய், அதிமதுரம், கஸ்தூரி மஞ்சள், குங்குமப்பூ லவங்கப்பட்டை முருங்கை வித்து, பூனைக்காலிவித்து, அமுக்கிராங் கிழங்கு, கோஷ்டம், அக்கிராகாரம், கசகசா, ஓமம், சூராசாணி, சமுத்திராச் சோகிவிரை, இவைகளை யோர்நிறையாய் சூரணித்து அந்த யிடைக்கு கெஞ்சா சூரணம்சேர்த்து தேன்விட்டு மூன்றுநாள் அரைத்து தூதுளங்காயளவு சாப்பிட்டுவர வீரய வீர்த்தியாகும்.

## வீரிய விர்த்திக்கு மதனசஞ்சீவி லேகியம்.

ஒருபடி ஆவின்பாலில் 4-பலம் கோதுமை மாவையும், 20-பலம் சீனிசர்க்கரையும் போட்டுக்கிண்டி காச்சிப் பாகு பதத்தில் நீர்முள்ளி விரை, நிலைப்பனங்கிழங்கு லவுங்கப் பட்டை பனம்வேர் வகைக்கு 4-பலம் கருவேலம்பிசின் கஞ்சா வகைக்கு 2-பலம் சந்தனம், சாதிக்காய், கிராம்பு, பெருஞ்சீரகம் வகைக்கு 2-விராகனிடை, திப்பிலி அரைபலம் விட்டுக் கிண்டி மெழுகு பதத்தில் இறக்கி ஆற்றி பேரிச்சம்பழம் 4, தேன் பலம் 3, சேர்த்துப் பிசைந்து வேளை யொன்றுக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர விந்துரும் போகமிகுரும் இச்சாபத்தியம் பசும் பால் சேர்த்துக் கொள்ளவும்.

குளிகை வகை சிட்கா முற்றிற்று.



பத்தாவது

# கண்டா அவிழ்த சிட்கா.



## விஞேதகன் தைலம்.

| | | |
|---|---|---|
| செந்தாமரைப்பூ | பலம் | 1 |
| ரெட்டை நந்தியாவட்டை | ,, | 4 |
| புளிப்பு மாதளம்பூ | ,, | 4 |
| செந்தாமரைப்பூ | ,, | 9 |

இந்த நாலு தினுசும் இடித்து ரசம் பிழிந்துக்கொண்டு அந்த ரசத்தினுடன் கூரல்யெண்ணெ இரண்டரைபலம் விட்டு இலம்பதமாய்க் காய்ச்சி வடித்த தைலத்தில் பூத்தேன் ஒன்னேகால் பலம் லவங்கப்பூ நீக்கியது விராகனிடை ஒன்று இவைகளை மேற்படி தைலத்தால் மைபோல் அரைத்துச் சேர்த்து ஒரு குப்பியிலடக்கஞ்செய்து வைத்துக்கொள்ளவும் கண்ணில் காமாலை தீட்ட கண்ரோகங்கள் 96-ம் தீரும். ஸ்நானத்தினன்று நீக்கவும்.

## கண் பூவுக்கு

தேள் கொடுக்கிலை நந்தியாவட்டை புட்பம் ஓர் நிரையாய்க் காய்ச்சி நேத்திரத்தில் காலை மாலை இருவேளை விட்டுவர கண்பூவு மாறும்.

## கண்ரோகங்களுக்கு மை.

பீதரோகணி மஞேசிலை வகைக்கு ஒரு கழஞ்சி வீதம் வெண்ணெயிலும் பாலிலும் அரைத்து புது சட்டியில் உள்

புறத்தில் பூசி பிறகு விளக்கில் நெய்விட்டு தீபமேற்றி சட்டியில் மைபரவ வைத்ததற்கு நிகர் துணிகட்டி கரிசேர்த்து வெண்ணெயில் மத்தித்து நேத்திரத்தில் தீட்ட சகல கண் ரோகங்களும் தீரும்.

## கண்ரோகமுடையவர்களுக்கு காலில் தேய்க்க தைலம்.

சின்னிச்சாறு நல்லெண்ணெ வகைக்குபடி 1, ஒன்ருய்க் அதில் நாபிக்கிழங்கு விராகனிடை 1, சிதைத்துப்போட்டு கலந்து காலில் தேய்த்துவர நன்மையாம்.

## காதில் சீழ் மாரலுக்கு.

சத்திச்சாரணைக்கிழங்கு, கிளாவேர், நெல்லிவேர், கையாந்தகரை செப்பு நெரிஞ்சில் இவைகளை யோர் கிரையாய்த் தட்டி 5 பலம் வேப்பெண்ணெயில் இட்டு அடுப்பேற்றிகாச்சி இறக்கிய தைலத்தை ஆற்றி அதில்விட்டு சீலையால் காதை அடைக்கவும் சீழ் நிற்கும் இப்படி மூன்று நாள் ஆறு வேளை விடவும்.

## வேறு காது சீழ்மாரலுக்கு.

மனோசிலை, தாளகம், செங்கொட்டை வகைக்கு விராகனிடை 1 எடுத்து தூளாக்கி 3 — பலம் நல்லெண்ணெயிற் போட்டு வெள்ளாட்டுநீர் நாழி 1, கூடவிட்டு பதமாய்க் காச்சி வைத்துக்கொண்டு காதுக்கு மூன்று வேளை விடதீரும்,

## காதிரைச்சலுக்கு

தைவேளைச்சாறும் நல்லெண்ணெயும் வகைக்கு 2 பலம் எடுத்து ஒன்ருய்க்கலந்து காய்ச்சிக் காதில் 3-நாள்விட காதிரைச்சல் தீரும்.

பத்தாவது

# கண்டா அவிழ்த சிட்கா.



## விஞேதகன் தைலம்.

| | | |
|---|---|---|
| செந்தாமரைப்பூ | பலம் | 1 |
| ரெட்டை நந்தியாவட்டை | ,, | 4 |
| புளிப்பு மாதளம்பூ | ,, | 4 |
| செந்தாமரைப்பூ | ,, | 9 |

இந்த நாலு தினுசும் இடித்து ரசம் பிழிந்துக்கொண்டு அந்த ரசத்தினுடன் கூரல்யெண்ணை இரண்டரைபலம் விட்டு இலம்பதமாய்க் காய்ச்சி வடித்த தைலத்தில் பூத்தேன் ஒன்னேகால் பலம் லவங்கப்பூ நீக்கியது விராகனிடை ஒன்று இவைகளை மேற்படி தைலத்தால் மைபோல் அரைத்துச் சேர்த்து ஒரு குப்பியிலடக்கஞ்செய்து வைத்துக்கொள்ளவும் கண்ணில் காமாலை தீட்ட கண்ரோகங்கள் 96-ம் தீரும். ஸ்நானத்தினன்று நீக்கவும்.

## கண் பூ வுக் கு

தேள் கொடுக்கிலை நந்தியாவட்டை புட்பம் ஓர் நிரையாய்க் காய்ச்சி நேத்திரத்தில் காலை மாலை இருவேளை விட்டு வர கண்பூவு மாறும்.

## கண்ரோகங்களுக்கு மை.

பீதரோகணி மஞேசிலை வகைக்கு ஒரு கழஞ்சி வீதம் வெண்ணையிலும் பாலிலும் அரைத்து புது சட்டியில் உள்

## காதுமந்தத்திற்கு.

முசுமுசுக்கை யிலையும் வெள்ளுள்ளியும் சிதைத்துக் கசக்கிக் காதில் 3-நாள்விட தீரும்.

## காதுவலிக்கு.

கள்ளியைவாட்டிப் பிழிந்தச்சாறு 1 படி, நல்லெண்ணை 1 படி, வெள்ளுள்ளிசாறு 1 படி, பசும்பால் 1 படி இவைகளை ஒன்றாய்க்கலந்து அதில் முருங்கைவேர், வசம்பு வகைக்கு கழஞ்சு 4 அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து வைத்துக் கொண்டு 10-நாள் காதில்விட்டு சிலையால் அடைத்து வைக்க தீரும்.

## க்ஷயத்திற்கு சுரசம்.

உத்தாமணியிலை, குப்பைமேனி, சங்கிலை, தூதுவளை ஆற்றுமுள்ளி யிலை, மெம்முள்ளியிலை, துளசி, இவைகளை வகைக்கு ஒருபிடி யிடித்து பிட்டுவைத்துப் பிழிந்துக்கொண்டு காசியிடை தேன்விட்டு முத்துய் பவழபற்பம் சேர்த்து கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## தொந்தசுர கியாழம்.

சிருதேக்கு, பற்பாடகம், முத்தக்காசு, சிந்திற்கொடி, நன்னாரி, சிருகாஞ்சொரி, தேவதாரம், கோஷ்டம், பேப்புடல் சுக்கு இவைகள் சரியிடையா யிடித்து தண்ணீரில் யெட்டொன்றாய்க் காய்ச்சி இரண்டு மூன்றுபோது தினம்கட்டு மாத்திரையில் சாப்பிடத் தீரும் வியாதி வாதம், பித்தம், அஸ்திசுரம் இவைகள் தீரும் பத்தியம் புளிப்பு தவிற்கவும்.

## சகல மேககடுப்புக்கு மாத்திரை.

ஆவாரம் விரை படி 1, காசுக்கட்டி பலம் 1, கற்பூரம் பலம் 4, இவைகளை பொடித்து தேன்விட்டு ஒருசாமம் அரைத்து கடலையளவு உரிட்டி உலர்த்தி வேளையொன்றுக்கு ஒரு உருண்டைவீதம் வெண்ணெயில் ஊரவைத்து தேனில் மத்தித்து 15 - நாள் சாப்பிட சகல மேக கடுப்பு தீரும், இச்சா பத்தியம்.

## நீர்சுருக்கு ரத்த பிரமியந்திற்கு.

அமுக்குராம் இலையுந் தண்டுமிடித்த சாறு நாழி 1, ஆவின்பால் நாழி 1, ஆவின் நெய் நாழி 2, ஒன்றாய்க் கலந்து அதில் அருகன்வேர், தேற்றான் விரை, செங்கழனி, நீர்க் கிழங்கு வகைக்குப் பலம் 4, அதிமதுரம், பூமி சக்கரைக் கிழங்கு விராகனிடை 1 இவைகளை பொடித்து ஆவின் பாலால் அரைத்துச் சேர்த்து அடுப்பேற்றிக் காச்சியிருத்து அதில் தேன் நாழி சக்கரை வாசிக்கலந்து நாளுக்கு 1 கரண்டி வீதம் சாப்பிட்டுவர மேற்கூறிய வியாதிகள் தீரும். இச்சா பத்தியம்.

## நீர்கடுப்புயெரிச்சலுக்கு.

சுருள்ளிச்சாறு நாழி அரிக்காலில் வெங்காரம் விராகனிடை 1 பொரித்துப்போட்டு 3-நாள் ஆறுவேளை சாப்பிட தீரும் இச்சாபத்தியம்.

## இதுவுமது.

இளநீரைக் கண்திறந்து அதில் சீரகம், சீனி, பாச்சிப் பயர் வகைக்கு விராகனிடை 1-ம்பாட்டு ஓரிரவு வைத்து காலையில் மருந்தை யெடுத்து அரைத்து இளநீரில் கரைத்துச் சாப்பிடவும் இந்தப்படி 3-நாள் ஆறுவேளை சாப்பிட மேற் கூறிய வியாதிகள் தீரும்.

## கல்லடைப்புக்கு

சங்கிலை யிருள்ளி பச்சைநெல்லும் இவைகளை ஓர் நிரை யாய் யிடித்துச் சாறு பிழிந்து நாளொன்றுக்கு கால்படியாக இருவேளையும் சாப்பிட கல்நீங்கி நீர் இரங்கும்.

## சதையடைப்புக்கு.

ஆவின் நெய் நாழி 1, மூக்குவெட்டிச் சுத்தி செய்த செங்கொட்டை 15-நரிக்கிப்போட்டுக் காச்சி கருப்பா வருகுர பதத்தில் இரக்கிவைத்துக்கொண்டு நாளொன்றுக்கு ஒருகா ஙியிடை வீதம் 5-நாள்சாப்பிட சதையடைப்புத்தீரும்.

## இதுவுமது.

பசலி நிலக்திரியிலை வகைக்குப்பலம்-10 இடித்துக்கியா ழஞ்செய்து கார்படி வீதங்கொள்ள தீரும்.

## மூந்திரகிரிச்சின நீர்கட்டுக்கு.

பாங்கிப்பட்டை கெந்தகம் சாதிக்காய் கிராம்பு சிருநாக ப்பூ சாதிப்பத்திரி பச்சை கற்பூரம் அசுவகேந்தி கொடிவேலி சடாமஞ்சில் இவைகளை ஓர் நிரையால் சூரணித்துச் இதற்கு சரியிடை சீனிகலந்து திருகடிகைப் பிரமாணம் ஆவின் நெய் யிற் கலந்து சாப்பிட தீரும்.

## நீரழிவிற்கு.

வெள்ளை குங்கல்லியம் கற்கண்டு வகைக்குப் பலம் 7 பொடித்துக்கொண்டு வேளை யொன்றுக்கு 1 பலம் வீதம் அரைபலம் நெல்லெண்ணெயில் மத்தித்து நாளொன்றுக்கு இருநேரமாக 7-நாள் சாப்பிட்டுவர நீரழிவு வெட்டை தீரும் இச்சாபத்தியம்.

## அரையாப்புக்கட்டி பத்து.

சவுக்காரம் சித்தண்ட வெள்ளை இவைகளை நீர் விட்டு அரைத்துப்பூசக் கரையும் கரையாவிட்டால் அதின் மேல் புளியும் சோரங்கொட்டையும் சேர்த்து அடைதட்டி வைத்துக்கட்டி 3நாள் கட்டவும் இதுபோல் புளியும் கால்பலம் வெள்ளைபாசாணமும் சேர்த்துக்கட்டலாம் கரையும்.

## அரையாப்புக்கு உள்ளுக்கு சாப்பிடும் எண்ணை.

பச்சைக்கொடிவேலி வேர்பட்டை பலம்8 தோல்நீக்கிய வெள்ளைப்பூண்டு பலம் 8, அரைத்து ஒருபடி நல்லெண்ணையிற்போட்டு ஒருபடி பொடுதலைச்சார் கூடவிட்டுக்காச்சி வெள்ளைப்பூண்டு பொன்னிறமாய் வருகிற சமயத்தில் இறைக்கி வைத்துகொண்டு நாளொன்றுக்கு ஒரு கரண்டி கடுகுமாய் சாப்பிடத்தீரும் உப்பு புளி தள்ளி பத்தியமாயிருக்கவும்.

## அரையாப்பு முதலான ரெணங்களுக்குகளிப்பு.

லிங்கம் மிதார்சிங்கு ரசகற்பூரம் வெள்ளை குங்கிலியம் கடுக்காய் மாசிக்காய் காசுக்கட்டி தான்றிக்காய் இவைகளை யோர் நிரையாய் பொடித்து பசும் வெண்ணையா லரைத்து தண்ணீரில் ஒருநாள் மெதக்கப்போட்டு ரெணங்களில்போட ஆரும்.

## ஈளை இருமலுக்கு.

கற்கடகசிங்கி திரிகடுகு திரிபலை அரத்தை கண்டங்கத்திரிவேர் இவைகளை யோர்நிரையாய் பொடித்து திரிகடிகையளவு வெண்ணீரிலாவது தேனிலாவது சாப்பிட யீளை யிருமல் தீரும் இச்சாபத்தியம்.

## இதுவுமது.

ஆடாதோடையிலையை யிடித்து பிட்டு வைத்து அறிக்காற்படி சாறு பிழிந்து அதில் திரிகடுகு திப்பிலி பொடித்து

வஸ்திரகாயஞ்செய்து தாவி சாப்பிட மேற்கண்ட வியாதிகள் தீரும்.

## வாதத்திற்கு.

மிளகு போடுதலைக்கொழுந்து இவை ரெண்டும் ஓர் நிறையாய் நிறுத்து வேளைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு சாப்பிட வாதநோய் தீரும்.

## காச ரோகத்திற்கு

சத்திச்சாரணைக்கிழங்கு, சாதாவேரிக் கிழங்கு, சீந்திற் கொடி, ஆடாதோடை, தூதுவேளை, பிரமி, அமுக்குறாம், வகைக்குப்பலம் 1, இடித்து ஆறுபடி தண்ணீரில் போட்டு ஒருபடியாய் வற்றவைத்து வடித்து அதில் நல்லெண்ணை படி கூடவிட்டு மிளகு, இந்துப்பு, சுக்கு, திப்பிலி, கடுக்காய், நற்சீரகம், கற்கடகச்சிங்கி, ஏலம், கிராம்பு, வெள்ளுள்ளி, கடுகுரோகணி வகைக்குக்கழஞ்சி 3 அரைத்துப்போட்டுக் காச்சி வடித்து உள்ளுக்குச் சாப்பிட்டுவர ஸ்தானம் செய்துவர காசரோகம் தீரும் இச்சாபத்தியம்.

## சுவாசகாசத்திற்கு.

தாளகம், லிங்கம், மனோசிலை, வெங்காரம், திரிகடுகு, நாவிற்கிழங்கு, வகைக்கு விராகனிடை 2, இவைகளை சுத்தி செய்து யிஞ்சிச்சாற்றால் 3 - ஜாமம் அரைத்து வைத்துக் கொண்டு சிற்றரத்தை இவைகளின் கியாழத்திலிட சுவாச காசம், க்ஷயம், கபம் சுரந்தீரும்.

## சேத்தும வெள்ளைக்கு.

வெங்காரம் கழஞ்சிவிடை நிறுத்தெடுத்து அதைநெருப்பிலிட்டுப் பொரித்து வைத்துக்கொண்டு ஏழு நாளைக்கு அதை பகுத்துச் சாப்பிட்டுவர சேத்தும வெள்ளைத் தீரும் இச்சாபத்தியம்.

## விக்கலுக்கு.

| | | |
|---|---|---|
| திப்பிலி | பலம் | 1 |
| சீரகம் | ,, | 2 |

இவை இரண்டு தினுசும் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொண்டு விக்கல் கண்டபோது ஒரு சிட்டிக்கை யெடுத்து தேனில் குழைத்துண்ண விக்கல்தீரும்.

## வயற்றுக் கடுப்புக்கு.

| | | |
|---|---|---|
| ஆலன்விழுது துளிர் | பலம் | 1 |
| எருமை தயிர் | பலம் | 1 |
| பழஞ்சார் | பலம் | 1 |

இவை மூன்றும் சேர்த்து கலந்துக்கொடுக்க வயற்றுக் கடுப்பு தீரும் இச்சாபத்தியம்

## சொரிக்கு.

| | | |
|---|---|---|
| பூவரசன் பட்டை | பலம் | 1 |
| நீராகரத்தில் | ஆழாக்கு | 1 |

இவை ரெண்டு தினுசும் அரைத்து மூன்றுநாள் கொண்டில் உடம்பிலுள்ள சொரி சிரங்கு நீங்கும் பத்தியமில்லை.

## இருமலுக்கு கியாழம்.

ஈயத்தண்டியிலை, தூதுளன்யிலை, நர்ச்சங்கு, திப்பிலி, சுக்கு இவை 5 தினுசும் நீரிர்ப்போட்டு காய்ச்சி சாப்பிட இருமல் தீரும்.

## இரவிற்காணும் சுரத்திற்கு கியாழம்.

பேருமுட்டி, விஷ்ணுக்கரந்தை, பாலைப்பேய்ப்பாகல், சொற்றி நாகமல்லிகை, சிற்றுமுட்டி இவைகளின் வேரும், கடுகுரோகணி, சுக்கு இவைகள் வகைக்குப்பலம் கால், வீதம்

யெடுத்துச் சிதைத்து இரண்டுபடி சலத்திற்போட்டு அரைக்கால் படியாய் வற்றவைத்து 9-பொழுதுக்கொடுக்கத் தீரும் பத்தியமில்லை.

## இதுவுமது வேர்க்கியாழம்.

திப்பிலி, மருட்கிழங்கு, சுக்கு, நிலவேம்பு, கடுகுரோகணி நெல்லி, பேய்ப்புடலன், பாவட்டைவேர் இவைகளை ஓர் நிறையாக யெடுத்து மேற்கூறியபடி கியாழஞ் செய்து 9-வேளை சாப்பிட தீரும்

## நளிர்காச்சல் நடுக்கல் காச்சலுக்கும் கியாழம்

மிளகை கியாழஞ் செய்து சாப்பிட்டாலும் சாப்பிடலாம் அல்லது தேவதாரம், பர்ப்பாடகம், கடுக்காய் சுக்கு, சுண்டங்கத்திரி, கோஷ்டம், குமிழிவேர், சிறுதேக்கு, இவைகள் வகைக்கு ஒருபலம்வீதம் யெடுத்துப்பொடித்து இரண்டுபடி தண்ணீரில் போட்டு எட்டொன்ருய் வற்றக்காய்ச்சிக் கொடுக்கத்தீரும் பத்தியமில்லை.

## தாபசுரம் நாவரட்சிக்கு கியாழம்.

வில்வவேர், விலாமிச்சம்வேர், நெரிஞ்சல்வேர், நன்னரி, அதிமதுரம், சோம்பு, விலாவரிசி, முத்தக்காசு, நெற்பொரி, முந்திரிப்பழம், நெல்லிமுள்ளி, இலுப்பப்பூ, இவைகளைச் சமமாகச் சேர்த்து சுக்கு விராகனிடை 3-கூடச் சேர்த்து இவைகளை சிதைத்து கியாழஞ்செய்துகொடுக்கத் தீரும்.

## சளிக்காச்சல் மந்தத்திற்குக் கியாழம்.

நெர்ப்பொரி, வருத்தப் பாச்சிப்பயர், பர்ப்பாடம், பெரும் பூசினிவேர், வில்வவேர், வகைக்குக் கழஞ்சு 10 - யெடுத்து யிடித்து இரண்டுபடி தண்ணீரில் போட்டு கியாழஞ் செய்து கொடுக்கத் தீரும் தாகம் அதிகமாக யிருந்தால் கால் பலம் அதிமதுரத்தைக் கூட்டிக் காச்சிக்கொடுக்க நீங்கும்.

## சுலுக்குக் காச்சலுக்கு.

கொத்தமல்லி, திரிகடுகு, பேருமுட்டி வகைக்கு கழஞ்சு 3-யெடுத்து யிடித்து நாழிநீரிர் போட்டுக் காற்படியாய் வற்ற வைத்து இந்தப்படி மூன்று நாள் கொடுக்கத்தீரும்.

## அதிசாரக் காச்சலுக்கு கியாழம்.

பங்கம்பாளை உலர்ந்த யிஞ்சி முத்தக்காசு சிருகாஞ்சொரிவேர் இவைகளை ஓர்நிறையாக யெடுத்து யிடித்து ஒரு படி தண்ணீரில் போட்டு யெட்டொன்ருய் வற்றக்காச்சிக் கொடுக்கத்தீரும்.

## இதுவுமது

மாம்பட்டை அதிவிடையம் மூதியார்க்கூந்தல் உலர்ந்த யிஞ்சிமுத்தக்காசு இவைகளை வேளை யொன்றில் கால் பலம் வீதம் சிதைத்தும் ஒரு நாழிநீரிர்ப்போட்டு அரைக்கால் நாழியாய் வற்றவைத்து யிலவன்பிசின் விராகனிடை கால், தூள் செய்துபோட்டுக் கொடுக்க தீரும்.

## குளிர் காச்சலுக்கு கியாழம்.

கோஷ்டம், திப்பிலி, கண்டங்கத்திரி, சிருதேக்கு நீலக்குடிநீழ் உலர்ந்த யிஞ்சி நிலவேம்பு மூத்தக்காசு, சிருகாஞ்சொரி சீந்திர் பர்ப்பாடகம், இவைகள் வகைக்குப் பலம் காலே யெடுத்து யிடித்து இரண்டு நாழி சலத்திற்போட்டு அரைக்கால்படியாய் வற்றக்காச்சி ஆறுவேளை கொடுக்கத் தீரும்.

## விடாகுளிர் சுரத்திற்கு கியாழம்.

கரிப்பான்பிடி 1, வேப்பீர்க்குப்பிடி 1, யெடுத்து மூன்ருய் நரிக்கி காய்ந்த சட்டியில் போட்டுப் பொன்னிறமாக

வெதுப்பி அதில் ஒருபிடி மிளகைப்போட்டு வருத்து வெள் ளுள்ளி ஒருபூண்டைக் கிள்ளிப்போட்டு கரிப்பானிலை நொச் சிலையிலை வகைக்கொரு கொட்டைப்பாக்களவு அரைத்துப் போட்டு ஒருபடி நீர் விட்டுக் காய்ச்சி கார்படியாய் வற்றக் காச்சி கொடுக்கவும். இந்தப்படி மூன்று நாள் ஆறு வேளை கொடுக்கத்தீரும்.

## மந்தாக்கினி வாய்விற்கு சூரணம்.

மேற்றோல் நீக்கின 8-பலம் இஞ்சியை சிருபில்லையாக நறுக்கி அதில் 15 - யெலுமிச்சம்பழம் பிழிந்து சூரியனில் வைத்து உலர்த்தி சரியிடை நெய்விட்டு வருத்து குகைநீர் பலம் 1, சீரகம் பலம் 2, சதுர்ச்சாதம் திரிசாதம் திரிகடுகு தாளிச்சபத்திரி குரோசானி ஓமம் வாய்விளகம் வகைக்குக் கழஞ்சு 3 இவைகளையிடித்து சூரணம்செய்து சீனி பலம் 3, கூட்டிக்கலந்து வேளையொன்றுக்கு திருகடிகைப் பிரமாணம் கொள்ளத்தீரும் இச்சாபத்தியம்.

## அக்கினி மந்தவாய்வு பொருமலுக்கு சூரணம்.

கண்டங்கத்திரி, முள்ளி யத்திச்சாரணை ஓமம், கொடி வேலி, திரிகடுகு, நவாச்சாரம், திரிபலை, பஞ்சலவணம் சத்திச் சாரம், சீரகம், கருஞ்சீரகம், இவைகளை வகைக்குப்பலம் கால் வீதம் பொடித்து இதற்குச்சரியிடை அசுலநேந்திச் சூரணங் கூட்டி தேனிலாவது இஞ்சி ரசத்திலாவது கொடுக்கத்தீரும்.

## பித்தவாய்வு உஷ்ணவாய்வு மந்தத்திற்கு கியாழம்.

தோல்நீக்கின இஞ்சி பலம் 49 யெடுத்து சட்டியிலிட்டு அடுப்பேற்றி அரைப்படி நெய் தெளித்து பொன்னிறமாய் வறுத்துச் சூரணித்துக்கொண்டு கடுகுரோகிணி, தேசாவரம், சுக்கு, சீரகம், வகைக்குப்பலம் முக்கால், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, நெல்லி முள்ளி வகைக்குப் பலம் அரை,

ஜாதிக்காய், அதிமதுரம், சிருநாகப்பூ, லவங்கம், தாளிச்சப் பத்திரி, குகைநீர் வகைக்குப்பலம் கால் இடித்து சூரணம் செய்துக்கொண்டு இருவகைச் சூரணத்தையும் ஒன்ருய்க் கலந்து சக்கரைபலம் 10 கூட்டி வேளை யொன்றுக்கும் திரு கடிகைப் பிரமாணம் சாப்பிடத்தீரும். இச்சாபத்தியம்.

## சகலவாய்விற்கும் பொதுப்பிரையோகக் கியாழம்

வேப்பீர்க்கு, மூர்க்கரை, சாரணைவேர், கருவேப்பீர்க்கு முருங்கை யீர்க்கு வகைக்கொருபிடி சுக்கு மஞ்சள் வகைக்கு விராகனிடை 3-இவைகளை சிதைத்து இரண்டுபடி சலத்தில் போட்டு அரைக்கால் படியாக வற்றவைத்து சாதம் சாப்பிட் டானபிறகு இக்கியாழத்தை சாப்பிட்டுவர சகல வாய்வும் தீரும்.

## வாதகுன்மத்திற்கு லேகியம்.

வில்வக்காய் பலம் 20, வில்வவேர் பலம் 15, இவைகளை யிடித்து நாலுமரக்கால் தண்ணீரில்போட்டு யெட்டொன்ருய் வற்றவைத்து அதில் 15-பலம் வெல்லங்கரைத்து வடிக்கட்டி பாகுசெய்து இஞ்சி பலம் 3, மிளகு பலம் 4, திப்பிலி, உள்ளி பலம் 2, மஞ்சள் அசமதாகம் வகைக்குப்பலம் 5, வெவ்வே ருக யிடித்து வடிக்கட்டி பாகில்தூவி பசுவின் நெய் படிகால் விட்டு லேக்கியஞ்செய்து நாழிக்கொரு யெலுமிச்சங்காய்ப் பிரமாணம் சாப்பிடத்தீரும் இச்சாபத்தியம்.

## பித்த குன்மத்திற்கு கியாழம்.

| | | |
|---|---|---|
| வில்வவேர் | பலம் | கால் |
| முல்லைவேர் | ,, | கால் |
| சுக்கு | ,, | கால் |
| ஏலம் | ,, | கால் |
| பாசிப்பயறு | ,, | கால் |
| நெல்லிப்பருப்பு | ,, | கால் |

இந்த ஆறு தினுசும் யெடுத்து யிடித்து ஒருபடி தண்ணீர் போட்டு அரைப்படியாய் வற்றக்காச்சி மூன்று நாள் ஆறு வேளை கொடுக்கத்தீரும் இச்சாபத்தியம்.

## பித்தம குன்மத்திற் சூரணம்.

சத்திச்சாரணை வேரை ஆவின் பாலால் அவித்து உலர்த்தி சூரணஞ் செய்து சீனிக்கலந்து வைத்துக்கொண்டு திரு கடிகைப் பிரமாணம் நெய்யிலாவது தேனிலாவது கொழைத்து சாப்பிடத்தீரும் பத்தியமில்லை.

## சிலேத்தும குன்மத்திற்கு சூரணம்.

| | | |
|---|---|---|
| திரிகடுகு | விராகனிடை | 6 |
| திருபலை | ,, | 6 |
| கல்லுப்பு | ,, | 6 |
| செவியம் | ,, | 6 |
| அரத்தை | ,, | 6 |
| ஏலம் | ,, | 6 |
| லவங்கப்பட்டை | ,, | 6 |
| கெந்தகம் | ,, | 6 |
| கண்டத்திப்பிலி | ,, | 6 |
| கருஞ்சீரகம் | ,, | 6 |
| சீனிக்காரம் | ,, | 6 |
| அக்கிராக்காரம் | ,, | 6 |
| கிராம்பு | ,, | 6 |
| இந்துப்பு | ,, | 6 |
| ஜாதிப்பத்திரி | ,, | 6 |
| அமுக்குராம்வேர் | ,, | 6 |
| கடுகுரோகணி | ,, | 3 |
| ஜாதிக்காய் | ,, | 3 |
| வெங்காரம் | ,, | 3 |
| நவாச்சாரம் | ,, | அரை |
| கல்மதம் | ,, | அரை |

இவைகளை வெதுப்பி பொடித்து அதில் கொம்புபெரண்டையைஅவித்து உலர்த்தி இடித்தசூரணம் விராகனிடை 6-கூட்டி இதற்கு நிகர்வல்லிச்சூரணமும் சீனிபலம் 5-சேர்த்து திரிகடிகைப் பிரமாணம் தேனில் குழைத்துச் சாப்பிட தீரும் இச்சாபத்தியம்.

## வலிகுன்மத்திற்கு நெய்.

அரைப்படி தேங்காய்ப்பாலில் இந்துப்பு பலம் 1, பூண்டு பலம் 1, சாரம் கழஞ்சு 2, பொடித்துப்போட்டு கள்ளிப்பால் கழஞ்சு 2 கூடவிட்டுக்காச்சி நெய்வடித்து வைத்துக்கொண்டு அதில் ஒருகரண்டிவிதம் சாப்பிட்டுவரத்தீரும் இச்சாபத்தியம்

## அக்கிக்கு மேல்பூசும் மருந்து.

ஊமத்தன்யிலையை அரைத்து யெருமை வெண்ணெயிர்க் குழைத்து அக்கிமேல் பூசிவரமாரும்.

## தீசுட்ட புண்ணுக்கு பூசும் மருந்து.

சுண்ணும்பு யெருக்கன்பூவும் ஓர்நிரையாக யெடுத்து அரைத்துப்பூச தீச்சுட்டக் காந்தல் நீங்கும் நீருலாத்தியிலையை அரைத்துப் பொடித்துப் புண்ணில்போட ஆரும் ஒரு சட்டியில் நீர்புளித்தத் தண்ணீர்விட்டு வேடுகட்டி திருவாத்தியிலையை யிடித்து அதின்மேல் வைத்து பிட்டவிழ்த்து புண்ணில் வைத்துக்கட்ட ஆரும்.

## பித்தவெடிப்பிற்கு மருந்து.

உப்பு செம்மரிச்சானி அரசன்பட்டை வகைக்கு பலம் 1, எருக்கன்பூ பலம் 3, இவைகளை யிடித்து வடித்து துணியில் முடிந்து ஒத்தணஞ்செய்து சீரகம் விராகனிடை 1, சுண்ணும்பு விராகனிடை 3, திருசு விராகனிடை 5, இவைகளை எருமை வெண்ணெயில் களிப்புபோல் அரைத்து வெடிப்பிற் போட்டுவர தீரும்.

## கிராணி கடுப்பிற்கு அமிர்தாதியுண்டை.

கோரோசனை, சண்பகப்பூ, கோஷ்டம், வெட்டிவேர், ஏலம், அதிமதுரம், சாஸ்திரபேதி, பாசிப்பச்சை, தான்றிக் காய் வகைக்கு விராகனிடை 2, யெடுத்து வெட்டிவேர் கியாழத்திலும் முலைப்பாலிலும் அரைத்து உண்டைசெய்து மேற்படி பாலில் கொடுக்க மேற்படி கடுப்பு, மாந்தம், ஜன்னி, கழிச்சல்பிரளி, குடல் பிரட்டல், வாத பித்த சுரம், ஊஷ்ணம் நீங்கிவிடும் இச்சாபத்தியம்.

## கீழ்மூலத்திற்கு கியாழம்.

சென்னுயுருவியிலை ஒரு பிடி, நல்லெண்ணை கால்படி, கற்றாழஞ்சோறு சக்கரை இவையெல்லாம் ஒன்ருய்க் கலந்து காச்சிக் கொடுக்கத்தீரும் இச்சாபத்தியம்.

## ஊதுகாமாலைக்கு.

சிட்டம் அரைப்பொடி வெள்ளைப்பூண்டு முருங்கயிலை கரிப்பான்முத்தின தேங்காய்ப் பருப்பு இவைகளை சமமாக யெடுத்து இளநீர் விட்டு அரைத்து அரைகழஞ்சு வீதம் இரண்டு நேரம் அரை யாழாக்கு நீர்முள்ளிக் கியாழத்தில் கலந்துகொடுக்க தீரும் இச்சாபத்தியம்.

## மஞ்சல்காமாலைக்கு மாத்திரை.

அதிமதுரம் சங்கம்வேர்பட்டை இவை ரெண்டும் ஓர் நிறையாய் யெடுத்து யெலுமிச்சம்பழம் சார்விட்டு அரைத்து இந்தபடி மூன்று நாள் அரைத்து தேற்ருன் விரைப் பிரமாணம் உண்டைசெய்து வைத்துக்கொள்ளவும் முலைப்பாலிலாவது ஆவின் பாலிலாவது மூன்று நாள் கொடுக்கத்தீரும்.

## நடுக்கல் வாந்தி அஜீரணத்திற்கு கியாழம்.

அசமதாகம், காடிச்சோறு, வசம்பு, நுணாயிலை, மிளகு பலம் வீதம்பொடித்து தண்ணீரில் போட்டுகாய்ச்சி சங்கு அளவுக்கொடுக்கத் தீரும்.

## வாந்திக்கு மருந்து.

கலைமான் கொம்பு, திப்பிலி, அதிவிடையம் இவைகளை சமனாக யெடுத்துப் பொடித்து கடிகைப் பிரமாணம் தேனில் குழைத்துக் கொடுக்கத் தீரும்.

## வாந்தி வோக்காளத்திற்கு கியாழம்.

வசம்பு, மிளகும், பஸ்பம் செய்து காடிச்சோறு கூட்டி கியாழஞ் செய்து சங்களவுக் கொடுக்கத்தீரும் மிரினால் நன்னாரி வேர்ப்பட்டையைக் கொட்டப்பாக்குப் பிரமாணம் மேற்படி கியாழத்தில் அரைத்துக்கொடுக்கத்தீரும்.

## பல்லில் ரத்தம் விழுதலுக்கு.

பச்சை நன்னாரிவேரை வெண்ணீர்விட்டுக் கொட்டைப் பாக்களவு அரைத்து வென்னீரில் கலக்கிக்கொடுக்க நீங்கும்.

## பீனிசத்திற்கு தைலம் திரியும்

கையாந்தகரை ஆதண்டை குரட்டைப்பழம் வெற்றிலை நெல்லிக்காய் எலுமிச்சம்பழம் முசுமுசுக்கை முடக்கொத்தான் இவைகளின் சாறு வகைக்குப்படி கால், நெல்லெண்ணை படி 1, ஒன்ராய் கலந்து அதில் மிளகு பலம் கால், அதிமதுரம், கோஷ்டம், சண்பகப்பூ, நர்ச்சிரகம், வாய்விளங்கம், கொத்தமல்லி, வால்மிளகு, கஸ்தூரி மஞ்சள், ஏலம், லவங்கம், தாளிச்சபத்திரி, லவங்கப்பட்டை வகைக்கு விராகனிடை 5, கோரோசனை விராகனிடை 1, இவைகளை பொடித்துப்போட்டுக் காய்ச்சி பதமாக யிருத்து மூன்று நாளைக்கு ஒருதபா முழுகியும், மிளகை கொட்டைப்பாக்கு பிரமாணம் வெற்றிலைச் சாற்றாலரைத்து வெள்ளை துணியில்தடவி அப்பால் குரட்டைப்பழஞ் சாற்றால் யிந்த துணியை 8-தபா நனைத்து நிழலுலர்த்தித் திரித்துக கொளுத்தி அதில்வரும் புகையை நாசியில் விடதீரும்.

## கபாலவலி பீனிசத்திற்கு தைலம்.

ஆதண்டை செங்கொன்றை சடைக்கஞ்சாதைவேளை வெற்றிலை குரட்டைப்பழம், பச்சை மஞ்சள் இஞ்சி முசு முசுக்கை கஞ்சாங்கோரை இவைகளின் சாறுவகைக்கு படி 1, நல்லெண்ணெபடி 2, இவைகளை ஒன்றாய்க்கலந்து அதின் யெட்டிக்கொழுந்து, சதைக்குப்பை, சுக்கு, வசம்பு, உள்ளி தேவதாரம், அரத்தை, கடுக்காய், வகைக்குக் கழஞ்சி 2 வீதம் கொச்சிச்சாற்றில் அரைத்துப்போட்டுக் காய்ச்சி பதத்தில் யிரைக்கி வடித்து முழுகிவர தீரும்.

## மேகச்சூட்டிற்கு தைலம்.

சவுரிபழஞ்சாரு, நல்லெண்ணெ பொடுதலைச்சாறு ஆவின் பால் இவைகள் வகைக்குப்படி 1 ஒன்றாய்க்கலந்து அதில் ஒரு பலம் மிளகை மேற்படி பாலில் அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து ஸ்தானஞ் செய்துவர தீரும்.

## சிரசில் நீரேற்றம் மண்டையிடிக்கு தைலம்.

நல்லெண்ணெபடி 1, பசுமஞ்சட்சாறு, ஆதண்டச்சாறு, ஆவின் தயிர், தண்ணீர் வகைக்குப்படி கால், ஒன்றாய்க் கலந்து அதில் குருந்தொட்டி முள்ளி சுண்டை வேளை கீழ் காய் நெல்லி இவைகளின் வேர் கோஷ்டம் தேவதாரம் மிளகு சுக்கு வகைக்குக் கழஞ்சு 2 குக்கில் கழஞ்சு அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து முழுகிவரத் தீரும் அன்று பகல் நித்திரை நீக்கவும்.

ஊர்வசி வயித்திய சிட்கா

முற்றிற்று.

